# சக்ரா கோல்ட் டீ
# தங்கமான எதிர்காலம் சலுகை

## வெல்லுங்கள்



**40**

கம்ப்யூட்டர்கள் அல்லது
24 காரட் தங்கக் காசுகள்

**1**

சக்ரா கோல்ட் டீ வாங்குங்கள், ஒரு விசேஷ பாக்கெட் காலண்டர் இலவசமாகப்* பெறுங்கள்! அத்துடன் ஒரு நுழைவுத்தாளும்.

**2**

இங்கு காண்பிக்கப்பட்டுள்ளது போல பேக்கின் பகுதியை கத்தரித்து ஒட்டுங்கள்

**3**

நுழைவுத்தாளை உங்கள் அருகிலுள்ள கலெக்க்ஷன் பெட்டியில் இடுங்கள், அல்லது திருமதி உமா மாதவன், சக்ரா கோல்ட் டீ, த.பெ.எண் 2279, பெங்களூர் - 560 022 என்ற விலாசத்துக்கு அஞ்சலில் அனுப்புங்கள்.

CHAKRA GOLD TEA
RS. 1000

**1000**

ஸ்காலர்ஷிப்புக
ஒவ்வொன்றும்
ரூ.1000 மதிப்பு

Contents: Tea
TATA TEA LIMITED
1, Bishop Lefroy Road,
Calcutta 700 020
BEST BEFORE WITH 12 MONTHS FROM THE DATE OF PACKAGING
Net weight 100g
M.R.P. Rs. 19.50
Incl. of all taxes
Packed 01/2001
Code No. : A

CHAKRA GOLD TEA
GOLDEN TASTE

உங்கள் குடும்பத்துக்காக, உங்கள் குழந்தைகளின் நலனுக்காக நீங்கள் எத்தனை பாடுபடுகிறீர்களென்பதை நன்கு உணர்ந்தவர்கள் நாங்கள். எங்கள் பாராட்டை உங்களுக்கு தெரிவிக்கும் வகையில் இதோ **சக்ரா கோல்ட் வழங்கும் தங்கமான எதிர்காலம் என்னும் ஒரு பிரத்தியேக சலுகைத் திட்டம்!** மேற்கண்ட மூன்று குறிப்புகளைப் பின்பற்றுங்கள், உங்கள் குழந்தையின் எதிர்காலத்தை வளமானதாக்குங்கள். (*காலண்டர் சலுகை ஸ்டாக் உள்ளவரையே. விதிகளுக்கு உட்பட்டது)

இச்சலுகை பிப்ரவரி 28 வரை மட்டுமே

டாடாவின்
**சக்ரா கோல்ட் டீ**
தங்கமான ருசி



# பழைய சோறு! பிட்சா! பட்டினத்தார்! லான்சர்!

ரீச்சர்ட்!

**கதிரின் 'காதல் வைரஸ்' படத்தில் லவ்-இன் ஃபெக்‌ஷனுக்கு ஆளாகப் போகும் (ஆரம்பித்து வைக்கப் போகும் (?)) ஹீரோ! அவரோடு கொஞ்சம் அரட்டை.**

**தங்கைகளுக்குப் பிறகு லேட்டாக நடிக்க வந்திருக்கிறீர்களே?**

எல்லாம் 'அவன் செயல்! (பட்டினத்தார் கணக்கில் கையை மேலே உயர்த்துகிறார்!)

**தத்துவமா?**

நிதானம்!

**சினிமா சபலம் எப்படி?**

லயோலாவில் சோஷியாலஜி பண்ணும்போது ராம்கோ சிமெண்ட்டுக்கு மாடலிங் பண்ண சான்ஸ் கிடைச்சது. விளம்பரத்தைப் பார்த்து டீன்-ஏஜ் ரசிகர், ரசிகைகளிடமிருந்து எக்கச்சக்கமான லெட்டர்ஸ். அட... விஷுவல் மீடியாவுக்கு இவ்வளவு சக்தியான்னு பிரமிச்சுப் போயிட்டேன். சபலம் ஆரம்பிச்சதும் அப்போதான்.

**ஷாலினியின் அண்ணன் என்று சொல்லிக் கொள்வதில் பெருமையா?**

நிச்சயம், ஆனா அவங்க புகழ்ல பங்கு போட்டுக்கறது நியாயமில்லை. என்னோட சொந்தக் காலில் நின்னு ரசிகர்களோட அன்பை சம்பாதிக்கப்போறேன். தயவு செஞ்சு இதை 'ஈகோ'ன்னு மிஸ்டேக் பண்ணிக்காதீங்க.

**சமீபத்தில் குஷிப்படுத்திய விஷயம்...**

அப்பா வாங்கித் தந்திருக்கும் லான்சர் கார்!

**லாங்-டர்ம் பிளான்...**

கோர்ஸ் படிக்கும்போது சோஷியல் - வர்க் கேம்ப்புகளில் தங்கி கிராமத்து மனிதர்களை 'க்ளோஸ்'ஆ கவனிச்சிருக்கேன். பழைய சோற்றைக்கூட எவ்வளவு ஆர்வமாய் பிட்ஸா மாதிரி ரசிச்சு சாப்பிடுறாங்க? ப்பா... அவங்க கிட்ட இருகிற அன்பும், 'ஃபிரெண்ட்ஷிப்'பும் ரொம்பவே நாச்சுரல். என்னுடைய ரிடையர்டு - லைஃப் அங்கேதான்!

**அதுக்கு ரொம்ப நாள் இருக்குங்கோவ்!**

**- சக்கரம்**



# ஓர் இனிய ஆரம்பம்!

ஏ.சி. காந்தா



**பி**.டி.சி. பஸ்ஸில் பயணம். அதிர்ஷ்டவசமாக ஜன்னல் ஓர சீட் கிடைத்தது. சாலையை ஒரு நோட்டம் விட்டேன். வண்ண வண்ண டூ வீலர்களில் பட்டாம்பூச்சிகளாய்ப் பெண்கள் சிட்டாய்ப் பறந்தனர். அவர்களைப் பார்க்கப் பார்க்க பரவசமாய் இருந்தது. காரணம் என் நீண்டநாள் ஆசையை நிறைவேற்றுவதாக இன்றுதான் என் கணவர் சத்தியப் பிரமாணம் எடுத்துக்கொண்டிருந்தார் - என் தொந்தரவு தாளாமல் வரும் ஞாயிறு எனக்கு டூ வீலர் ஓட்டக் கற்றுத் தருவதாக அறிவித்திருந்தார்.

**ஞா**யிறு காலை, பொழுது குதூகலத்துடன் உதயமானது. வீட்டு வேலை, சமையல் எல்லாம் வழக்கத்திற்கு மாறாக துரிதமாக நடைபெற்றன. என் கணவருடைய நண்பரின் டிவிஎஸ் 50 வண்டியை நேற்று மாலையே முன்னேற்பாடாக கொண்டு வந்து நிறுத்தியாகிவிட்டது. டிவிஎஸ் 50 அரதப் பழசுதான், ஆனாலும் அதாவது கிடைத்ததே! ஆனால் குடும்பத்தின் பல டீன் - ஏஜர்களுக்கு வண்டி ஓட்டச் சொல்லிக் கொடுத்த அனுபவமிக்க வாத்தியார் இன்றுதான் முதல் முறையாக முதியோர் கல்வி கற்பிக்கும் அனுபவம் பெறப் போகிறார்.

சுகமான காலை தூக்கத்தைத் தியாகம் செய்துவிட்டு என் கணவர் எனக்கு கிளாஸ் எடுக்கத் தயாரானார். பிள்ளைகளுக்கு மகிழ்ச்சி. படிப்பிலிருந்து விடுதலை. பாட்டி வீட்டில் கொண்டாட்டம்.

வண்டியை ஸ்டார்ட் செய்து சிறிது தூரம் சென்றவுடன் ஆஃப் ஆகிவிட்டது. ஆரம்பமே சரியில்லையே என்று மனம் அங்கலாய்த்தது. பார்த்தால் பெட்ரோல் இல்லை. பாவி மனிதர் இப்படியா ஒட்ட ஒட்ட காலி செய்து விட்டிருப்பார். பெட்ரோல் பங்க் வரை தள்ளு மாடல் வண்டி!

பிறகு அருகிலுள்ள டிராபிக் அதிகமில்லாத ஓரிடத்திற்குப் பயணம். வண்டியை உதைத்து ஸ்டார்ட் செய்து பார்க்கச் சொன்னார். மிகுந்த உற்சாகத்துடன் ஓர் உதை. வலது கால் செருப்பு அறுந்து தொங்கியது. ஆனால் வண்டி ஸ்டார்ட் ஆகிவிட்டது. என் முகத்தில் அசடு கலந்த பூரிப்பு. முதல் உதையிலேயே ஸ்டார்ட் ஆகிவிட்டதே! செருப்பு ஸைடு பாக்ஸில் தஞ்சம் அடைந்தது.

ஆறாம் வகுப்பு படிக்கும்போது சைக்கிள் ஓட்டிப் பழகியிருக்கிறேன். அதனால் பாலன்ஸிங் ஒன்றும் பிரச்னை இல்லை என்று நான் என்றோ கூறியதை நம்பி என் கணவர் என்னைத் தனியே அமர்ந்து ஓட்டச் சொன்னார். சிறிது தூரம் சென்றவுடன் ஒரு குழியைத் தவிர்க்க எண்ணி ஒரு பக்கமாகச் சரிந்தோம், வண்டியும் நானும். என் பாலன்ஸிங் லட்சணம் வெட்ட வெளிச்சம்! கால் முட்டியில் சிராய்ப்பு. என் கணவர் பி.டி. உஷா வேகத்தில் வந்து என்னையும் வண்டியையும் தூக்கி நிறுத்தி, பாட்டில் தண்ணீரைக் குடிக்கச் செய்து ஆசுவாசப்படுத்தினார். வண்டியின் பின் சீட்டில் அமர்ந்து சொல்லித் தருகிறேன் என்று என் கணவர் கூறியதும் கால்வலியின் சோகத்தை மறந்து தலையாட்டினேன். நான்கு ஐந்து சுற்று வந்தோம் ஜோடியாக. கள்ளிக்கட்டைத் தலையில் ஏந்தி எங்கிருந்தோ வந்தாள் அந்தக் கிழவி. என் கணவரின் சாதுர்யம் அவள் பரலோகம் செல்வதைத் தடுத்தது. அந்த அதிர்ச்சியால் படபடத்த இதயம் அடங்க சில நிமிடங்கள் ஆனது. சிறிது மரத்தடி ஓய்விற்குப் பிறகு மீண்டும் ஓட்டம். மீண்டும் ஒரு வில்லன், சைக்கிள் ஓட்டிய பொடியன் உருவில். என்னுடன் கண்ணாமூச்சி விளையாடி மறைந்தான்.

மனம் அயரவில்லை. ஆனால் உடல் அயர்ந்தது. பசி வயிற்றைக் கிள்ளியது. மணி இரண்டு. அடுத்த ஞாயிறு பயிற்சியைத் தொடரலாம் என்ற என் கணவரின் வார்த்தைகள் காதில் தேனாகப் பாய்ந்தன.

**எ**ன் டூ வீலர் பயிற்சியின் இனிய ஆரம்பம் இது. இன்று நானும் பல பெண்களால் ஆசை கலந்த பொறுமையுடன் பார்க்கப்படுபவள். என்னுடைய கார்மேக வண்ண கைனட்டிக் ஹோண்டாவில் சிட்டாய்ப் பறப்பவள். ⭘






# சீயூ…

சென்னை விமான நிலையம். ஏதோ ஒரு விஐபியை வரவேற்க வந்தது மாதிரி மாலையும் கையுமாக ஒரு குடும்பம் பரபரத்துக் கொண்டிருந்தது. அடுத்த சில நிமிடங்களில் விமான நிலையத்தினுள் இருக்கும் எஸ்கலேட்டரில் இறங்கி வரும் அந்த வாலிபரைப் பார்த்ததும் கையசைத்து, துள்ளிக் குதித்து, ஓடிப்போய் மாலை போட்டு, கட்டிப் பிடித்து, மகிழ்ச்சி சிந்தி… யாரந்த வாலிபர்?

அட… நம்ம வித்யுத் சிவராமகிருஷ்ணன்!

பத்தொன்பது வயதுக்குட்பட்டோருக்கான கிரிக்கெட் போட்டியில் இங்கிலாந்து அணிக்கெதிராக எட்டு விக்கெட் எடுத்து, இந்திய அணியை வெற்றிபெறச் செய்து ஊருக்குத் திரும்பும்போதுதான் இந்த வரவேற்பு!

"நான் ஆபிஸ்ல இருந்தேன், ஃபோன்ல தகவல் வந்தது; மனசுக்குள்ள மகிழ்ச்சி ததும்பல். உற்சாகமாயிட்டேன். அதான் குடும்பத்தோட ஏர்போர்ட்டுக்கு வந்து…" என்கிறார் வித்யுத்தின் அம்மா ஹஸ்தா சிவராமகிருஷ்ணன்.

இப்படியொரு அமர்க்களமான வரவேற்புடன் வந்திறங்கியிருக்கும் அவரை மயிலாப்பூரிலுள்ள வீட்டில் சந்தித்தோம். மேற்கிந்தியத் தீவுகள்–ஜிம்பாப்வே அணிகளுக்கிடையேயான கிரிக்கெட் போட்டியை 'இஎஸ்பிஎன்'னில் பார்த்துக் கொண்டே பேசினார்.

"இங்கிலாந்துக்கெதிரான நான்காவது நாள் ஆட்டம். அவங்க நூற்றி அறுபத்தியோரு ரன்னுக்கு ஒரு விக்கெட். நாம ஜெயிப்போமான்னு சந்தேகம் வந்துட்டுது. பயிற்சியாளர் ரோஜர் பின்னி சார் வந்து, ஒரு ஐந்து ஓவர் 'டைட்'டா போடுங்க, அப்புறம் விக்கெட் விழுந்துடும்னு நம்பிக்கையா சொன்னாரு. அதுதான் நடந்தது. அடுத்த எட்டு விக்கெட்டும் எனக்கே கிடைச்சு

நூற்றி எண்பத்தேழு ரன்ல ஆல் அவுட்! ரொம்ப சந்தோஷமா இருந்தது'' என்று சொல்லும் இவர் குருநானக் கல்லூரியில் பி.ஏ. இரண்டாம் ஆண்டு படித்து வருகிறார்.

இவரது தந்தை சிவராமகிருஷ்ணன் இந்திய அணியின் முன்னாள் ஓபனிங் பேட்ஸ்மேன்.

"அப்படின்னா அப்பாதான் இரிக்கெட்டுக்கு அழைச்சிட்டு வந்தாரா?"

"ம்ஹூம்... எனக்குக் கிரிக்கெட்ல விருப்பம் இருந்தது. பைத்தியம் இருந்தது. சின்ன வயசுலேயே மட்டையைத் தூக்கிட்டு அலைவேன். என்னோட இன்ட்ரஸ்டைப் பார்த்து அப்பா ஊக்கப்படுத்தினாரு. அவர் ஒரு கிரிக்கெட்டர்ங்கறதால எங்க தப்பு பண்றோம் எங்க சரியா பண்றோம்ங்கறதை ஈஸியா தெரிஞ்சுக்க முடிஞ்சுது" என்றவர், டி.வி.யில் மேற்கிந்தியத் தீவு அணியின் விக்கெட் கீப்பர் ஜேக்கப் ஹிட் விக்கெட்டில் அவுட்டானதைப் பார்த்து ஒரு

# ரீயூ..!

நிமிடம், 'அச்சச்சோ...' கொட்டிவிட்டு நம் பக்கம் திரும்பினார்.

"பத்தொன்பது வயதுக்குட்பட்டோருக்கான உலகக் கோப்பை போட்டியில் கலந்துகிட்ட இந்திய அணியில் நானும் ஒருத்தன். இதுல செலக்ட் ஆறதுக்குக் கடும் போட்டி. என்னோட ஆட்டத்தைப் பார்த்துட்டுத் தேர்வு பண்ணினாங்க. உலக கோப்பையை வென்றோம்னாலும் அதுல நான் பெரிசா ஒன்னும் பண்ணலை; அது மனசுக்குள் உறுத்திக்கிட்டே இருந்தது. அதிக நேரம் ப்ராக்டிஸ் பண்ணினேன். ஹார்டு ஒர்க்தான். அதுக்கான பலன்தான் இந்த எட்டு விக்கெட்!"

"ஜூனியர் உலகக் கோப்பையில் உங்களோடு பங்கேற்ற யுவராஜ்சிங், ரீதிந்தர் சிங் ஜோதி ஆகியோர் இந்திய அணியில் இடம்



பிடித்து விட்டார்களே...?"

"ஆமா... அவங்க என்னோட ஃபிரண்ட்ஸ்தான். நல்லா பண்ணினாங்க. எனக்கும் இந்திய அணியில் இடம் கிடைக்கும்னு நம்பிக்கை இருக்கு. இப்ப ரஞ்சி போட்டியில் கூட நான் நல்லா பண்ணியிருக்கேன். இங்கிலாந்துக்கெதிரானப் போட்டியில் பேட்டிங்லயும் என் திறமையைக் காண்பிச்சிருக்கேன். கண்டிப்பா சான்ஸ் கிடைக்கும்."

பௌலிங்கில்தான் இவர் அதிக கவனம் செலுத்துகிறார் என்றாலும் ஒரு பக்கா ஆல் ரவுண்டர் ஆக வேண்டுமென்பதுதான் இவரது ஆசையாம்.

சச்சின், டிராவிட், ராபின்சிங், ஸ்டீவ் வாஹ் இவர்களெல்லாம் வித்யுத்திற்குப் பிடித்த பேட்ஸ்மேன்கள்.

"சச்சினுக்கு 'நெட்'ல பலமுறை நான் பௌல் பண்ணியிருக்கேன். டிராவிட்டுக்கும் கூட. இந்தியா சிமெண்ட்ஸுக்கு டிராவிட் ஆட வருவார். அங்கேதான் அவருக்கு பௌல் பண்ணியிருக்கேன். அவர் ஒரு ஜெண்டில்மேன். நிறைய நுணுக்கங்களைச் சொல்லித் தருவார். கிரிக்கெட்டைப் பத்தி அவர் பேச ஆரம்பித்தால் பேசிக்கிட்டே இருப்பார்" என்று



• அண்ணன் நிகில், அம்மா, அப்பாவுடன் வித்யுத்

'டிராவிட் புகழ்'பாடும் இவருக்கு நண்பர்கள் வட்டாரத்தில் ஒரு செல்லப்பெயர் இருக்கிறது.

"சீயூ....சீயூ...."என்பதுதான் அது.

"அதென்ன சீயூ? என்றால், "சீயூன்னா சீயூதான்" என்கிறார் இந்த சீயூ, ஸாரி, வித்யுத்.

கிரிக்கெட் தவிர இவருக்குப் பிடித்த வேறு விளையாட்டுகள் டென்னிஸ், பேஸ்கட் பால், ஸ்னூக்கர்.

எல்லா கிரிக்கெட்டர்களுக்கும் இருக்கும் அதே ஆசை இவருக்கும் இருக்கிறது. "ரொம்ப வருஷம் இந்தியாவுக்காக ஆடணும். முந்நூறு முந்நூற்றைம்பது விக்கெட் எடுக்கணும். நான்காயிரம் ரன்கள் எடுக்கணும். இதுதான் என் சின்னச் சின்ன... இல்லை கொஞ்சம் பெரிய ஆசைதான். நிச்சயம் இதைச் சாதிப்பேங்கற நம்பிக்கையும் எனக்கு இருக்கு" என்கிறார் இந்த அமீர்கானின் ரசிகர்.

"முதல்ல லேஜியாத்தான் இருந்தான். அப்புறம் நிறைய ஹார்டு ஒர்க் பண்ணி திறமையை வளர்த்துக்கிட்டான். இதுதான் ஆரம்பம். இன்னும் ரொம்ப போக வேண்டியிருக்கே... கண்டிப்பா அவன் சாதிப்பான்ங்கற நம்பிக்கை எனக்கு இருக்கு" என்கிறார் வித்யுத்தின் அம்மா ஹஸ்தா.

அப்பா என்ன சொல்கிறார்?

"சென்னை ஸ்போர்ட்ஸ் ஃபவுண்டேஷன் கோச், ஸ்வாதி, பழனி இவங்க எல்லாம்தான் அவனுக்கு நல்லா பயிற்சி கொடுத்தாங்க. நிறைய என்கரேஜ் பண்ணினாங்க. பௌலிங்ல இருக்கற மாதிரி பேட்டிங்லயும் இன்னும் கொஞ்சம் கவனம் செலத்தணும்னு நான் நினைக்கிறேன். செலுத்துவான். சாதிப்பான்" என்கிறார் சிரித்துக் கொண்டே!

தமிழகத்திலிருந்து சமீபத்தில் இந்திய அணியில் இடம் பிடித்திருக்கும் ரமேஷ், ஸ்ரீராம், ஹேமங்பதானிக்கு அடுத்து வித்யுத்- சீயு!

— செ. ஏக்நாத்

அட்டை, படங்கள்: ஜரிஸ்

மக்கள் போடும் மதிப்பெண்கள்

# மகராசன்!

*"அந்த மகராசன் பண்ணிய இந்த ஒரு காரியத்துக்காக எங்க வோட்டு எல்லாம் அவருக்குத்தாங்க" என்கிறார்கள் குறிஞ்சிப்பாடித் தொகுதி மக்கள். அவர்கள் மகராசன் என்று குறிப்பிடுவது இத் தொகுதி எம்.எல்.ஏ.வும், பிற்பட்டோர் நலத்துறை அமைச்சருமான எம்.ஆர்.கே. பன்னீர்செல்வத்தை.*

கன்னடியன்குப்பம், திட்டு வெளி, கருப்பம்பாடி, ஆயத் துறை, சம்பாரெட்டிப்பாளையம், குண்டியமல்லூர், சிறுபாளையூர் ஆகிய கிராமங்கள் கடலூர் குள்ளஞ்சாவடியை ஒட்டியுள்ள கிராமங்கள். ஆனால் குறிஞ்சிப்பாடி சட்டமன்றத் தொகுதியைச் சேர்ந்தவை. போலீஸ் ஸ்டேஷன், கூட்டுறவு வங்கி என்று எந்தத் தேவைக்கும் இந்தக் கிராமத்து மக்கள் குறிஞ்சிப்பாடி டவுனுக்குத்தான் வர வேண்டும். ஆனால் அதில் ஒரு சிக்கல், பெருமாள் ஏரியின் வடிகால் கால்வாயைத் தாண்டித்தான் மக்கள் வர வேண்டும். அந்தக் கால்வாயில் வருடத்தில் பெரும்பகுதி நாட்கள் இடுப்பளவு தண்ணீர் போய்க் கொண்டிருக்கும். மழைக் காலத்தில் கேட்கவே வேண்டாம். அதனால் சுமார் முப்பத்தைந்து கி.மீ. சுற்றி வர வேண்டும். அந்தக் கிராமத்து மக்கள் கடந்த ஐம்பது வருடமாக பாலம் கேட்டுப் போராடி ஓய்ந்துவிட்ட நிலையில் சென்ற ஆண்டு விடிவு காலம் வந்து விட்டது. குண்டியமல்லூரரையும் கொத்தவாச்சேரியையும் இணைக்கும் வகையில் ஒரு கோடி ரூபாய் செலவில் பாலம் ரெடி!

"எவ்வளவோ தலைவர்கள்கிட்ட முறையிட்டோம் ஸார். ஒன்றுமே நடக்கலை. முன்பெல்லாம் எங்களால் வெள்ளை வேட்டி கட்டிக் கொண்டு ஊருக்கு வெளியே போக முடியாது. காரணம் இடுப்புத் தண்ணீரில் போக வேண்டியிருக்கும். இனி அந்தப் பயமில்லை. 'சல்'லுன்னு குறிஞ்சிப்பாடி போயிடலாம்" என்று மனம் நெகிழ்ந்து சொல்கிறார் குண்டியமல்லூர் ம.தி.மு.க. செயலாளரான ரங்கநாதன்.

வள்ளலார் புகழ்பாடும், வடலூர், குறிஞ்சிப்பாடி பேரூராட்சி, பஞ்சாயத்து யூனியன், நெய்வேலி டவுன்ஷிப் ஆகிய பகுதிகளைக் கொண்டதுதான் குறிஞ்சிப்பாடி தொகுதி. அந்தப் பகுதியில் எந்த மூலைக்குச் சென்று கேட்டாலும், கட்சி வித்தியாசம் இன்று அமைச்சரைப் பாராட்டுகிறார்கள். கொத்தவாச்சேரி பகுதி அ.தி.மு.க. செயலாளரான திருநாவுக்கரசு, பாலம் கட்டியது குறித்து அமைச்சரைப் பாராட்டி பெரிய சொற்பொழிவே நிகழ்த்துகிறார். "கொத்தவாச்சேரியிலிருந்து புதுப் பாலம் வழியா, குள்ளஞ்சாவடி, கடலூருக்குப் பஸ் விட்டால் பயனுள்ளதாக இருக்கும். சரியான இணைப்புச் சாலைகள் போட்டவுடன் அதையும் அமைச்சர் செய்து விடுவார் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு" என்கிறார் அவர்.

குண்டியமல்லூர் பாலத்தைப் போலவே கங்குணம் - எல்லக்குடி பாலமும் தொகுதி மக்களால் அமைச்சரின் சாதனையாகப் போற்றப்படுகிறது. "கிராமத்தில் குடிதண்ணீர்ப் பிரச்னையே கிடையாது; இரண்டு தெருக்களில் சிமெண்ட் சாலை போட்டிருக்கிறோம். எல்லாம் அமைச்சர் முயற்சிதான். கங்குணம் - திருவெண்ணெய்நல்லூர்

சாலையையும் போட்டுக் கொடுத்து விட்டால் நன்றாக இருக்கும்" என்கிறார் ஊராட்சித் தலைவரான சேகர் (பா.ம.க.). தொகுதி முழுக்க உள்வாங்கிய கிராமங்கள் உட்பட எங்கும் சிமெண்ட் சாலைகள் போடப்பட்டிருக்கின்றன. இந்த சிமெண்ட் சாலைகளை கிராம மக்கள் வாழ்த்தி வர வேற்கிறார்கள். காரணம் தானியங்களைப் பகலில் காய வைத்து எடுத்து வைக்கலாம். இரவில் நன்கு பெருக்கி விட்டு, பாயைப் போட்டுத் தூங்கவும் செய்யலாம்.

**எம்.**ஆர்.கே. என்று உடன்பிறப்புக் களால் பாசத்துடன் அழைக்கப்படும் எம்.ஆர்.கே. பன்னீர் செல்வத்தின் தந்தை எம்.ஆர். கிருஷ்ணமூர்த்தி. அப்பா மாவட்டச் செயலாளர் என்பதால், பன்னீர் செல்வத்துக்கு இயல்பாகவே அரசியலில் ஒரு பிடிப்பு ஏற்பட்டு விட்டது. 1991ல் சிதம்பரம் தொகுதியில் வெற்றி பெற வேண்டிய சூழ் நிலையில் ராஜீவ் மரணம் காரணமாகத் தோல்வியைத் தழுவ வேண்டியதாகி விட்டது. 1996ல், சிதம்பரம், கூட்டணிக் கட்சியான த.மா.கா.வுக்கு ஒதுக்கப்படவே, கொஞ்சம் அந்நியமான குறிஞ்சிப்பாடிக்கு வர வேண்டியதாகி விட்டது இவருக்கு. முதலில் கொஞ்சம் பாராமுகமாக இருந்த உள்ளூர் உடன் பிறப்புகள் பன்னீர்செல்வத்தின் பழகும் பாங்கைக் கண்டு ஒட்டிக் கொண்டு விட்டார்கள். பிற்பட்டோர் நலத்துறை அவ்வளவு பிஸியான துறை அல்ல என்பதால் அமைச்சருக்குத் தொகுதியில் செலவழிக்க நிறையவே நேரம் கிடைக்கிறது. "அதிகாரிகளை அன்பாக மிரட்டி வேலை வாங்குவதில் வல்லவர் அமைச்சர்" என்று புகழ்கிறார்கள் உடன்பிறப்புகள்.



கீழ்பூவாணிகுப்பம், கருங்குழி, வடலூர் ஆகிய பகுதிகளில் பல்லாண்டுகளாகக் கொடுக்கப்படாத பட்டாக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அமைச்சரின் இலாகா என்பதால் வடலூர் குறிஞ்சிப்பாடி, பெரிய குப்பம் ஆகிய இடங்களில் பிற்பட்டோருக்கான ஹாஸ்பிடல்கள் திறப்பது சாத்தியமாகியிருக்கிறது.

''குறிஞ்சிப்பாடிக்குத் தாலுகா அந்தஸ்து கூட கிடையாது. ஆனால் தாலுகா தலைமையிடத்தில் உள்ளது போன்றே ஒரு மருத்துவ மனையைக் குறிஞ்சிப்பாடியில் கட்ட அனுமதி வாங்கியிருக்கிறார் அமைச்சர். பஜாரில் சிமெண்ட் சாலை, பெண்களுக்காக தனியார் மேல்நிலைப் பள்ளி, தனியார் கல்லூரி, சித்த மருத்துவ மனை என்று பல

வேலைகள் குறிஞ்சிப்பாடி டவுனில் நடந்திருக்கின்றன. ஆனால் பேருந்து வசதியில் அமைச்சர் கொஞ்சம் கவனம் செலுத்தலாம். பல பஸ்கள் உள்ளே பஸ் ஸ்டாண்டுக்கு வராமல், பை-பாஸ் வழியாகச் சென்று விடுகின்றன. இது தவிர சென்னைக்கு நேரடி பஸ் கூடுதலாக விட வேண்டும். பஜாரில் கழிப்பிடம் கட்ட வேண்டும். புதிய மருத்துவமனை நன்கு இயங்க பொதுமக்கள் குழு ஏற்படுத்த வேண்டும்" என்கிறார்கள் குறிஞ்சிப்பாடி பிரமுகர்களான முத்துக்குமாரசாமி, செல்வமணி, அக்பர் ஆகியோர்.

குறிஞ்சிப்பாடிக்குப் போட்டியாக பளபளக்கிறது சென்னை - கும்பகோணம் சாலையிலுள்ள வடலூர். "வடலூர் ஒரு நாள் கடலூராகும்" என்று வள்ளலார் சொல்லிவிட்டுச் சென்றார். அதை நிறைவேற்றுபவர் அமைச்சர் தான்" என்று சொல்கிறார் த.மா.கா.வின் சீனியர் பிரமுகர் நடேசன். "எங்க கட்சி எப்படி வேண்டுமானாலும் கூட்டணி சேரட்டும். தேர்தலில் என் ஆதரவு அமைச்சருக்குத்தான்" என்கிறார் அவர்.

**"எங்க கட்சி எப்படி வேண்டுமானாலும் கூட்டணி சேரட்டும். தேர்தலில் என் ஆதரவு அமைச்சருக்குத்தான்" என்கிறார் த.மா.கவின் சீனியர் பிரமுகர்.**

அமைச்சர் வடலூருக்குச் செய்ததுதான் என்ன?

"ஒன்றா இரண்டா எடுத்துச் சொல்ல..." என்று துவங்குகிறார்கள் வடலூர் பிரமுகர்களான ஜெயசேகர், சந்திரசேகர் மற்றும் ஞானசேகரன் ஆகியோர். "புதிதாக, குடிநீருக்கு இரண்டு தண்ணீர் தொட்டிகள் கட்டுகிறார்கள். அவற்றைக் கட்டி முடித்து விட்டால் இருபது வருட காலத்துக்குத் தண்ணீர்ப் பிரச்னை இருக்காது. டவுன் முழுக்க முந்நூறு சோடியம் விளக்குகள் போடப்பட்டிருக்கின்றன. இது தவிர சென்னை போன்ற நகரங்களில் இருப்பது போன்று இரண்டு உயர் கோபுர மின் விளக்குகள் போடப்பட்டிருக்கின்றன. வடலூர் ஒரு புனித நகரம். இங்கு புலால் கடைகள், மதுக்கடைகள் நிரந்தரமாக மூடப்பட வேண்டும். அனல்மின் நிலையக்காரர்கள் வடலூரைத் தத்தெடுத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் நெய்வேலிக்காக சுற்றுபட்டு பகுதி மக்கள் செய்த தியாகம் அதிகம். குறிப்பாக நெய்வேலி வந்ததன் காரணமாக நீர்மட்டம் படு பாதாளத்தில் போய்விட்டது" என்கிறார்கள் அவர்கள்.

அமைச்சர் வாக்குறுதி கொடுத்து செய்யாதது வடலூரிலுள்ள சேஷசாயி இண்டஸ்ட்ரி பற்றிய விவகாரம்தான். 'பத்து வருட காலமாக மூடிக் கிடக்கும் அந்தத் தொழிற்சாலையைத் திறக்க முயல்வேன்' என்று அமைச்சர் வாக்குறுதி கொடுத்திருந்தார். ஆனால் பல்வேறு காரணங்களால் அந்தத் தொழிற்சாலையைத் திறப்பது சாத்தியமாகவில்லை. மற்றபடி, நெய்வேலி பகுதியில் அதிக அளவில் நியாய விலைக் கடைகள், மண்ணெண்ணெய் டிப்போக்கள் திறக்கப்பட்டிருக்கின்றன. தொகுதியில் உள்ள வியாபார பிரமுகர்கள், "அமைச்சர் சார்பாகவோ அல்லது ஆளும் கட்சி சார்பாகவோ எங்களை மிரட்டி நிதி வசூலிக்கும் அடாவடித்தனம் கடந்த நான்கரை வருடங்களாக இங்கு இல்லை" என்று சந்தோஷப்படுகிறார்கள். கடற்கரையோரமாக இருக்கும் சில கிராமங்களில், "அமைச்சர் எங்கள் பகுதியையும் கொஞ்சம் கவனிக்கலாமே" என்று குரல்கள் எழுகின்றன.

தொகுதியைப் பொறுத்த மட்டில் குறைந்த பட்ச குறைகளோடு பவனி வரும் அமைச்சர் பிற்பட்டோர் நலத்துறை இலாகாவிலும் தனது முத்திரையைப் பதித்திருக்கிறார். 1995-96ல் இந்த இலாகாவுக்கு ஒதுக்கப்பட்ட தொகை சுமார் ஐம்பது கோடிதான். இந்த வருடம் ஒதுக்கப்பட்ட தொகை இருநூறு கோடி ரூபாய். "பிற்பட்ட, மிகவும் பிற்பட்ட, சீர் மரபினர் பிரிவைச் சேர்ந்த மாணவ, மாணவிகளுக்குக் கல்வியில் சலுகை, உதவித் தொகை, தொழிற் பயிற்சி என்று பல திட்டங்கள் செயல்படுகின்றன. கடந்த ஐந்தாண்டில் மட்டும் பிற்பட்ட மாணவ மாணவிகளுக்காக புதிதாக நூற்று முப்பத்து ஏழு ஹாஸ்டல்கள் கட்டப்பட்டு இருக்கின்றன" என்கிறார்கள் இலாகா அதிகாரிகள்.

வரும் சட்டமன்றத் தேர்தலை நம்பிக்கையுடன் எதிர்நோக்கியிருக்கிறார் அமைச்சர். தொகுதியில் பரவலான செல்வாக்குடன் இருக்கும் விடுதலைச் சிறுத்தைகள் எதிரணியில் இருப்பதால் ஆளும் கட்சி வட்டாரத்தில் கொஞ்சம் கலக்கம் இருக்கிறது.

— ப்ரியன்

படம் : ராஜன்

# கிச்சன் கிளினிக்

**கா**லையில் பூரி, கிழங்கு டிபன் சாப்பிட்டுவிட்டு, பதினோரு மணிக்கு ஒரு கப் காப்பி குடித்துவிட்டு, ஒரு மணிக்குச் சாப்பிட உட்கார்ந்தால், பசியே இருக்காது. இரண்டு வாய் சாப்பிட்டால், வயிறு 'திம்'மென்று ஆகிவிடும். இதற்கு என்ன காரணம்? வாயுத் தொல்லை! நம் உணவில் துவரம் பருப்பு அதிகமாக சேர்த்துக் கொள்ளுவதும், இந்த வாயுத் தொல்லைக்கு முக்கியமான காரணம்.

இதிலிருந்து விடுபட என்ன வழி?

ஒரு டம்ளர் மோரில் ஐந்து சிட்டிகை பெருங்காயத்தூள் சேர்த்து, ஒரு பத்து நிமிஷம் அப்படியே வைத்திருந்துவிட்டு, அப்புறம் சாப்பிட்டால் சிறிது நேரத்தில், ஏப்பமாகவும், அபான வாயுவாகவும் வாயு வெளியேறி காற்று இறங்கிய பலூனைப் போன்ற ஒரு உணர்வு ஏற்பட்டு விடும். வேறு எந்த விதமான மருந்து சாப்பிட்டாலும் நிவாரணம் கிடைக்க இரண்டு மணி நேரம் போல ஆகலாம்.

சிலபேர், இரவில், லேட்டாக, பிரியாணி போன்றவையைச் சாப்பிட்டால் கூட, தூக்கம் வராது. வயிறு உப்புசமாக, கனப்பதுபோல உணருவார்கள்.

அப்போது, பெருங்காயத்தூளை மோரிலோ, வாழைப்பழத் துண்டிலோ, இல்லையெனில் வெல்லத்துடன் கலந்தோ, வாயில் போட்டுத் தண்ணீர் குடிக்கலாம்.

பாட்டிமார்கள் குழம்பு வைக்கிறபோது, வடகம் என்று ஒன்று அதிலே போடுவார்கள். கடுகு, மிளகு, சீரகம், வெந்தயம், வெங்காயம் இவற்றுடன் பெருங்காயம் சேர்த்து, நல்லெண்ணெய் பயன்படுத்தி சிறுசிறு உருண்டைகளாக்கி, வைத்திருப்பார்கள். அதுவே வடகம். இதனை குழம்பு வைக்கிறபோது சேர்த்துக் கொண்டால், துவரம் பருப்பினால் ஏற்படும் பிரச்னை வராது.

சில மாதங்களுக்குமுன்பு, ஒரு நாள் நள்ளிரவில் எனக்கு ஒரு டெலிபோன் வந்தது. சிங்கப்பூரிலிருந்து ஓர் அன்பர் பேசினார். அவருக்கு அங்கே விடியற் காலை. "வயிறு உப்புசமாக இருக்கிறது. படுத்தால் தூக்கமில்லை. ரொம்ப அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். உங்கள் 'உணவே மருந்து' நிகழ்ச்சிகளை டி.வி.யில் பார்த்திருக்கிறேன். இந்த நிமிடம் நான் அனுபவித்துக் கொண்டிருப்பது, அவஸ்தையின் உச்சகட்டம். ஏதாவது மருந்து சொல்லுங்கள்" என்றார்.

அவருக்கு நான் சிபாரிசு செய்தது பெருங்காய வைத்தியம்தான்.

இரண்டு வாரம் கழித்து அவர் மறுபடி டெலிபோன் செய்து, "இரண்டரை வருடங்களாக நான் என்னென்னவோ மருந்து சாப்பிட்டுப் பார்த்துவிட்டேன். என் பிரச்னை தீரவில்லை. கடைசியில் நீங்கள் சொன்னபடி சாப்பிட்ட பெருங்காயம், பிரச்னையை முழுமையாகத் தீர்த்துவிட்டது. அது மட்டுமில்லை. இப்போது எனக்கு மலச்சிக்கல் பிரச்னையுமில்லை. உங்களுக்கு ரொம்ப தேங்க்ஸ்!" என்றார். கடைசியாக அவர் குறிப்பிட்டது முக்கியமான ஒரு பாயிண்ட். பெருங்காயம், மலச்சிக்கலுக்கும் நல்ல மருந்து.

**பெ**ண்களுக்கு, பிரசவத்துக்குப்பின், மாதவிலக்கு தொடர்வது சில சமயம் தாமதமாகலாம். அப்போது பெருங்காய லேகியத்தைக் கொடுத்தால், கருப்பையில் தங்கியுள்ள கசடுகள் வெளியேறி மாதவிலக்கு தாமதமின்றித் தொடரும்.

மாதவிலக்கு நேரத்தில் பெண்கள் பெருங்காயத்தைச் சற்று எச்சரிக்கையுடன் பயன்படுத்த வேண்டும். பெருங்காயம், உதிரப் போக்கை அதிகரித்துவிடும் சாத்தியம் உண்டு என்பதால்தான் இதைச் சொல்லுகிறேன்.

**தூ**க்கம் வரவில்லை என்று தினமும் தூக்க மாத்திரைகளை டாக்டர்களின் ஆலோசனையின் பேரில் பலரும் சாப்பிடுவதை நாம் பார்க்கிறோம். ஆனால், சித்த மருத்துவத்தில் தூக்கமின்மைக்கு மருந்தாக நாங்கள் கொடுப்பது என்ன தெரியுமா?. கசகசாதான். நரம்புகளுக்குத் தேவையான சக்தியையும், மூளைக்குத் தேவையான



டாக்டர் க.வே. அபிராமி

## மூலிகை மணி டாக்டர் க. வேங்கடேசன்



உற்சாகத்தையும் அளிக்க வல்லது கசகசா.

இரவு ஏழு மணியளவில் அரை ஸ்பூன் கசகசாவைப் பாலில் ஊறவைத்து, மிக்ஸியில் அரைத்து, அதை மறுபடி ஒரு டம்ளர் பாலில், கலந்து, பனங்கற்கண்டு சேர்த்துச் சாப்பிட்டால் இரவு நன்கு தூக்கம் வரும். மாலை வேளையில் சாப்பிட்டால், இரவு ஏழு மணிக்கெல்லாம் கண்களைச் சுழற்றும்.

இரண்டு நாள் சாப்பிட்டுவிட்டு, தூக்கம் வரவில்லையே என்று சொல்லக்கூடாது. பத்து, பதினைந்து நாட்கள் சாப்பிட்டால்தான் எபக்ட் இருக்கும். மூன்று மாத காலம் கசகசா சாப்பிட்டு வந்தால், அதன்பின் ஒரு இடைவெளி அவசியம். இல்லையென்றால், கசகசா சாப்பிட்டால்தான் தூங்க முடியும் என்ற அளவுக்கு ஆகிவிடக் கூடும்.

கசகசாவை குழந்தைகளுக்கோ, அறுபது வயது கடந்த முதியவர்களுக்கோ கொடுப்பதைத் தவிர்த்துவிட வேண்டும்.

திருமணமானவர்கள் வாரம் இரண்டு நாட்கள் சிறிது கசகசா, இரண்டு பாதாம்



பருப்பு, போட்டு அரைத்து, பனங்கற்கண்டு சேர்த்த பால் சாப்பிட்டு வந்தால், பிரச்னையற்ற இல்லற உறவு அமையும். ஓவர் ஆக்டிவ் இல்லற உறவினால், ஏற்படும் தளர்ச்சி மற்றும் இழப்பிலிருந்து மீள இது உதவும். ஆண்களுக்கு விந்து வீரியமின்மை, எண்ணிக்கை குறைவு, சிறுநீருடன் விந்து வெளியேறுதல் போன்ற பிரச்னைகளுக்கும் கசகசா நல்லதொரு மருந்து எனலாம். இவர்களுக்கும் ஓர் எச்சரிக்கை வார்த்தை. வாரம் இருமுறை என்பதை மாற்றி அதிக அளவில் கசகசா பால் சாப்பிட்டால், உடம்பு பெருத்துவிடும். உடம்பில் கொலஸ்டிரால் லெவல் அதிகரிக்கும். இதனால் பல பின் விளைவுகள் ஏற்படும்.

இன்றைய இளைய தலைமுறையினர் பலருக்கு, நேரம் காலம் பார்க்காமல் உழைக்க வேண்டியிருக்கிறது. நேரத்துக்குச் சாப்பிட முடிவதில்லை. உடல் நலம் பற்றி அதீத அக்கறை காட்ட நேரமில்லை. அப்படிப்பட்டவர்கள், தினசரி, ஓரிரு சிட்டிகை கசகசா பொடியைப் பாலில் சேர்த்து அருந்தினால், முகத்தில் ஒரு வித பிரகாசம், மினிர்ச்சி கிடைக்கும். கசகசாவை அரைத்து பாலுடன் கலந்து, பேஸ்ட் போலாக்கி முகத்தில் தடவிக் கொண்டு, ஊறி, முகம் கழுவினால் முகம் பொலிவு பெறும்.

பெண்களுக்கு வெள்ளைப்படுதல் ஒரு பிரச்னை. இது குறித்து, டாக்டரிடம் ஆலோசனை கேட்கக் கூட தயங்குவார்கள். நாளாக, நாளாக இதன் இம்பாக்ட் அதிகமாகும். இதற்கும், கசகசா நல்ல மருந்து. சூடான பாலில் சிறிதளவு கசகசா சேர்த்து சாப்பிட்டு வந்தால் நிவாரணம் கிடைக்கும்.

கசகசாவைப் பொடி செய்து வைத்து, அதிகபட்சம் ஒரு மாதத்துக்குள் பயன்படுத்துவது நல்லது. அதன்பின், அது ஒரு மாதிரி ஆகி, வேண்டிய பலன் தராது.

மார்சளிக்கும் கசகசா சாப்பிடலாம். கசகசா போட்டு கொதிக்க வைத்த தண்ணீரை, வடிகட்டிக் குடித்தால், சளி வெளியேறிவிடும். இதன் காரணமாக, மேற்கத்திய நாடுகளில் இருமல், சளிக்கு தரப்படும் மருந்துகளில் கசகசாவும் இடம் பெறுகிறது. பிரட், தயாரிப்பிலும் இது பயன்படுத்தப்படுகிறது.

கசகசா உலகமெங்கும் வளருகிறது என்றாலும், அரபு நாடுகளில், இது தடை செய்யப் பட்ட ஒன்று. காரணம், கசகசா செடியிலிருந்து கிடைப்பதுதான் ஓபியம் என்ற போதை வஸ்து.

# நில், கவனி,



"மனம் ஒரு குரங்கு என்பார்கள். ஆனால் குரங்காகிய அனுமனை நாம் கடவுளாக வணங்குகிறோம். இதற்கு என்ன அர்த்தம்? கட்டுப்பாடின்றி அலைகிற மனத்தை நாம் கட்டுப்பாட்டில் கொண்டு வருகிற போது, அதற்கு தெய்வீகம் வந்துவிடுகிறது. வணங்குதற்குரியதாகிவிடுகிறது. இப்படி மனத்தை பண்படுத்துவது, நிலத்தைத் தயார் செய்வது போல..." என்று ஆரம்பித்தார் இந்தியன் வங்கி முன்னாள் சேர்மன் டி.எஸ்.ராகவன்.

"வாழ்க்கையிலே ஒருவர் வெற்றி கொள்ளுவதற்கு அடிப்படையான தேவை பணம் இல்லை! மனம்; இந்த மனத்தில் உருவாகும் பல்வேறு எண்ணங்களில் ஒன்றுதான் தன்னம்பிக்கை. புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்ளுவது, அவற்றில் நல்லது எது? நமக்கு வேண்டியது எது? என்று கண்டறிவது, அவற்றைத் தக்கபடி திட்டமிட்டுச் செயல்படுத்துவது, இவை எல்லாமே மனத்தின் குணங்கள்.

"அடுத்து, நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதை மனம்தான் திட்டமிட வேண்டும். என் வாழ்க்கையிலிருந்து ஒரு சிறு உதாரணம் தர விரும்புகிறேன்.

"நான் விவேகானந்தா கல்லூரியில் எம்.ஏ. படித்தேன். மூன்றரை ஆண்டு காலம் வேலை கிடைக்கவில்லை. வீட்டில் அண்ணன்கள் வேலைக்குப் போய்க் கொண்டிருந்ததால், எனக்கு வேலை கிடைக்காதது குடும்பத்தில் பெரியதொரு பிரச்னையாக இல்லை. ஆனாலும், பொதுவாகச் சில விமர்சனங்கள் இருக்கவே செய்தன. அப்போதெல்லாம், வேலைக்கு விண்ணப்பிக்கிறபோது, பத்து ரூபாய்க்குப் போஸ்டல் ஆர்டர் அனுப்பச் சொல்லுவார்கள். நான் நிறைய விண்ணப்பங்கள் போடுவேன். மாதம் அதற்காக முந்நூறு ரூபாய் போல தேவைப்படும். அந்த ரூபாயை வீட்டில் கேட்கக் கூடாது என்பதில் மட்டும் தீர்மானமாக இருந்தேன். பிறகு, பணத்துக்கு என்ன செய்வது? யோசித்தேன்...

"நமது பலம் என்பது எம்.ஏ. படிப்பு, அதை வைத்துக் கொண்டு என்ன செய்யலாம் என்று யோசித்தேன். நேரே மினர்வா டுடோரியல் காலேஜுக்குப் போய் அதன் நிறுவனர் பரசுராமிடம், நான் உங்கள் மாணவர்களுக்குப், பொருளாதாரம், சமஸ்கிருதம், வரலாறு போன்ற பாடங்களைச் சொல்லித் தரட்டுமா என்று கேட்டேன். நூறு ரூபாய் சம்பளத்தில் அங்கே ஆசிரியர் வேலை கிடைத்தது. அடுத்து, ஜெயந்தி டுடோரியல் காலேஜ். அங்கேயும் பாடம் சொல்லிக் கொடுக்க வாய்ப்பு கிடைத்தது. மாத சம்பளம் நூறு ரூபாய். அடுத்து, பாரத் டுடோரியல் காலேஜில் வேலை. இப்படி நானே சம்பாதித்த பணத்தில், இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் புரோபேஷனரி ஆபீசர் தேர்வுக்கு விண்ணப்பித்தேன். தேர்வு செய்யப்பட்டேன்.

"எனக்குச் சொந்தத் தொழில் செய்ய ஆர்வம் இல்லை. நல்ல வேலைக்குப் போகவே விரும்பினேன். அதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதை விடாமுயற்சியுடன் செய்தேன். உங்களில் பலர் சொந்தமாக பிசினஸ் செய்ய, தொழில் ஆரம்பிக்க விரும்பலாம்.

# கல்

# முட்டுக்கட்டைகள்

# வெற்றிகொள்!

அப்படிப்பட்டவர்கள் அதனை இலக்காக வைத்துக் கொண்டு, மனம் தளராமல் முயற்சி செய்ய வேண்டும். சிலந்தியின் விடா முயற்சியால் தன்னம்பிக்கை பெற்ற ராபர்ட் புரூஸ், கஜினி முகமது கதைகளைச் சிறு வயதில் படித்ததோடு மறந்து விடக்கூடாது. வாழ்க்கையில் தளர்ச்சி, தோல்வி ஏற்படுகிற சமயங்களில் எல்லாம் அவற்றை நினைவூட்டி, தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லக்கேட்டிருக்கிறோம்.

"ஆனால் மனச்சோர்வு, தவறு இதெல்லாம் வாழ்க்கையில் வரவே செய்யும். ராமாயணத்தில் அனுமன் கூட மனச்சோர்வு கொண்டு தற்கொலை செய்துகொண்டு விடலாமா என்று நினைத்த கட்டம் உண்டு. அனுமனுக்கே மனத் தளர்ச்சியும், தற்கொலை உணர்வும் வந்ததென்றால் மனிதர்களான நாம் எம்மாத்திரம்?

"அதேபோலத்தான், தவறுகள் என்பதும் எந்த முயற்சியிலும் சகஜம். தவறுகள், தடைகள் எல்லாம் சகுனத் தடைகள் என நினைப்பது முட்டாள்தனம். ஒரு தவறு நடந்து விட்டால், அடுத்த தடவை அது மறுபடி நிகழாதிருக்க நாம் எச்சரிக்கையோடு இருக்க வேண்டும். அவ்வளவுதான்.

"இந்த அணுகுமுறையை மேற்கொண்டால் தொழில் தொடங்க மனம் பக்குவப்பட்டுத் தயாராயிருக்கும்.

"இனி நடைமுறை விஷயங்கள் :

"நம்மவர்களிடையே ஒரு பொதுவான குணம் உண்டு. ஒரு பிசினசுக்கு நல்ல கிராக்கி என்றால் (உதாரணமாக கிரானைட், இறால் ஏற்றுமதி), ஆட்டு மந்தைபோல எல்லாரும் அங்கே போய் விழுந்தால், சீக்கிரமே மூட வேண்டியதுதான். அதற்குப் பதிலாக எந்தத் தொழில் மிகப் பிரபலமாக, டிமாண்டுடன் நடக்கிறதோ, அதற்குரிய உப தொழில் (சப்சிடிரி) ஆரம்பிக்கலாம். அங்கே தேக்கம் வருகிறபோது, மாற்றுத் தொழிலுக்குப் போகும் சாத்தியம் இருக்கும்படியான தொழிலாகப் பார்த்து ஆரம்பிப்பது உசிதம்.

ஆரம்பிக்கிறபோதே, நம் பொருளுக்கு மார்க்கெட் நிலவரம் என்ன என்பதை ஆராய்ந்து கொள்ள வேண்டும். அதற்காக, பிராஜக்ட் கன்ஸல்டென்ட்களுக்கு ஆயிரக் கணக்கில் பீஸ் கொடுத்து, ரிப்போர்ட் தயார் பண்ண வேண்டும் என்ற அவசியம் இல்லை. நாமாகவே அதைச் செய்யலாம். ஏற்கெனவே அதில் இருக்கிறவர்கள், வியாபாரிகள், பயன்படுத்தும் வாடிக்கையாளர்கள் என பல தரப்பினரையும் சந்தித்துப் பேசினால், உண்மை நிலவரம் என்ன என்பது புரியும்.

தொழில் செய்ய முனைபவர்கள், எதற்கு முன்னுரிமை தர வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டியது மிக முக்கியம். ஒவ்வொன்றுக்கும் உரிய முக்கியத்துவத்தின் அடிப்படையில்தான், நேரம், முதலீடு ஆகியவற்றைச் செலவிட வேண்டும். தொழில் என்றால், கச்சாப்

## மிகவும் அவசியம்!



பொருள் முக்கியம்தான். அதற்காக முதலீட்டில் பெரும்பான்மையைக் கச்சா பொருளுக்கே செலவிட்டுவிடக்கூடாது. தேவை அடிப்படையில், நிர்ணயம் செய்து கொள்ள வேண்டும். அபரிமிதமாகக் கச்சாப் பொருளில் முதலீடு செய்தால், அதை வைக்கக் கிடங்கு, அதற்கான பாதுகாப்பு, என்று அதிகப்படியான செலவுதான். அதைப்போலவே, எதற்கு முன்னுரிமை தர வேண்டுமோ அதற்கு, முதலில் நேரம் ஒதுக்க வேண்டும். நேரத்தைச் சிறப்பாக சிக்கனமாக செலவழிக்க வேண்டியது மிக முக்கியம்.

அதனால், இளைஞர்களே!

1. மனத்தில் தன்னம்பிக்கை கொள்ளுங்கள்.
2. செய்யப்போவதைத் திட்டமிடுங்கள்
3. தடைகள், தவறுகளைக் கண்டு சோர்வு அடையாதீர்கள்.
4. புதுமையான தொழிலைத் தேர்ந்தெடுங்கள்
5. தீர விசாரித்த பிறகு இறங்குங்கள்
6. முன்னுரிமைகளைப் பட்டியலிடுங்கள்
7. நேரத்தைச் சிக்கனமாகச் செலவழியுங்கள்

வெற்றி நிச்சயம்!"

- டி.எஸ். ராகவன் தம் உரையை இப்படி முடித்தபோது, அரங்கத்தில் அமர்ந்திருந்த இளைஞர்கள் மனத்தில் ஒரு புது உற்சாகம் புகுந்திருந்தது.

'கேள்விகள் கேட்கலாம்' என்ற அறிவிப்பைத் தொடர்ந்து வழக்கமாக இது போன்ற நிகழ்ச்சிகளில் ஒரு சிறு மௌன இடைவெளி ஏற்படும். ஆனால் கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் இணைந்து வழங்கிய நில்-கவனி-வெற்றிகொள் நிகழ்ச்சி இதற்கு விதிவிலக்கு! (ஜனவரி 7, 2001) அடுக்கடுக்கான கேள்வி-பதில்களின் தொகுப்பு இதோ :

**வாசகர் கணபதி** : இன்று பல்வேறு வங்கிகளும் அளித்த கடன்கள், திரும்பவராத கடன்களாகிவிட்டன. இதற்கு என்ன காரணம்? இவர்களுக்குக் கடன் கொடுத்தால், திரும்பி வராது என்று தெரிந்தேதான் இந்தக் கடன்கள் வழங்கப்பட்டனவா? இல்லை, சம்பந்தப்பட்டவர்கள் வங்கிகளை ஏமாற்றி விட்டார்களா?

**ராகவன்** : திட்டங்களில் தவறு என்று தெரிந்தே கடன் கொடுத்திருந்தால் அது தவறு மட்டுமில்லை. குற்றம்! சம்பந்தப் பட்டவர்கள் தண்டனைக்குரியவர்கள். ஆனால், நல்ல திட்டம் என்று நம்பி, தருகிற கடன்கள், பல்வேறு காரணங்களால் நஷ்டம் ஏற்பட்டு, சிக்கலாகி விடுவதும் உண்டு. கச்சாப் பொருள் விலை மார்க்கெட் நிலவரம், போட்டி என்று பலவிதமான காரணங்கள் இருக்கலாம்.

**வாசகர் சரவணன்** : நஷ்டமடைந்து விட்ட நிலையில் ஒரு தொழிலைத் தொடர்ந்து நடத்துவது நல்லதா? மூடிவிடுவது நல்லதா? வேறு தொழிலுக்கு மாறுவது சாத்தியமா?

**ராகவன்** : என்ன தொழில், ஏன் நஷ்டம்? என்பதைப் பொறுத்துதான் முடிவெடுக்க இயலும். நம்முடைய நஷ்டத்தைத் தாங்கும் சக்தியை ஆராய வேண்டும். எதிர் காலத்தில் மார்க்கெட் சூடுபிடித்து, வியாபாரம் பெருக வாய்ப்பு உண்டா என்று பார்க்க வேண்டும். இதற்கு மாற்றாக என்ன செய்ய முடியும் என்று பார்க்க வேண்டும். எதுவும் சாத்தியமில்லாவிட்டால், நஷ்டத்தை அதிகரித்துக் கொண்டே போவதைவிட, மூடிவிடுவது தான் நல்லது.

**மதுரை வாசகர் கிருஷ்ணன்** : முதலாளி முதல் தொழிலாளி வரை பலரது கூட்டு உழைப்புதான் தொழில். இதில், இவர்களுக்கு இருக்க வேண்டிய முக்கியமான குணாதிசயம் என்ன?

**ராகவன்** : யாராக இருந்தாலும், முதலில் இருக்க வேண்டியது ஈடுபாடு. உங்கள் ஊழி

விருந்தே உதாரணம் ஒன்றைச் சொல்கிறேன். ஒரு பிஸ்கட் கம்பெனி. நஷ்டம் ஏற்பட்டு வங்கிக் கடன் செலுத்துவில்லை. கடனை வசூ லிக்க கேஸ் போடப்பட்டது. அந்த சமயத் தில் கம்பெனி முதலாளியின் இரண்டு மகன் களும் தலையெடுத்தார்கள். எங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தினார்கள். கிளாக்ஸோ கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்து கொண் டார்கள். ஒழுங்காக கடனைத் திருப்பிச் செலுத்த ஆரம்பித்தனர். வராத கடன் வந் தது. அதற்கு முதற் காரணம், அந்த இரண்டு பிள்ளைகளும் காட்டிய முழுமையான ஈடுபாடுதான்.

அவ்வளவு எதற்கு? நஷ்டத்தில் இயங்கிய இந்தியன் வங்கி லாபம் சம்பாதித்தது எப் படி? பொறுப்பேற்றுக் கொண்டவுடன் நான் வங்கியில் பணிபுரியும் அத்தனை பேருடைய மனத்திலும் நிலவிய அச்சத்தைப் போக் கினேன். உங்களால் மட்டும்தான் முடியும் என்று ஊக்கப்படுத்தினேன். தன்னம்பிக்கை யுடனும், முழுமையான ஈடுபாட்டுடனும் உழைக்க வைத்து, வங்கியின் தலை யெழுத்தை மாற்றி அமைத்தேன்.

**பிரபாகர் (எம்.பி.ஏ. மாணவர்) :** நம் ஊரில் மெத்தப் படித்தவர்கள் அமெரிக்கா வுக்குப் போய் விடுகிறார்களே!

**ராகவன் :** பிறந்த குழந்தை சுவாசிக்க அழுகிறது. பசித்தால் அழுகிறது. அதற்கு அழுவதற்கு யாரும் சொல்லித் தருவதில்லை. வளர்ந்த பிறகு மட்டும் ஏன் நாம் வேலைக் காகப் பிறரை எதிர்நோக்கி இருக்க வேண் டும்? அயல்நாடுகளுக்குப் போகிறவர்கள் போகட்டும். நாம் இங்கேயே சொந்தக் காலில் நிற்போம். நமக்கு நாமே முதலாளி களாக இருப்போம்.

எதேச்சையாக சாப்பிட வந்தபோது, நிகழ்ச்சி பற்றிய அறிவிப்பைப் பார்த்து விட்டு, உள்ளே வந்து, நிகழ்ச்சியால் பெரிதும் கவரப்பட்ட வாசகர் **ஹரிஹரனின்** கேள்வி : இன்றைய இளைஞர்கள் நிற்கிறார்கள். கவனிக்கிறார்கள். ஆனால் வெற்றி கொள்ள முடியவில்லை. காரணம், இவர்களது படிப் புக்கும், தகுதிக்கும் ஏற்ற வேலை கிடைக்க வில்லை. இது குறித்து என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

**ராகவன் :** மும்பையில் எனக்கு ஒரு நண்பர். அவரது அப்பா, ஒரு புரோகிதர். வேலையில்லாத தம் மகனுக்கு ஏதாவது வேலைக்கு ஏற்பாடு செய்து தரச் சொல்லி, தாம் புரோகிதத்துக்குப் போன வீடுகளில் கேட்டுப் பார்த்தார். பயனில்லை. அந்த நண்பர், ஒரு நாள், ஒட்டடைக் குச்சி சகிதம் ஓர் அடுக்கு மாடிக் கட்டடத்திற்குப் போனார். வீடுகளை, ஒட்டடை அடித்து, ஜன்னல்களைத் துடைத்துச் சுத்தம் செய்தார். அதற்குரிய கட்டணம் பெற்றுக் கொண்டார். சிறிது நாட்களிலேயே அவருக்கு நல்ல டிமாண்ட். ஒருசில மாதங்களில், சிலரை வேலைக்கு வைத்துக் கொண்டார். ஒரே வரு டத்தில் கார் வாங்கும் அளவுக்கு உயர்ந்து விட்டார்! கண்களைத் திறந்து வைத்துக் கொண்டு, நம்மைச் சுற்றி நடப்பவற்றை உற்றுக் கவனித்தால், 'வாய்ப்பு' நம் வீட்டுக் கதவைத் தட்டுவது நம் காதுகளுக்குக் கேட்கும்.

**பாஸ்கரன் (அரக்கோணம்) :** இளைஞர் கள் பலருக்கு, முட்டுக்கட்டையாக இருப் பதே அவர்களுடைய பெற்றோர்கள் தானே!

**ராகவன் :** பெற்றோர்களையா முட்டுக் கட்டை என்கிறீர்கள். அது சரியில்லை! அவர்கள் எதிலும் நிதானம் அவசியம் என நினைப்பவர்கள். உங்கள் மீது அக்கறை கொண்டவர்கள். பாசம் கொண்டவர்கள். இளைஞர்களோ, அதிரடியாய் எதிலும் புகுந்து புறப்பட நினைப்பவர்கள். தேருக்குக் கூட முட்டுக்கட்டை அவசியம். காருக்குப் பிரேக் அவசியம். அதுபோலத்தான் பெற் றோர்களும். அவர்கள் முட்டுக் கட்டை போட்டால் நீங்கள் உங்கள் திறமையை முதலில் சிறு அளவில் நிரூபியுங்கள். அவர் களுக்கு நம்பிக்கையூட்டுங்கள். அவர்கள் ஆசியுடன் வெற்றிநடை போடுங்கள். தடை களைத் தாண்டி வெற்றிபெறுகிறவனே வீரன்!

**கே**ள்வி - பதில் நேரம் முடிந்தபோது நிகழ்ச்சி ஏற்கெனவே அரை மணி தாமத மாகியிருந்தது. ஆனபோதிலும் பார்வை யாளர்கள் நன்றியுரையும் முடிந்து தேசிய கீதம் ஒலிக்கும் வரை கலையாமல் இருந் தனர். தேசிய கீதம் முடிந்த போது 'ஜெய் ஹிந்த்' என்று அரங்கில் ஒலித்த ஒற்றைக் குரல் அங் கிருந்த அனைத்து மனங்களின் எதிரொலியாக அமைந்தது.

தொகுப்பு : **எஸ்.சந்திரமௌலி**

நில், கவனி, வெற்றிகொள் தொடரின் அடுத்த நிகழ்ச்சி குறித்த அறிவிப்பு அடுத்த வாரம்.



# KALKI SHOPPING PAGE

## MANTRALAYAM - SHIRDI DARSHAN



Darshan
Trips
Arranged



**CHENNAI - MANTRALAYAM- SHIRDI - CHENNAI**

**Departure 31st Jan, Feb 7, 14, 21**

***Fare Rs.2301/- includes second class reservation, Food, Accommodation and Local Travel.***

*We thank those devotees who had participated in our earlier tour.*

CONTACT

**BG 044/4894979**

---

## வீடியோ உரிமையாளர்களுக்கு நற்செய்தி!

## TECHNICS

**வீடியோ கவரேஜ் மாடுலேடர்**

**VCD RF CONVERTOR**

தூரமான, அதிகமான டி.வி.
இணைப்புக்கும் மற்றும்
VIDEO SWITCHER உரிய
VIDEO OUTPUT உள்ள
VIDEO COVERAGE
MODULATOR
தேவைக்கு அணுகவும்.

RAE 3403

**திரு. சரவணன்**
**கடை எண் 109,**
**A பர்மா பஜார், சென்னை - 1.**
**(G.P.O. எதிரில்)**
**போன் : 5211795**

---



## 100% திருப்தி

**நியாயமான விலையில் அற்புதமான வீட்டு மனை**

**கிருஷ்ணா நகர்** (அரசு அங்கீகாரம் பெற்ற மனைகள் DTP/LPDM-16-74)
**மேடவாக்கம்** சென்னை – 601302 (வேளச்சேரி அருகில்)

**சிறப்பு அம்சங்கள்**

• மாநகருக்கு மிக அருகில் • கவர்னர் மாளிகையிலிருந்து 20 நிமிட பயணம் • அடையாறு, திருவான்மியூர், வேளச்சேரி , கிண்டி மற்றும் தாம்பரத்திலிருந்து ரயில் மற்றும் பஸ் வசதி • நன்கு திட்டமிட்ட மனைப்பிரிவு, சுற்றிலும் வேலி • சுற்றிலும் நல்ல வீடுகள் • 12' ஆழத்தில் சுவையான நீர் • அருகாமையிலேயே நல்ல பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள், கடைகள் போன்ற அனைத்து வசதிகள் • சுத்தமான பத்திரம், நம்பகமான நிறுவனம் • 5 வருட மனை பாதுகாப்பு சேவை

**சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட்**
**அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பத்திரங்கள்; நிதி உதவியும் உண்டு.**

Tel : 4357721/31 Telefax : 4353183 Cell : 98400 44018 e-mail: blbestmail@vsnl.net
http://business.vsnl.com/blbestates




## BLB Estates (P) Ltd.

S-3,"Ramana Flats" 27, Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

நன் மதிப்பில் முதலீடு.







2001 ஜனவரி 28
விக்ரம தை 15
மலர் : 59
இதழ் : 26

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## விருது பெறாத தியாகிகள்!

ஸ்ரீநகர் விமான நிலையத்தருகே லஷ்கர் தற்கொலைப் படையினருக்கும் இந்திய ராணுவத்தினருக்குமிடையே கைகலப்பு. பன்னிருவர் இறந்துள்ளனர்! போர் நிறுத்த அறிவிப்பையும் இந்தோ - பாக் அமைதி முயற்சிகளையும் மீறி இந்த உயிர்ச் சேதங்கள் நேர்ந்துள்ளது பரிதாபம்தான்.

ஆனால், ராணுவ வீரர்கள் இதுபோன்ற தாக்குதல்களைச் சந்தித்தாக வேண்டும் என்பதும் அவற்றில் அவர்கள் உயிர் துறக்க நேரிடும் என்பதும் நமக்கும் தெரியும்; அந்த வீரர்களுக்கும் தெரியும்.

சற்றும் எதிர்பாராத சந்தர்ப்பத்தில், அவலமான சூழ்நிலையில், அகௌரவமான முடிவைச் சந்திக்க நேரிடும் ஊழியர்கள் சிலரும் நமது நாட்டில் இருக்கிறார்கள். இவர்களும் தியாகிகள்தான். ஆனால், யாரும் கொண்டாடாத, எந்த விருதும் வழங்கப் பெறாத தியாகிகள் - கழிவுநீர் அடைப்புகளை நீக்க சாக்கடைக்குள் இறங்கி, விஷ வாயுத் தாக்குதலால் மாண்டு போகிற ஏழை ஊழியர்கள். ஒரு சமுதாயம் சுகாதாரத்துடன் நாகரிகமாக வாழ்வதற்காக, உயிரைப் பணயம் வைத்து நரகலில் இறங்கும் சகோதரர்கள்!

நவநாகரிக கம்ப்யூட்டர் யுகத்திலும் மனிதக் கழிவுகளை அகற்றுவதில் சிக்கல் ஏற்படுவதும் அதைச் சீர் செய்யும் முயற்சியில் மனிதர்கள் கழிவு நீருக்குள் இறங்குவதும் நடைபெற்று வருகின்றன என்பதே நமக்குத் தலைகுனிவு! அந்த முயற்சியில் அவ்வப்போது சிலர் இறந்து போவதும் அந்த நிகழ்ச்சி எந்த வட்டாரத்திலும் எவ்வித பாதிப்பும் ஏற்படுத்தாமலிருப்பதும்




மிகப் பெரிய சமுதாய அவலம்.

அடைப்புகளை நீக்கும் அபாயப் பணிக்கு அயல்நாட்டு இயந்திரம் தருவிக்கப்பட்டதாக மாநகராட்சி சில ஆண்டுகளுக்கு முன் அறிவித்தது. ஆனால் அவ்வியந்திரங்கள் பழுதானதாலோ அல்லது அவற்றின் செயல்திறன் போதாமலிருப்பதாலோ மனிதர்கள் கழிவு நீருக்குள் இறங்குவது தொடர்கிறது!

இதைக் காட்டிலும் கேவலம் ஏதேனும் இருக்க முடியுமா? என்று கேட்டால், அதுவும் இருக்கிறது! சென்னை நெசப்பாக்கம் கழிவு நீர் சுத்திகரிப்பு ஆலையில் மூன்று பேர் விஷவாயு தாக்கி இறந்து போயிருக்கிறார்கள்!

சாலைகளில் உள்ள கழிவு நீர் கால்வாய்களுக்குள் இறங்கும் ஊழியர்கள்தான் அறியாமை காரணமாகவோ அசௌகரியமாய் இருப்பதாலோ முகமூடி அணியாமல் இறங்கி விடுகிறார்கள்.

சுத்திகரிப்பு நிலையத்தின் ஊழியர்கள் அப்படி இல்லை. அவர்களுக்குச் சில பாதுகாப்பு விதிமுறைகள் உண்டு. ஆனால், அந்த விதிமுறைகள் நெசப்பாக்கத்தில் கடைப்பிடிக்கப்பட்டனவா என்பது யாருக்கும் தெரியவில்லை.

ஒரு வால்வைத் திறப்பதற்காக கழிவு நீர் சேம்பருக்குள் சென்ற ஓர் ஊழியரை விஷ வாயு தாக்க, அவரைக் காப்பாற்ற வேறு இருவர் முயற்சி செய்ய, மூவருமே மாண்டு போயிருக்கிறார்கள்! இதுகூட அனுமானம்தான். விபத்து நடந்து முடிந்து பத்து நாட்களாகியும் போஸ்ட்மார்டம் அறிக்கை வந்தபாடில்லை!

இதில் கொடூரம் என்னவெனில், கடந்த இரண்டு ஆண்டுகளில் இது போன்ற நான்கு விபத்துகள் வெவ்வேறு கழிவுநீர் சுத்திகரிப்பு நிலையங்களில் நடந்திருக்கின்றன.

இவ்வளவு நடந்தபிறகுதான் கழிவுநீர் அகற்று வாரியம் விழித்துக்கொண்டு, ஆணை பிறப்பித்துள்ளது. கழிவுநீர் அகற்றுதல் தொடர்பான எந்தப் பணிக்கும் அடிப்படை பாதுகாப்பு விதிகள் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்று விரிவாக வகுத்துக் கொடுத்துள்ளதை நினைவூட்டி, அவை கடைப்பிடிக்கப்படுகின்றனவா என கண்காணிக்க ஏரியா எஞ்சினியர்களையும் ஜுனியர் எஞ்சினியர்களையும் பொறுப்பாக்கியிருக்கிறது.




எந்த நடவடிக்கையும் போன உயிர்களைப் பெற்றுத் தரப் போவதில்லை. இது போன்ற விபத்துகளில் இறந்தவர்கள் யாவருமே இளைஞர்கள்தான் என்பது இன்னும் வேதனைக்கு உரிய விஷயம்.

கழிவுநீர்க் கால்வாய்களில் அடைப்பு ஏற்படாத வண்ணம், கால்வாய்களை மட்டுமின்றி பம்பிங் ஸ்டேஷன்களையும் நவீனப்படுத்தினால் என்ன?

கால்வாய்களின் அடைப்புகளுக்கு முக்கிய காரணமாகச் சொல்லப்படும் மாடுகளை (அவற்றின் சாணம் அடைப்புகள் ஏற்படுத்தும்) நகரத்திலிருந்து அப்புறப்படுத்தும் சட்டத்தைக் கண்டிப்புடன் அமுல்படுத்தினால் என்ன...?

வீடுகளின் குப்பை கூளங்கள் சாக்கடைகளுக்குள் போய்ச் சேராமல் உடனுக்குடன் அகற்றப்பட வழி செய்தால் என்ன?

இத்தனையையும் மீறி அடைப்பு ஏற்பட்டால் அதை நீக்க வலுவான இயந்திரங்களை இறக்குமதி செய்தால் என்ன...? அல்லது அப்படிப்பட்ட இயந்திரங்களை இங்கேயே உருவாக்க ஆக்கமும் ஊக்கமும் அளித்தால் என்ன.

சுத்திகரிப்பு நிலையங்களில் ஆபத்தான பணிகளை இயந்திரமயமாக்கினால் என்ன...?

இவை அனைத்தையுமே செய்யும் பொறுப்பு கழிவுநீரகற்று வாரியத்துக்கு இருக்கிறது; அரசுக்கு இருக்கிறது.

கோடானுகோடி ரூபாய்கள் சென்னை நகரின் தோற்றப் பொலிவுக்காகவும் நவீன வசதிகளுக்காகவும் செலவிடப்பட்டு வருகிறது. சிங்காரச் சென்னை என்பது இந்த வசதிகளாலோ அலங்காரங்களாலோ முழுமை பெறாது.

கழிவு நீரகற்று வாரிய கடைநிலை ஊழியரின் கௌரவமும் பாதுகாப்பும் உறுதி செய்யப்படும்போதுதான் அது பூர்த்தியாகும்.

நெசப்பாக்கத்தில் உயிரை விட்ட திலீப்குமாரின் இரண்டு வயது மகன் விவரம் புரிந்து கேள்வி கேட்கும் வயதை எட்டும்போது, பதில் சொல்ல முடியாத நிலையில் இருப்போம். இன்னொரு திலீப்குமாரை நாம் காவு கொடுத்துவிடக் கூடாது. ○

தமிழ்நாட்டுவாசிகளுக்கு நெடுந்தூர பஸ் பயணம் என்றவுடன் ஞாபகத்துக்கு வருவது 'கே.பி.என்'தான். 'கே.பி.என்'னின் முதலாளி கே.பி. நடராஜனைச் சந்தித்து இந்த வெற்றியைப் பற்றி அலச விரும்பினோம். ஆனால் அதற்கு முன்பு சென்னையில் உள்ள 'கே.பி.என்' புக்கிங் சென்ட்டர்களுக்குப் போய், டிக்கட் ரிசர்வ் செய்து வெளியே வரும் 'கே.பி.என்' விசுவாசிகளை மடக்கி, 'கே.பி.என்'னில் உங்களுக்குப் பிடித்த விஷயம் என்ன?' என்று விசாரித்தோம். அவர்களுடைய பதில்களைத் தொகுத்து எடுத்துக்கொண்டு, ஒரு கே.பி.என். பஸ்ஸிலேயே விரைந்தோம் சேலத்துக்கு, நடராஜனை அவருடைய தலைமை அலுவலகத்தில் சந்திக்க...!

*உங்களுடைய வாடிக்கையாளர்களின் நற்சான்றிதழ்களோடு வந்திருக்கிறோம். அது ஒவ்வொன்றுக்கும் நீங்கள் விளக்கம் தந்தாலே உங்கள் வெற்றியை எங்களது வாசகர்கள் புரிந்து கொண்டு விடுவார்கள்...*



• கே.பி.நடராஜன்

என்னுடைய வாடிக்கையாளர்களின் பிரதிநிதியாக வந்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்கள், ரொம்ப சந்தோஷம்... அவர்களின் திருப்தியைவிட எனக்கு என்ன வேண்டும்?

**கே. கபாலீசுவரன், அந்தியூர், ஈரோடு:** *'சௌகரியமான பிரயாணம் அப்படீங்கற 'கான்ஸெப்ட்'ஐக் கொண்டு வந்தவங்க கே.பி.என்தானுங்களே...'*

அவர் சொல்வது உண்மைதான். எல்லோருமே முதலில் ஸ்பிரிங் சஸ்பென்ஷன் வண்டிகளைத்தான் ஓட்டிக் கொண்டிருந்தோம். 1994-ல் டி.வி.எஸ். முதலாளியிடம் ஏர்-சஸ்பென்ஷன் வண்டிகள் வேண்டும் என்று வலியுறுத்தி அவற்றை அறிமுகப்படுத்தியதோடு பிரபலப் படுத்தியதில் எங்களுக்குப் பெரிய பங்கு உண்டு.

ஏர் - சஸ்பென்ஷன் வண்டி பிரயா

ணம் என்பது காரைவிட சௌகரியமான ஒன்று. காரணம் இந்த வண்டிகளில், வண்டியின் 'பாடி'க்கும் சஸ்பென்ஷனுக்கும் இடையில் உள்ள காற்றடைத்த பலூன் மேடு பள்ளங்களில் ஏற்படும் எல்லா அதிர்வுகளையும் உள் வாங்கிக் கொள்கிறது. பலன், பயணம் செய்யும் அலுப்பு கொஞ்சம்கூட தெரியாது.

இரவோடு இரவாகப் பிரயாணம் செய்பவர்கள் அடுத்தநாள் காலை ஊர் போய்ச் சேர்ந்தவுடன் அவரவர் வேலையை உடனே தொடங்கக்கூடிய அளவில் பிரயாணம் இருக்க வேண்டுமே தவிர பிரயாண களைப்புத் தீரவே இரண்டு நாள் ஆகும் என்கிற

# சலவை இயந்திரம் வாங்கிய பஸ் கம்பெனி!

நிலைமை இருந்தால் எப்படி? இதைப் பற்றி ரொம்ப நாளாகவே யோசித்துக்கொண்டுதான் இருந்தோம். என்றாலும் 1994ல்தான் எண்ணம் நிறைவேறியது.

பிரயாணம் இன்னும்கூட சௌகரியமாக இருக்க வேண்டும் என்றால் ஏர்-கண்டிஷனிங் செய்யப்பட்ட வண்டிகள் நிறைய ஓட வேண்டும். '97ல் நான்கு சாதாரண வண்டிக்கு ஒரு ஏ.ஸி வண்டி என்ற கணக்கில் ஓட்ட ஆரம்பித்து இன்று மூன்றுக்கு ஒன்று என்ற அளவில் ஆபரேட் செய்து கொண்டிருக்கிறோம். 2002ல் எல்லா வண்டிகளையும் 'ஏ.ஸி' ஆக்கிவிடுவது என்பதில் முழு மூச்சாக இறங்கியிருக்கிறோம்.

**கே.பி.சிங், மல்லேசுவரம், பெங்களூர்: 'ஆக்ஸிடண்ட்'னு பார்த்தா இவங்க வண்டி சாமானியா ஆக்ஸிடண்ட் ஆவறதில்லே, எப்படின்னே தெரியலை...**

மற்ற தொழில்களில் தவறு ஏற்பட்டால் பணமோ பொருளோதான் நஷ்டம். ஆனால் எங்க தொழிலில் தவறு ஏற்பட்டால்... ஐயோ நினைக்கவே அச்சமாக இருக்கிறது. விலை மதிக்க முடியாத உயிர்களோடு விளையாடலாமா?

எங்களைப் பொறுத்தவரை விபத்து குறைச்சலாக இருப்பதற்கு மூன்று காரணங்கள்.

ஒன்று, முப்பத்தைந்து வயதுக்குக் குறைந்த டிரைவர்களை நாங்கள் வேலைக்கு எடுத்துக் கொள்வதே இல்லை. 'இளங்கன்று பயம் அறியாது' என்று சொல்வோமில்லையா, அதற்காகத்தான். அது மட்டுமல்லாமல் அவருக்குக் குறைந்தது பத்து வருடம் அனுபவம் இருக்க வேண்டும், பிளாக்மார்க் இல்லாமல்.

ஒரு டிரைவர், ஓட்டும்போது தவறு செய்தால் ஒரு தடவை எச்சரிக்கை செய்வோம். இரண்டு தடவை செய்வோம். மூன்றாவது தடவை தவறு செய்தால் அவர் எவ்வளவு அனுபவம் உள்ளவராக இருந்தாலும் சரி, பல வருடங்கள் எங்களுக்கு ஓட்டியவராக இருந்தாலும் சரி, அடுத்த நிமிஷமே மறு பேச்சின்றி வேலையிலிருந்து

தூக்கி விடுவோம். வேறு எந்த விஷயத்திலும் மன்னிக்கலாம், இது ஒன்றைத் தவிர!

**எம். சுப்பிரமணியம், தி.நகர், சென்னை:**

*"நான் இரண்டு மாசத்துக்கு ஒரு தடவை திருச்சிக்குப் போகற வேலை வரும். சுமார் இருபது வருஷமாய் கே.பி.என்னில் போய் வந்துகிட்டு இருக்கேன். என்னோட அனுபவத்தில் ஒரே ஒரு தடவைதாங்க வண்டி பிரேக்-டவுன் ஆகியிருக்கு. ஆனால் அப்போகூட ஒரு மணி நேரத்துக்குள்ள எல்லா பயணிகளையும் டக்கு-டக்குன்னு பின்னாடி வந்த இவங்களோட வண்டிங்களில் ஏத்தி விட்டுட்டாங்க... அது ஒரு பெரிய சௌகரியம் இவங்ககிட்ட. அதே ரூட்ல இவங்க வண்டிங்க வந்தமயமாக இருக்கும்!*

**''பிரயாணம் என்பது பயணிகளைச் சொன்ன நேரத்துக்குக் கொண்டு போய் பத்திரமாக விட்டு விடுவது மட்டும் அல்ல...''**

பிரேக் - டவுன் கம்மியாக இருப்பதற்கு காரணம் வண்டிகளின் பராமரிப்பு. வண்டி என்பது என்ன... ஓர் இயந்திரம். அதுக்கு தேய்மானம் இல்லாமல் இருக்குமா? சர்வீஸ் ஆகட்டும், தேய்ந்த பாகங்களை மாற்றுவதாகட்டும், அதற்கு வேண்டியதைக் கச்சிதமாகச் செய்துவிட்டால் அது ஒருக்காலும் நம்மைக் காலை வாரி விடாது! அது மட்டுமல்ல, வண்டியின் ஆயுளுக்கு ஒரு வரம்பு இருக்கிறது. அதை மனத்தில் கொண்டு வண்டிகளை மாற்றிக் கொண்டே இருக்க வேண்டும்.

இதையும் மீறி எப்படி பிரேக்-டவுன் ஆகிறது என்கிறீர்களா? நான் மேலே சொன்னதுபோல் பராமரிப்பு செய்தால் மெக்கானிக்கல் - பிரேக் டவுனை தான் முழுவதுமாய்த் தடுக்க முடியும்: ஆனால் இந்த ஏர்-சஸ்பென்ஷன் இருக்கிறது பாருங்கள். அதில் ஒரு சிறு கல் அடித்தாலும்கூட போதும், காற்று லீக்காகி வண்டி உட்கார்ந்துவிடும். இந்தப் பிரச்னையை மட்டும் ஒன்றுமே செய்ய முடியாது.

இந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்வோம் தெரியுமா?

எங்களுடைய எல்லா ஆபீஸ்களும் வயர்லெஸ் மூலம் கனெக்ட் ஆகியிருக்கின்றன. ஒவ்வொரு ரூட்டிலும் ஒரு ஆபீஸ், சென்டர் - பாயிண்டாக இருக்கும். உதாரணத்துக்கு, சென்னை - திருச்சி ரூட்டை எடுத்துக் கொள்ளுங்கள். இதில் விழுப்புரம் ஆபீஸ்தான் சென்டர் - பாயிண்ட். ஒவ்வொரு சென்டர் - பாயின்ட்டிலும் பிரேக்-வான் தயாராய் இருக்கும். தகவல் வயர்லெஸ்ஸில் போய், பிரேக்-வான் உடனே கிளம்பிவிடும்.

சுப்பிரமணியம் சொன்னது போல், இடையில், அந்த ரூட்டில் போகும் எங்களுடைய வண்டிகளிலேயே எல்லா பயணிகளையும் ஏற்றி அனுப்பி விடுவோம். சேலத்திலிருந்து சென்னைக்குப் போகும் வழியில் பிரேக்-டவுன் என்று வைத்துக் கொள்ளுங்கள். விழுப்புரத்தைத் தாண்டி என்றால் கால்மணி நேரத்துக்கு ஒரு வண்டியும் விழுப்புரத்துக்கு முன்னாடி என்றால் அரை மணி நேரத்துக்கு ஒரு வண்டியும் வந்து கொண்டிருக்கும். இதனால் பயணிகள் அதிக நேரம் விரயம் ஆகாமல் பயணத்தைத் தொடர முடிகிறது.

**ஏ.ஆர். இராமனாதன், அண்ணாநகர், திருச்சி:**

*'கே.பி.என்.இல் மட்டும் பாருங்க, இந்த டிரைவருங்க பணம் வாங்கிகிட்டு 'கேபின்'ல் ஆளுங்களை ஏத்துகிற கசமுசா வேலை எல்லாம் இருக்காது... டிரைவருங்க வருவாங்க, 'நீட்'டா வண்டியை எடுப்பாங்க, போய்க்கிட்டே இருப்பாங்க...*

ஊழியர்கள் தவறு செய்வதற்குச் சந்தர்ப்பத்தை நாம் ஏற்படுத்திக் கொடுத்து விட்டு தவறு செய்கிறார்களே, தவறு செய்கிறார்களே என்று புலம்புவதில் அர்த்தமில்லை என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை!

இப்பொழுது, கேபினுக்குள் இடம் இருப்பதால்தானே ஒரு டிரைவர் அப்படிச் செய்கிறார்? அதற்கு அவருக்கு வழி இல்லாமல் செய்துவிட்டால்?

பொதுவாக வண்டியின் கதவு முன் சக்கரங்களுக்குப் பின்னால் இருக்கும். அதனால் டிரைவருக்குக் காபினுக்குள் ஆட்களை உட்கார வைக்கும் அளவுக்கு இடம் கிடைக்கும். ஆனால் எங்கள் வண்டிகளைக் கவனித்துப் பார்த்தீர்களானால் டிரைவரைப் பார்த்துக் கொண்டே ஏறுவதைப் போல் முன் கதவு அமைத்திருக்கிறோம். பலன், அவருடைய காபின், பயணிகள் உபயோகப்படுத்தும்

பாதையாகிவிடுகிறது. இப்போது அவர் எப்படி கூடுதல் பயணிகளை அங்கு உட்கார வைப்பார்? இது போக வழிநெடுக செக்கிங்-பாயிண்ட்டுகளும் வைத்திருக்கிறோம், அதனால் இந்த மாதிரி தவறுகளை எளிதில் செய்து விட முடியாது!

**எல். சிவசங்கர், குரோம்பேட்டை, சென்னை:**

*'கே.பி.என்.ஐப் பொறுத்தவரை டிரைவர் ஆகட்டும், கிளீனர் ஆகட்டும், ரொம்ப கண்ணியமா நடந்துக்குவாங்க. இந்த 'வாய்யா போய்யா' பேச்செல்லாம் இடையாது. மரியாதை கொடுத்து மரியாதை வாங்கும்போது சந்தோஷமா இருக்கும்...*

ஓர் ஊழியர் பயணியிடம் எரிந்து விழாமல் அன்பாக மரியாதையாக நடந்துகொள்ள வேண்டுமென்றால் அவருடைய வேலை அவருக்குச் சந்தோஷத்தைத் தர வேண்டும். இதை எப்படி சாத்தியப்படுத்துவது?

ஒன்று, அவருடைய சம்பளத்தைப் பொறுத்தவரை ஒரு குறையும் இல்லாமல் பார்த்துக்கொள்கிறோம். இரண்டு, அவருக்கு எந்த கூடுதல் பொறுப்பையும் தராமல் இருக்கிறோம். நான் பல கம்பெனிகளில் பார்த்திருக்கிறேன். எவ்வளவுக்கு எவ்வளவு பயணிகளின் எண்ணிக்கை கூடுகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு டிரைவரின் பேட்டா கூடும். இங்குதான் பல பிரச்னைகள் ஆரம்பமாகின்றன. பயணிகளைச் சேர்ப்பது நம் வேலையா அவர் வேலையா? அவருடைய 'பேட்டா'வை ஏன் இதில் போட்டுக் குழப்ப வேண்டும்? 'கே.பி.என்'னைப் பொறுத்தவரை டிரைவரையும் கிளீனரையும் விடுத்து பயணிகளே இல்லை என்றாலும் வண்டி ரூட்டில் ஓடித்தான் ஆக வேண்டும்; அவருடைய பேட்டாவையும் முழுவதுமாய் அவருக்குக் கொடுத்துத்தான் ஆக வேண்டும்.

இதையும் மீறி அவர் சரியாக நடந்துகொள்ளவில்லை என்றால் எங்களது வாடிக்கையாளர்கள் உடனே தொலைபேசி மூலமோ லெட்டர் மூலம் புகார் அனுப்பி விடுவார்கள். (கே.பி.என். னில் பயணிப்பவர்களில் 80% 'ரெகுலர்' வாடிக்கையாளர்கள்) கம்ப்ளெயிண்ட்டை முதலில் உறுதி செய்வோம். இதற்காகவே ஒவ்வொரு சனிக்கிழமையும் தலைமை ஆபீஸில் மீட்டிங் இருக்கிறது. இந்த மீட்டிங்குக்கு 50 டிரைவர்களும் 25 கிளீனர்களும் 'ரொட்டேஷன்' இல் டர்ன் எடுத்துக்கொண்டு வருவார்கள். அதாவது மாதக் கடைசியில் சம்பளம் கொடுப்பதற்குப் பதில் இருபது நாட்கள் டூட்டி முடிந்தவுடன், டிரைவர்களும் கிளீனர்களும் இங்கு நேரே வந்து சம்பளத்தை வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லியிருக்கிறோம். அப்படி அவர்கள் வரும்போது இந்த 'மீட்டிங்'ஐ கண்டிப்பாக அடெண்ட் செய்ய வேண்டும். வந்திருக்கும் டிரைவர்களைப் பற்றியோ கிளீனர்களைப் பற்றியோ கம்ப்ளெயிண்ட் பதிவு ஆகியிருந்தால் அந்த கம்ப்ளெயிண்ட்டை மீட்டிங்கிலேயே படிப்போம், விளக்கம் கேட்போம். அவர் பேரில் தவறு இருக்கிறது என்று உறுதியாகி விட்டால் அவர் குறிப்பிட்ட பயணியிடம் நேரே போய் மன்னிப்பு கேட்டு, 'டிரைவர் என்னிடம் மன்னிப்பு கேட்டு விட்டார், நீங்கள் அவரை விட்டு விடுங்கள்!' என்று பயணியிடமிருந்து கடிதம் வாங்கி வர வேண்டும். அந்தக் கடிதம் வந்த பிறகுதான் அவருக்கு 'டூட்டி'யே போடுவோம். அது எவ்வளவு தாமதமானாலும் சரி. காரணம், எங்களுக்கு டிரைவரை விட பயணிதான் முக்கியம். டிரைவர் இன்றைக்கு இருப்பார். நாளைக்கு இன்னொரு கம்பெனிக்குப் போய் விடுவார். ஆனால் வாடிக்கையாளர் அப்படிப் போய்விடக் கூடாது பாருங்கள்!

**சு. மயில்வாகனன், நியூ பஸ் ஸ்டாண்டு, சேலம்:**

*'கே.பி.என்'கிட்டே எனக்கு ரொம்பப் பிடிச்ச விஷயம் டிக்கட் - ரீஃபண்டு சிஸ்டம்தானுங்க, எத்தனை தடவை வேணு*





*மானாலும் மாத்திக்கலாம்!*

ஆமாம்... எது நினைத்தபடி நடக்கிறது சொல்லுங்கள். பயணத்தைப் பொறுத்தவரை வண்டி ஸ்டாண்டிலிருந்து கிளம்பினால்தான் பயணமே உறுதி என்கிற அளவுக்கு எவ்வளவு தடங்கல்கள்? அப்படி இருக்கும்போது 'ரீஃபண்டு' வசதி இல்லாவிட்டால் எப்படி?

வண்டி கிளம்பிவிட்டால்கூட பயணத்தை ரத்து செய்த வாடிக்கையாளர்கள் ஹெட்-ஆபீசுக்கு எழுதிக் கேட்கலாம். உடனே அதே தொகைக்கு மூன்று மாதத்துக்கு செல்லுபடியாகும் ஒரு 'ஃப்ரீ ட்ராவல் பாஸ்'ஐ அனுப்பி வைத்து விடுவோம். பயணத்தை எப்போழுது வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். மூன்று மாதத்துக்குள் பாஸை உபயோகப் படுத்த வேண்டும் என்பது இல்லை. எக்ஸ்டெண்டு பண்ணிக் கொண்டே போகலாம். அப்படியும் பயணத்தை மேற்கொள்ள முடியவில்லை என்றால் இருக்கவே இருக்கிறது கான்சலேஷன் முறை, டிக்கட் விலையில் தொண்ணூறு சதவீதம் ரீஃபண்டு செய்து விடுவோம்.

**கே. கண்ணன், திருச்சூர்:**

***'கே.பி.என்'னோட வண்டிகளைப் பார்த்தீங்கன்னா உள்ளேயும் சரி, வெளியேயும் சரி சுத்தமா பளிச்சுன்னு வைச்சிருப்பாங்க. ஒவ்வொரு வண்டியும் பார்த்தா ஏதோ அன்னிக்குத்தான் வாங்கினாப்போல புதுசா இருக்கும்...***

*(பலமாகச் சிரிக்கிறார்...)* உண்மைதான். பிரயாணம் என்பது சொன்ன டயத்துக்குக் கொண்டு போய் பத்திரமாக விட்டுவிடுவது மட்டும் அல்ல. பயணிகளுக்கு எவ்வளவு சௌகரியம் செய்து கொடுக்க முடியுமோ அவ்வளவையும் செய்து கொடுக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை.

இப்போது பாருங்கள் சென்னை – திருச்சி செக்டாரில் வீட்டுகளுக்கு உபயோகப்படுத்தும் 'வெள்ளை-ஹேண்ட்ரெஸ்ட்' துணியை நான்தான் அறிமுகப்படுத்தினேன். ஒன்றரை மாதத்துக்கு முன்பு சென்னைக்கு நான் போவதற்காக நமது வண்டியில் ஏறினேன். ஏறியவுடன் ஏதோ ஒரு எண்ணெய் சிக்கு வாசனை. காரணம் கேட்டால், துணிகளை சென்னையில் துவைத்தோம், நல்ல தண்ணீர் கிடைக்கவில்லை என்கிறார்கள். ரொம்பவும் வருத்தமாகிவிட்டது. எட்டு மணி நேரத்துக்கு பயணிகள் இந்த வாசனையைப் பொறுத்துக் கொள்வது என்பது அவர்கள் 'கே.பி.என்'ஐ செலக்ட் செய்ததற்குத் தண்டனையா என்ன?

போன வேலையை அப்படியே போட்டு விட்டு, திரும்ப சேலத்துக்கே வந்துவிட்டேன். உடனே, பத்து லட்ச ரூபாய் செலவில் ஒரு 'ஆட்டோமேடிக் சலவை செய்யும் யூனிட்' வாங்கி விட்டேன். வேண்டிய கெமிக்கல்களை ஹிந்துஸ்தான் லீவர் சப்ளை செய்யப் போகிறார்கள். வருகிற ஒன்றாம் தேதியிலிருந்து எல்லா துணிகளும் 'வாஷ்'க்கு சேலத்துக்கு வரப் போகின்றன. இன்னும் கூட 'பளிச்'சென்று வாசனையாக இருக்கப் போகின்றன. என் வாடிக்கையாளர்கள் இன்னும் கூட சந்தோஷப்படப் போகிறார்கள்!

வரும்போது நமது வண்டியில்தான் வந்ததாகச் சொன்னீர்கள், நீங்கள் பார்த்த வரைக்கும் நானும் என் வாடிக்கையாளர்களும் சொன்னது சரியாக இருந்தது இல்லையா? *(சிரிக்கிறார்)*

பேட்டி: **கிருஷ்ணா சிதம்பரம்**
படங்கள்: **கே. கண்ணன்**

ஸ்ரீ மாத்ரே நம :

# ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா

ஸற்குணேஸ்வரபுரம் : கருவிலி. (Via)எரவாஞ்சேரி – 609 501.

## ஸ்ரீ சதசண்டி ஹோமம்

அன்புடையீர்,

ஸ்ரீ ஸற்குணேச்வர கைங்கர்ய ஸபா பல நற்பணிகளை ஆற்றி வருகிறது. இவற்றின் தொடர்ச்சியாக தை மாதம் 13-ஆம் தேதி முதல் 15 -ஆம் தேதி முடிய (26.01.2001 முதல் 28.01.2001 முடிய) மூன்று தினங்கள் **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வரர்** திருக்கோயில் வளாகத்தில் உலக நலனை முன்னிட்டு **ஸ்ரீ சதசண்டீ** ஹோமம் நடைபெற இருக்கின்றது. இவை நாட்டின் அமைதியற்ற சூழ்நிலையைக் கருதியும், ஸநாதன தர்மத்தில் மக்களுக்கு மாறுபாடில்லாத நம்பிக்கை உண்டாக விரும்பியும் தினசரி வேத பாராயணங்களும், ஸங்கல்ப பூர்வகமாக ஸுந்தர காண்ட பாராயணங்களும் நடைபெற இருக்கின்றன.

மேலும் தினசரி ஸ்ரீ ருத்ரத்ரிசதி, லலிதா ஸஹஸ்ரநாம, ஸ்ரீலலிதா த்ரிசதி பாராயணங்கள் மற்றும் அர்ச்சனைகள், ஸ்ரீசிவ கவச, இந்திராக்ஷி, விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர பாராயணங்களும் ஸங்கல்ப பூர்வகமாக நடைபெற இருக்கின்றன.



பரப்பிரும்ம தத்துவத்திற்கு ஈச்வரத் தன்மையை அருளும் அருட் சக்தியை, பிரும்ம விஷ்ணு ருத்ரர்களால் எல்லா காலங்களிலும் வணங்கப்படும் மஹா சக்தியை வழிபடும் பேறு, புண்ணியம் மிகுந்தவர்களுக்கே கிடைக்கும். நமக்கு இந்தப் பேறு கிடைத்திருக்கிறது. ஆபத்துக்களையும், துன்பங்களையும் அப்போதே நீக்குவது **சண்டீ பாராயணம்**. அம்பிகையின் அருளொளியை உணரச் செய்வது **சண்டீ பாராயணம்**. பல பிறவிகளில் சேர்ந்த பாவங்களை நீக்குவது **சண்டீ பாராயணம்.**

இவை சிறப்பாக நடந்தேற அனைவரும் தங்களால் இயன்றதை பொருளாகவோ பணமாகவோ கீழ்க்கண்ட ஸபாவின் பெயருக்கு அனுப்பக் கோருகிறோம்.

ரூ. 500/-ம் அதற்கு மேலும் நன்கொடை அளிப்பவர்களுக்கு பூஜையில் வைத்து **அபிமந்திரிக்கப்பட்ட 10 கிராம் வெள்ளி டாலர் பிரசாதத்துடன் வழங்கப்பட உள்ளது.**

குடந்தை பூந்தோட்டம் நெடுஞ்சாலையில் குடந்தையிலிருந்து 21 கி.மீ. தொலைவில் உள்ள **கருவிலியில்**, அரசலாறு நதிக்கரையில் பாவம் தீர்க்கும் யமதீர்த்தத்தின் மேற்புறத்தில் **ஸ்ரீ சர்வாங்க ஸுந்தரி சமேத ஸ்ரீ சற்குணேச்வரர்**, திருக்கயிலாயம் துறந்து கோயில் கொண்டு அருள்பாலித்து வருகின்றார்கள். தன் கருணைக் கடாக்ஷத்தால் அப்போதே துயர் துடைக்கும் **ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரியின்** திருவடிவாரத்தில் இவை நடைபெறுவது கூடுதலான அரிய சிறப்புப் பொருந்தியதாகும். இந்த ஞான வேள்வியில் அனைவரும் பங்கேற்க வேண்டுகிறோம்.

சிறப்புப் பேருந்து வசதிகளும், உணவு மற்றும் இருப்பிட வசதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

**கருவிலி**
*20.11.2000*

இங்ஙனம்,
**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா நிர்வாகிகள்**

பி.கு : பொருளாகவோ, பணமாகவோ நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரிகள் :

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா**

1. ஸ்வாமி ஸ்ரீ ஸச்சிதானந்தா,
ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருக்கோயில்
ஸற்குணேச்வரபுரம்,
எரவாஞ்சேரி (வழி) – 609 501.

2. G. குஞ்சிதபாதம், F.C.A.,
G. நடேசன் & Co.,
டபீர் மேலத் தெரு,
கும்பகோணம் – 612 001.

3. G.கண்ணன், D/127-A, ராஜமன்னார் சாலை, கே. கே. நகர், சென்னை – 78.

# புதன் என்றால் வியாழனில்லை!

கொஞ்சம் கன்ஃப்யூஷன்ல இருக்கேன். எங்க அலோபதி மெடிசன் பிரகாரம் எண்ணெய் குளியல் எல்லாம் சுத்த வேஸ்ட்! ஆனா சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்திரி எழுதின 'நலமிக்க வாழ்க்கை முறை' (அகஸ்தியர் புத்தக சாலை, 33, நந்தி கோயில் தெரு, திருச்சி-2) புக்ல எண்ணெய் தேச்சு குளிச்சா ஆயுள் அதிகரிக்கும்னு எழுதியிருக்கார்! சரகர், ஸுசுருதர், தேரையர்னு 'திரேதா யுகத்து' டாக்டர்ஸ் சொன்ன ஹெல்த் கேர் டிப்ஸ் நிறைய இருக்கற புக்.



ஆயில் பாத்லேயும் கேரளா மெதட்தான் பெஸ்ட்டாம். ஆயில் பாத் கச்சிதமா அமையணும்னா 'அஞ்சு காயணும்'ன்றது மலையாளத்து ரூலிங். ஆயில், வெயில், வயிறு, சியக்காய், தண்ணி... இந்த அஞ்சும் காஞ்சா ஐடியல் பாத்!

மண்டை காயுதுன்றீங்களா...? இதைக் கேளுங்க. இதே சாஸ்திரி எழுதியிருக்கற உணவும் பானமும் புக் பிரகாரம் பாயில்ட் வாட்டர் சாப்பிடக் கூட எக்கச்சக்க ரூல்ஸ் இருக்கு!

மார்னிங் பாயில் செஞ்சதை நைட் சாப்பிடக் கூடாது. நைட் பாயில் பண்ணினா டே டைம்ல அதைக் குடிக்கக் கூடாது. டபராடம்ளர்ல ஆத்தி கூல் பண்ணக் கூடாது. சித்திரை மாசம் அக்னி நட்சத்திரத்துல, சூரியன் சஞ்சரிக்கும்போது பெய்யற மழை தண்ணி தான் ஹெல்தியாம்!

என்ன சொல்றீங்க... தண்ணி லாரி வர்ற டைம் சுமி! அறுக்காதே யூஸ்ஃபுலா ஏதாவது இருக்கான்றீங்களா...?

• சுரேஷ் கிருஷ்ணா

இருக்கே! சுந்தரம் ஃபாஸனர்ஸ் கம்பெனியோட சி.எம்.டி. சுரேஷ் கிருஷ்ணா, மூணு மாசம் முன்னாடி டெல்லியில் ஒரு லெக்சர் கொடுத்திருக்கார். சில பகுதிகளை ஹிந்து பேப்பர்ல எடுத்துப் போட்டிருந்தாங்க. தாராளமயமாக்கல்ன்றது எப்படி இந்தியத் தொழில்துறையைப் பாதிச்சிருக்கு, இன்னும் பாதிக்கும்ன்றதைப் பத்தி... கவர்ன்மென்டோட அரவணைப்பு குறைஞ்ச, போட்டியும் அதிகமாயிட்ட நிலையில பெரும்பாலான இன்டஸ்ட்ரீஸ் வளர்றதுக்குப் பதிலா திணறுதுன்றார். காரணம், உலகத்தரம் - ஏன் தரம்-ன்றதுக்குக்கூட நம்ம நாட்டுல முக்கியத்துவம் குடுக்கப்படறதில்லே அப்படின்றார் கிருஷ்ணா. ஜெனரல் மோட்டர்ஸ் மாதிரி ஒரு கம்பெனிக்கு ஸ்பேர்பார்ட்ஸ் சப்ளை செஞ்சா தரம்ன்றது தயாரிக்கற பொருள்ள இருந்தா போதாது. அதை எங்கே, எப்போ டெலிவர் செய்யணுமோ அங்கே அப்போ கொடுத்தாகணும். இந்தியாவுல தான் புதன் கிழமைன்னு கெடு வைச்சுட்டு, வியாழக்கிழமை கிடைச்சுருச்சேன்னு சந்தோஷப் படுவோம். இந்த காம்ப்ரமைஸ் இருக்கவே கூடாதுன்றார்.

''என் கம்பெனி நாலு வருஷமா தொடர்ந்து ஜெனரல் மோட்டர்ஸ்கிட்டே பெஸ்ட் சப்ளையர் அவார்ட் வாங்கிட்டு வருது. சுந்தரம் ஃபாஸனர்ஸால முடியும்னா ஏன் மத்த நிறுவனங்களால முடியாது?''ன்னு கேட்கறார். "உயர் தரம்ன்றது நமக்கு ரிலீஜியனா இருக்கணும்- எந்த பிரதிபலனுக்காகவுமில்லாம எக்ஸலன்ஸுக்காக மட்டுமே எக்ஸலன்ஸ்னு கொண்டா இருந்தா யாரும் சாதிக்கலாம்.''....

செமை உற்சாகமா இல்லை இதைப் படிக்கறபோது...!

— சுமி

**கல்யாணபுரம் ஆராவமுதன்**

# 26

**ச**ஞ்சீவி மலையை ஹனுமான் கொய்து எடுத்துவந்து வைத்துவிட்டு 'சிரஞ்சீவி' என்று பட்டமும் பெற்று விட்டான் ஸ்ரீராமனிடத்திலே என்றேன்.

துளஸிதாஸர் இருக்கிறாரே... அவர் ஹனுமானுக்கு அவ்வளவு சுலபத்தில் அந்தப் பட்டத்தைப் பெறும் வாய்ப்பு தரவில்லை. சஞ்சீவியை அவன் கொண்டு சேர்க்கும் முன் விதவிதமான சோதனைகளுக்கு அவனை உட்படுத்தி கதையை அமைக்கிறார். அதிலே ஹனுமான் எப்படியெல்லாம் பராக்கிரமசாலியாக வெளிப்படுகிறான் என்று பாருங்

கள்:

ஹனுமான் மூலிகைகளைத் தேடிப் புறப்பட்ட உடனேயே, ஒரு ராக்ஷஸ ஒற்றன் ராவணனிடத்தில் போய் விவரத்தைச் சொல்லி விட்டான்! சூரியோதயத்துக்கு முன்பு ஹனுமான் மூலிகைகளோடு வந்து விட்டால், ராம-லக்ஷ்மணர்களும் வானர சேனையினரும் பிழைத்து விடுவார்கள். ஏதாவது செய்து ஹனுமானைத் தடுத்தாக வேண்டும்.

பார்த்தான் ராவணன்! காலநேமி என்ற அரக்கனை அழைத்தான். 'ஹனுமானை எப்படியாவது தடுத்து நிறுத்திவிடு' என்று உத்தர விட்டான்.

காலநேமி ராவணனைப் பார்த்துச் சொன்னானாம்: "ராவணா! நான் சொல்வதைக் கேள்! ரகுபதியை நமஸ்கரித்து பூஜிப்பதுதான் உனக்கு நல்லது. உன் ராஜ்யத்துக்கு நெருப்பு வைத்ததே அந்த வானரம்... அப்போது உன்னால் என்ன செய்ய முடிந்தது? இப்போது அதே வானரத்தைத் தடுத்து நிறுத்தச் சொல்கிறாய். அது நடவாத காரியம்."

வந்ததே ராவணனுக்குக் கோபம்! ராஜாவின் கோபத்தைக் கண்ட காலநேமி நினைத்தானாம்- 'சரி! எப்படி



# ஸ்ரீராமபக்த ஹனுமான்

யிருந்தாலும் நமக்கு முடிவு நிச்சயம். சொன்னதைக் கேட்காவிட்டால் ராவணன் ஒழித்துவிடுவான் நம்மை; அதற்குப் பதிலாக ஹனுமான் கையால் சாவதே மேல்!'

இந்த முடிவுக்கு வந்த காலநேமி புறப்பட்டுப் போய்விட்டான் ஹனுமானை எதிர்கொண்டு, இமயமலை செல்லாமல் தடுக்க. மாயா சக்தியினால் ஓர் உலகத்தை சிருஷ்டித்து ஹனுமானின் வழியை மறைத்தான்.

ஹனுமான் பறந்து வரும் வழியிலே பார்க்கிறான்- குளம்-குட்டைகள், அழகான நந்தவனங்கள் அவனை மயக்கி ஈர்க்கின்றன. அந்த நந்தவனங்களிலே காலநேமியும் இன்னும் பல அசுரர்களும் முனிவர்களாகத் தோற்றம் கொண்டு உட்கார்ந்திருக்கின்றனர். எல்லோருமே ராமநாமத்தை ஜபிக்கின்றனர்! ராம நாமம் கேட்டால் ஹனுமான் வெறுமே கடந்து போவானா...? அத்தனை பேரும் ராம பக்தர்கள் என்றே எண்ணிவிட்டான். நெருங்கிப் போனான்.

"ராமதூதனே!" என்று அவனை அழைத்த காலநேமி சொன்னான்: "நீ யார்

## சஞ்சீவியின் சிறு பகுதி!

ஹனுமான் இமயமலைச் சிகரம் சென்று சஞ்சீவி மலையை ஏந்தி வந்த போது, அதன் ஒரு பகுதி ஸ்ரீமுஷ்ணத்தில் விழுந்ததாகக் கூறப்படுகிறது. இதில் விசேஷம் என்னவென்றால் மலையின் கூர்மையான பகுதி பூமியிலும் அகலப் பகுதி மேலேயும் உள்ளபடி இது அமைந்துள்ளது. அதில் உறைகின்ற ஹனுமான் கோவில் மிகவும் பிரசித்தி பெற்று விளங்குகிறது.

ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரமாய் ஸ்ரீபூவராஹப் பெருமாள் கோயில் கொண்ட திருத்தலமான ஸ்ரீமுஷ்ணத்தில் உறைகின்ற ஸ்ரீ ஆஞ்சநேயன் மிகுந்த வரப்ரஸாதி.

என்பதை எனது ஞான திருஷ்டியினால் கண்டுகொண்டேன். ராமனுக்கும் ராவணனுக்கும் கொடிய யுத்தம் ஏற்படப் போகிறது. அதிலே ராமன்தான் ஜயிப்பார்- இது குறித்துச் சந்தேகமே உனக்கு வேண்டாம். போய், அருகிலுள்ள குளத்தில் நீராடி விட்டு வா!"

ஹனுமான் முனிவர் சொல் தட்டாமல் குளத்தை நாடிச் சென்றான். அவன் காலை ஒரு முதலை பற்றியது. துணுக்குற்ற ஹனுமான் தன் வலிமையான கரங்களால் முதலையை விலக்கி நீக்கிக் கொன்றான். முதலை உயிர்த் துறந்தது. அதனிடத்திலே ஓர் அழகான அப்ஸர ஸ்த்ரீ தோன்றினாள்.

"ஆஞ்சனேயா! ஒரு சாபத்துக்கு உட்பட்டு முதலையாக மாறியிருந்த நான் உனது கரம் பட்டதால் மீண்டும் புனிதமாகி பழைய உருவம் பெற்றுள்ளேன்" என்றாள். "இங்கே உள்ள முனிவர்களெல்லாம் முனிவர்களே அல்ல; அவர்கள் அனைவரும் அரக்கர்கள் ஆவர்..." என்று எச்சரித்துவிட்டுப் போய் விட்டாள் அந்த ஸ்த்ரீ.

ஹனுமான் பார்த்தான். நடுநாயகமாக இருந்த காலநேமியிடம் போனான். சொன்னான்: "முனிசிரேஷ்டரே! உங்களுக்கு குரு தக்ஷிணை தர விரும்புகிறேன். ஆதலால் எனக்கு ஏதேனும் மந்திரத்தை உபதேசம் செய்யுங்கள்..." என்றான்.

காலநேமிக்கு நடப்பது இன்னதென்று புரிவதற்குள் தனது வாலில் அவனை இறுகக் கட்டிவிட்டிருந்தான் ஹனுமான். வாலைச் சுழற்றி பூமியில் ஓர் அடி அடிக்க, காலநேமி அப்படியே அழிந்துபோனான்! அதைத் தொடர்ந்து சண்டைக்கு வந்த அத்தனை அசுரர்களுக்கும் ஹனுமானின் கையாலும் வாலாலும் அதே கதிதான் கிடைத்தது.

எல்லோரையும் ஹதாஹதம் செய்துவிட்டு இமயமலைச் சாரலை அடைந்து, சஞ்சீவி பர்வதத்தைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு மீண்டு வருகிறான். அயோத்தியாபுரியின் மேலாகக் கடந்து வரவேண்டியிருக்கிறது. கையில் மலையேந்தி பறக்கும் உருவத்தைக் கண்டு அங்கே அயோத்தியிலே- இருக்கிற பரதனுக்குச் சந்தேகம் வந்துவிட்டதாம். யாரோ அரக்கன்தான் கோசல நாட்டுக்கு மேலாகப் பறப்பதாக எண்ணி, ஹனுமான் பேரில் ஒரு பாணத்தை எய்கிறான் பரதன். அது சென்று அந்த ராமபக்தனின் மார்பில் தாக்குகிறது. தாங்க முடியாத வலியுடன் 'ராம்! ராம்!' என்று அலறியபடியே ஹனுமான் பூமியிலே வந்து விழுந்தானாம்.

இந்த 'அசுரன்' ராம நாமத்தை உச்சரிக்கிறானே என்று அதிசயப்பட்டு அருகே சென்றான் பரதன். ஹனுமானின் பக்கத்தில் நின்றபடி பிரார்த்தித்தான்:

"நான் ஸ்ரீ ராமனிடம் கொண்டுள்ள பக்தி உண்மையானால் என் பிரபு என்னையும் இந்த வானரத்தையும் இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற வேண்டும்."

இவ்வாறு பரதன் உரத்த குரலில் உருகிப் பிரார்த்திக்கவும் அந்த ராமநாமம் ஹனுமான் காதிலும் விழுந்தது. உடனே கண் விழித்து விட்டான் அந்த ராம பக்தன்! புத்துணர்ச்சி பெற்று எழுந்தான். பரதனும் ஹனுமானும் பரஸ்பரம் அறிமுகம் செய்து கொள்கின்றனர். அதன் பிறகு ஹனுமான் தான் புறப்பட்டு வந்த காரண காரியங்களை பரதனுக்கு எடுத்துச் சொல்கிறான்.

விஷயமறிந்த பரதனின் மனநிலை எப்படி இருக்கும்! ரொம்பவும் துக்கப்பட்டான் பரதன். உடனேயே, வருத்தத்துக்கும் கால தாமதத்துக்குமான நேரமல்ல அது என்று முடிவுக்கு வந்து ஹனுமானுக்கு விடை கொடுத்து அனுப்பி வைத்தான். ஹனுமானும் சஞ்சீவியை மீண்டும் தூக்கிக் கொண்டு, விரைந்து பறந்து ராம-லக்ஷ்மணர்கள் இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

ஹனுமான் யுத்த பூமிக்கு மேலாக, சஞ்சீவி பர்வதத்துடன் பறந்து வந்தபோதே, அந்த மூலிகை காற்றின் மகிமையால் வீரர்கள் கண் விழிக்க ஆரம்பித்தார்கள்.

ஹனுமானைக் கண்டதுமே ராமபிரான் ஓடோடி வந்து அவனைத் தனது ஹ்ருதய கமலத்தோடு இறுகத் தழுவிக் கொண்டார்.

–இதுதான் துளஸி ராமாயணம் கூறும் சஞ்சீவி பர்வதக் கதை!

யுத்தம் தொடர்கிறது. இந்திரஜித்தை யுத்தம் செய்ய அனுப்புகிறான் ராவணன். அருமைப் புதல்வன். அவனை லக்ஷ்மணன் அழிப்பதற்கு அரும்பாடுபடவேண்டியிருக்கிறது. ஒரு மாய சீதையை உண்டாக்கி அவள் தலை துண்டிக்கப்பட்டது போன்ற தோற்றத்தை உண்டுபண்ணிவிடுகிறான் இந்திரஜித். அதைக் கண்டு கலங்கிப்போய் விடுகிறான் ஹனுமான்– மாவீரனான ஹனுமான் கூட பதறி ஸ்ரீ ராமனிடம் ஓடிச் சென்று அழுகிறான்.

வேறு யாரேனும் சொல்லியிருந்தால் ஸ்ரீ ராமன் அச்செய்தியை நம்பியிருக்க மாட்டான். ஆனால், ஹனுமான் சொன்னதால் நம்பிவிடுகிறான்!

லக்ஷ்மணனோ ஏகத்துக்கு மனம் நொந்து "அண்ணா! தர்மம் தர்மம் என்று சதா தர்மத்தைப் பற்றிப் பேசுவீர்களே... இப்போது உங்கள் தர்மம் என்ன செய்தது பார்த்தீர்களா?" என்று புலம்பினான்.

அப்போது அனைவரையும் தெளிவித்தவன் விபீஷணன்தான். இந்திரஜித் ஒரு யாகம் செய்து தன்னைப் பலப்படுத்தி பாதுகாத்துக் கொள்வதில் ஈடுபட்டிருப்பதாகவும் அந்த யாகத்துக்கு இடையூறு வராமல் போரைச் சற்று நிறுத்த வேண்டி மாய சீதையை அவன் உண்டு பண்ணியதாகவும் விளக்கினான். அதன் பிறகே லக்ஷ்மணன் இந்திரஜித்தை அழிக்கப் புறப்படுகிறான். எந்த அஸ்திரமும் அவனை வீழ்த்தாதது கண்டு அவன் சூளுரைக்கிறான்:

"என் அண்ணன் ராமன் தர்மாத்மா என்பது உண்மையானால், அவன் சத்தியமே பேசுபவன் என்பது உண்மையானால், இந்தப் பாணம் இந்திரஜித்தை அழிக்கட்டும்!" என்று சொன்னபடி பாணம் எய்கிறான். அந்த பாணமே இறுதியில் இந்திரஜித்தை அழித்தது!

இந்திரஜித்தின் அழிவு லக்ஷ்மணனின் பராக்கிரமத்துக்கு மட்டுமின்றி ஸ்ரீ ராமனின் உத்தம குணத்துக்கும் சான்றாயிற்று. அதைக் கண்டு ஸ்ரீ ராம பக்த ஹனுமான் அடைந்த மகிழ்ச்சியும் பரவசமும் அளவிட முடியாதது.

யுத்தத்தின் இறுதிக் கட்டம். ஸ்ரீ ராமபிரான் ஹனுமானின் தோள்மீது ஆரோகணித்துப் போர்புரிகிறான். இந்தக் காட்சி வால்மீகி ராமாயணத்தில் வருகிறது– ராவணன் விடுகிற பாணங்கள் அனைத்தும் ராமனை எட்டாமல், அவரைத் தூக்கி நின்றுகொண்டிருக்கும் ஹனுமானின் முகத்தைத் தாக்குகின்றன! முகத்தில் ரத்தம் பெருக்கெடுக்கிறது!

தனது பக்தனான ஆஞ்சநேயனுக்கு ஏற்பட்ட நிலை கண்டு ரௌத்திரம் கொண்டான் ஸ்ரீ ராமன். அந்தக் கோபம்தான் கடைசியில் ராவணனை சம்ஹரிக்க அவனுக்கு உதவியாக இருந்ததாம்! இங்கேயும் ஸ்ரீ ராம பக்த ஹனுமான் காரண கர்த்தாவாக மிளிர்கிறார்!

(வளரும்)

## அருள்வாக்கு



நாம் பக்தி செய்வதால் ஈசுவரனுக்கோ குருவுக்கோ ஒரு லாபமும் இல்லை. நமக்கேதான் பெரிய லாபம். என்ன லாபம் என்றால்,

நாம் அழுக்கு உடையவர்களாக இருக்கிறோம்; சஞ்சலம் உடையவர்களாக இருக்கிறோம். மனஸை ஒரு நிமிஷங்கூட ஓர் இடத்தில் நிறுத்த முடியாதவர்களாக இருக்கிறோம். எப்போதும் சுத்தமாக, நிரம்பிய ஞானம் உடையவனாக, அசங்காமல், ஆடாமல், பட்ட கட்டை மாதிரியாக இருக்கிறவனை நாம் நினைத்தால்தான், நாம் நினைக்கிற அவனது நிச்சலனமான நிலை நமக்கும் வரும். நாமே அவனாக ஆகிவிடுவோம். ஈசுவரனைத்தான் அப்படி நினைக்க வேண்டும் என்பது இல்லை. இப்படிப்பட்ட குணங்கள் உடையதாக எதை நினைத்துக் கொண்டாலும், நம்மைப் போன்ற ஒரு மனிதரையே இவ்வளவு குணங்கள் உடையவராகக் கருதி அவரையே குருவாக நினைத்து பக்தி செய்தாலும் நாம் அப்படியே ஆகிவிடுவோம். மனஸ் நின்றால்தான் ஆத்மா பிரகாசிக்கும்; அதாவது நமது நிஜமான ஆனந்த நிலை தெரியும். மனஸை நிறுத்துவதற்காகத்தான் குரு பக்தி வேண்டும், ஈசுவர பக்தி வேண்டும் என்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



# தீனா

அண்ணன் சுரேஷ் கோபி விரல் நீட்டினால் போதும், அப்பீலின்றி அரிவாள் தூக்கி, மாநில மந்திரியின் கையை கைமா பண்ணும் அளவுக்கு, அக்மார்க் விசுவாசம் காட்டும் அசைவத் தம்பியாக அஜீத்.

தளபதி ஸ்டைலில் படம் தொடங்கியதும் 'ஏதுடா தேவுடா, இன்னொரு மாஃபியா கதையா?' என்று பயந்தாலும் அஜீத் – லைலா, திவ்யாஸ்ரீ – சங்கர் காதலுக்கு இந்த அடிதடியை 'பாக்-கிரவுண்டு' ஆக உபயோகப்படுத்தியிருக்கிறார்கள் என்று தெரிந்ததும் 'அப்பாடா' என்று இருக்கிறது.

கொஞ்சமும் குழப்பாத ஸ்டோரி லைனுக்காக புதிய இயக்குனர் ஏ.ஆர். முருகதாசுக்கு ஒரு 'வெல்-டன்' சொல்லலாம்!

லவ் பண்ணுகிறபோது மென்மையாகவும், சண்டைக்காட்சிகளில் அனல் கக்கும் டிராகனாகவும் வித்தியாசம் காட்டி நடித்திருக்கிறார் அஜீத்.

அஜீத்தின் இன்னொரு பக்கம் தெரியாமல் காதலித்துவிட்டு, அவர் ரவுடி என்று தெரியவருகிறபோது பேந்த பேந்த விழிக்கும் லைலா, பாடல் காட்சிகளில் 'பாலே' லைலாவாகத் துள்ளுகிறார்.

சுரேஷ்கோபியின் நடிப்பில் மலையாள மண் வாசனை தெரிகிறது.

ஒரு பாட்டுக்காவது, ஒருவராவது எழுந்து பாப்கார்ன் பக்கம் போக வேண்டுமே.. ஊ..ஹூம்! த்ரீ சியர்ஸ் டு யுவன் சங்கர் ராஜா.

ரவுடி பிள்ளைகளின் வெட்டு குத்து சமாசாரத்தைப் பற்றி அதிகம் கவலைப்படாத அம்மா கேரக்டரில் மருந்துக்கும் அழுத்தம் இல்லை!

அண்ணனும், தம்பியும் எதற்கெடுத்தாலும் மந்திரியைப் பிடித்து வந்து வெட்டுவதும் அடிப்பதும் அபத்தம்!

க்ளைமாக்ஸ் நெருங்கிவிட்ட தருணத்தில் அலட்டிக் கொள்ளாமல் அஜீத், லைலா டூயட் பாடுவது ரொம்பவே செயற்கை.

ரஜினி ஸ்டைலை ஜெராக்ஸ் செய்து அவரது இடத்தைப் பிடித்தால் என்ன என்கிற ஐடியா, அஜீத்தின் அஜெண்டாவில் இருக்கிறதோ?

— **விஷுவல்தாசன்**

- ○ டிஸ்டிங்ஷன்
- ● ஆவெரேஜ்
- ○ ஜஸ்ட் பாஸ்
- ○ ஃபெயில்

"**எ**னக்காகக் கொஞ்ச தூரம் நடக்கக்கூடாதா?"

"முடியாது போ! நடந்தா ரொம்ப வலிக்குது!"

"அப்போ சாயந்திரம் நான் எப்படி கபாலீஸ்வரர் கோயிலுக்குக் கூட்டிட்டுப் போறது... பிரகாரத்தைச் சுத்தி வரும் போது மட்டும் கால் வலிக்காதா?"

"நடந்து காண்பிச்சாதான் கோவிலுக்குக் கூட்டிட்டுப் போவேன்கிறியா?"

"கண்டிப்பா!"

"சரி, சரி... வசந்தாவை வரச் சொல்லு!"

வசந்தா என்ற பெண்ணின் உதவியோடு தத்தித் தத்தி நடைபயிற்சி ஆரம்பிக்கிறது... எட்டு மாத குழந்தைக்கு அல்ல, எண்பது வயது மூதாட்டிக்கு.

'கோவில் ஆசை'யைக் காட்டி அவரை நடக்க வைத்துக் கொண்டிருந்தவர் டாக்டர் குமரன் அமரேசன் – குமரன்.

"இன்று நம்முடைய வாழ்க்கையே 'எ ராட்-ரேஸ் ஃபார் மணி' என்றாகி விட்டது. அதாவது, பொருள் தேடுவதுதான் நாம் எல்லோருக்கும் இப்போதைய பிரதான குறிக்கோள். இதற்கு அடிப்படைக் காரணம்



# ஸைக்கியாட்ரிஸ்ட் + ஃபிஸிஷியன் = ஜீரியாட்ரிஷியன்

ஜீரியாட்ரிஷியன் – முதுமை நோயியல் மருத்துவர்.

"ஒடுங்கிய உடல், நடுங்கும் மனம், ஏதாவது ஒரு நோய் அல்லது பல நோய்களின் துன்புறுத்தல்... இதுதான் ஸார் முதுமையின் பிரத்யேக அடையாளம்!" என்று அனுதாபம் நிறைந்த குரலில் விளக்குகிறார் டாக்டர்

கன்ஸ்யூமரிஸம் – நுகர்வு கலாசாரம். பணத்தால் எத்தனை வசதிகள் ஏற்படுத்திக் கொண்டாலும் மனம் திருப்தி அடையாமல் 'இன்னும்... இன்னும்' என்று பேராசைப்படுகிறது. போதாதற்கு நமது வரவேற்பறைகளை ஆக்ரமித்துக் கொண்டு நமது ஆசைகளைக் கிளப்பி விட்டுக் கொண்டிருக்கும் 'மீடியா'. பலன், 'திருப்தி' ஏற்படுகிற அளவுக்கு பணம் சம்பாதிக்க இந்தத் தலைமுறைக்கு இருபத்தி நாலு மணி நேரம் போதவில்லை.

"இந்தக் கலாசார மாற்றத்தால் குடும்பத்தினருக்கு இடையிலான நெருக்கம் ரொம்பவே பாதிக்கப்பட்டு விட்டது. பாதிப்பு குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் பொது என்றாலும் அதிகமாகப் பாதிக்கப்படுபவர்கள் முதியோர்கள்தான்!

"ஆண் பிள்ளைகளுக்கு நல்ல எதிர்காலத்தை அமைத்துத் தரவேண்டும், பெண்களை நல்ல இடத்தில் திருமணம் செய்து தர வேண்டும்... இந்தக் குறிக்கோள்களைத் தவிர வேறு பிரச்னையே இல்லாமல் இவர்கள் ஐம்பது வயது வரை




வாழ்ந்து விட்டிருக்கிறார்கள். நாற்பது வயதில் சர்க்கரையையும் கொலஸ்ட்ராலையும் சோதனை செய்து கொள்ளக் கூடத் தோன்றாமல் உழைத்திருக்கிறார்கள். ஓய்வு பெற்ற பிறகு எல்லாத் தொல்லைகளும் ஒன்றாக வந்து சேர்ந்து கொள்கின்றன. இந்த நேரம் பார்த்து, பிள்ளைகளுக்கு குடும்பம் ஏற்பட்டு அவர்கள் அதில் மூழ்கிவிடும்படி நேர்கிறது. பலன், இவர்களுடைய உடல்நிலையில் அவர்களால் சில சமயம் கவனம் செலுத்த முடிகிறது, சில சமயம் செலுத்த முடியாமல் போய் விடுகிறது.

"வேலை பார்த்து சம்பாதிக்கும் அளவுக்கு உடம்பு இடம் தரவில்லை என்ற உடனேயே தாங்கள் பிரயோஜனமற்றவர்களாகி விட்டோம் என்கிற காம்ப்ளெக்ஸ், தாழ்வு மனப்பான்மை இவர்களுக்கு உண்டாகி விடுகிறது. மாறுபட்ட வாழ்க்கை முறை என்ற காரணத்தால் பிள்ளைகளின் கவனிப்பு குறைந்தாலும் இவர்களுடைய காம்ப்ளெக்ஸ் அதையும் தங்களுடைய பணம் சம்பாதிக்க முடியாத இயலாமையோடு தொடர்பு படுத்திக் கொள்கிறது. வேதனைப்பட வைக்கிறது. இந்த வேதனை, பிள்ளைகளின் மேல் எரிச்சலும் கோபமுமாய் வெளிப்படுகிறது. இந்தக் கோபத்தை எத்தனை பிள்ளைகளால் சரியான கண்ணோட்டத்தில் புரிந்து கொள்ள முடியும்? அப்படியே புரிந்து கொள்ள முடிந்தாலும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சாத்தியப்படுமா என்பது அடுத்த கேள்வி. சாத்தியப்படுவதில்லை என்பதே உண்மை. பலன், பிள்ளைகள் தங்களை ஒதுக்குகிறார்கள் என்று பெற்றோர்களும், பெற்றோர்கள் தங்களைப் புரிந்து கொள்ள மறுக்கிறார்கள் என்று பிள்ளைகளும் பரஸ்பரம் குறைசொல்லும் சூழ்நிலை உருவாகி விடுகிறது. அதுவும், பெற்றோர்களில் ஒருவர் இறந்து விட்டால், அவ்வளவுதான், பிரச்னைகள் தீர்க்கவே முடியாத அளவுக்குப் போய்விடும்!

இப்போது, எந்தவிதமான சூழ்நிலையில் முதியோர்கள் நம்மிடம் சிகிச்சைக்காக வருகிறார்கள் என்று புரிந்து கொண்டிருப்பீர்கள். மனப் போராட்டத்துக்கிடையே நம்மிடம் வரும் இவர்களுக்கு எடுத்தோம், கவிழ்த்தோம் என்று சிகிச்சையை ஆரம்பித்து விட முடியாது. உதாரணத்துக்கு, எலும்பு

முறிவோடு ஒரு பெரியவர் நம்மிடம் வருகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். 'கடவுளே... நாம் இங்கு வந்து படுத்துக் கொண்டு விட்டோமே, ஹாஸ்பிடல் பில்லை யார் கட்டுவார்கள்?'; 'ஹாஸ்பிடலில் தங்கி சிகிச்சை பெறும் போது ஒருவர் உடன் இருக்க வேண்டுமே, மகனோ மருமகளோ வேலையைப் போட்டு விட்டு தங்க சம்மதிப்பார்களா?'; 'சிகிச்சை முடிந்து வீட்டுக்குப் போகும் போது சேர்த்து வைத்து எரிச்சலை காண்பிப்பார்களோ?'... அவருடைய சிந்தனைகளின் போக்கு இப்படித்தான் இருக்கும். நாம் என்ன செய்ய வேண்டும்?

"முதலில் அவரோடு ஆற அமர பேச வேண்டும். அக்கறையோடு அவர் சொல்வதைக் கவனிக்க வேண்டும். அதுவே அவருடைய மனத்தில் பாரமாய் அழுத்தும் எல்லா வேதனைகளுக்கும் வடிகாலாய் அமைந்து விடும். இப்போது மனம் இலேசாகி சிகிச்சைக்கு ஒத்துழைக்கத் தயாராகி விடுவார்கள். இதை விட்டு விட்டு ஒரு மருந்துச் சீட்டை நீட்டினோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். 'மருந்தெல்லாம் ஒன்றும் வேண்டாம், நான் செத்துப் போகிறேன்!' என்ற ரீதியில் பதில் வரும். 'ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்?' என்றால் 'என் பிள்ளைகள் நான் சாக வேண்டும் என்று நினைக்கிறார்கள்' என்பார். இவர் சாக வேண்டும் என்று நினைக்கும் பிள்ளைகள் ஏன் என்னைத் தேடிப் பிடித்து சிகிச்சை செய்யச் சொல்ல வேண்டும்? இதை அவருக்கு கொஞ்சம் கொஞ்சமாகப் புரியவைக்க வேண்டும்.

இங்குதான் 'ஜீரியாட்ரிக்ஸ்' என்ற ஸ்பெஷாலிட்டி மற்ற ஸ்பெஷாலிட்டிகளிடமிருந்து வேறுபடுகிறது. வயது காரணத்தால் முதியவர்களின் உடல்நிலையில் ஏற்படும் இயல்பான மாற்றங்களுக்கு ஏற்ப சிகிச்சையின் உத்திகள் மாறுபடுவது என்பது அடிப்படை வித்தியாசம் என்றாலும் இந்த ஸ்பெஷாலிட்டியில் நோயாளிக்கு மனநிலை சிகிச்சை செய்த பிறகே உடல்நிலை சிகிச்சை செய்ய முடியும் என்பதுதான் முக்கியமான வித்தியாசம். அதாவது ஒரு ஜீரியாட்ரிஷியன் முதலில் ஒரு சைக்கியாட்ரிஸ்ட், பிறகுதான் ஃபிஸிஷியன்!

"முதியவர்களுக்கு, எடுத்தோம் கவிழ்த்தோம் என்று சிகிச்சையை ஆரம்பித்து விட முடியாது..."

இதனால் அபார சகிப்புத் தன்மையும் பொறுமையும் ஒரு ஜீரியாட்ரிஷியனுக்கு அவசியமாகி விடுகிறது. இந்த ஸ்பெஷாலிட்டியை எடுத்துக் கொள்ள பல டாக்டர்கள் முன்வராமல் இருப்பதற்கு இது ஒரு முக்கியக் காரணம். இன்னொரு காரணம், இதில் அதிக லாபம் சம்பாதிப்பதற்கு ஸ்கோப் கிடையாது. அதனால், இதைத் தொழில் என்று சொல்வதை விட சேவை என்று சொல்வதுதான் பொருத்தம்.

இந்த சேவை செய்வதில் எனக்குப் பூரண திருப்தி கிடைக்கிறது. இதைச் செய்யத் தூண்டிய இறைவனுக்கு நன்றி சொல்லத் தோன்றுகிறது!"

டாக்டர் குமரன் இப்படிச் சொன்ன போது முதியோர்கள் சார்பில் நாம்தான் இறைவனுக்கு நன்றி சொல்ல வேண்டும் என்று தோன்றியது!

— ஜெயந்தன்

படம் : ஜரிஷ்



# மாணவர்களுக்குச் +

**+2 தேர்வுகளுக்கு மாணவர்கள் இரவெல்லாம் படிக்கிற 'சீசன்' வந்துவிட்டது. பத்மா சேஷாத்ரி பள்ளியின் டீன் திருமதி ஒய்.ஜி. பார்த்தசாரதியிடம் இவர்களுக்கு ஏதாவது டிப்ஸ் தாருங்களேன் என்று கேட்டபோது அக்கறையோடு சொல்ல ஆரம்பித்தார்.**

● நீங்கள் டைம்-டேபிள் போட்டு படிப்பவராக இருந்தாலும் சரி, அன்னன்னைக்கு என்ன பாடங்கள் படிப்பது என்பதை அன்னன்னைக்கு முடிவு செய்பவராக இருந்தாலும் சரி, ஒரு குறிப்பிட்ட நாளன்று நீங்கள் படிக்க வேண்டும் என்று முடிவு செய்திருக்கும் பாடங்களை முதலில் சின்னச் சின்ன 'யூனிட்டு'களாக, பகுதிகளாகப் பிரித்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு யூனிட்டுக்கும் ஒன்றரை மணி நேரம் ஒதுக்குங்கள்.

முதல் அரை மணி நேரத்தில் அந்த யூனிட்டை முழு கான்சன்ட்ரேஷனோடு படித்து விஷயத்தை கிரஹித்துக் கொண்டு, பிறகு புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, படித்த விஷயத்தைச் சத்தமாக ரீ-கால் செய்யுங்கள். புத்தகத்தில் இருந்த வாக்கியங்களை அப்படியே பிரயோகிக்க வேண்டும் என்று நினைக்காதீர்கள். அது மனப்பாடம் செய்வதுபோல் ஆகிவிடும். உங்கள் நடையில் சொல்லிப் பழகுங்கள். பாருங்கள். உங்கள் நண்பன் உங்களிடம் வந்து 'அந்த யூனிட் எனக்குப் புரியவில்லை, கொஞ்சம் விளக்கிச் சொல்கிறாயா?' என்று கேட்டால் எப்படி விளக்குவீர்களோ, அப்படி விளக்கிப் பழகுங்கள். இது ஆடியோ மெமரிக்கு வழி.

அடுத்து வீடியோ மெமரி. அதாவது படித்த விஷயத்தை ஒரு பேப்பர், பேனா எடுத்து எழுதிப் பார்க்க வேண்டும். முதலில் சோம்பலாகத்தான் இருக்கும்; பாடத்தை சத்தமாக ரீ-கால் செய்தபோது சரளமாக வந்ததே. எதுக்கு இன்னும் ஒரு மணி நேரம் செலவிட வேண்டும் என்று கேட்கத் தோணும். ஆனால் படிக்கும்போதும் சொல்லிப் பார்க்கும்போதும் சுலபமாகத் தெரியும் பல பாடங்கள் எழுதும்போது உங்களைக் குழப்பிவிடும் அபாயம் இருக்கிறது. அதனால் எந்த விஷயத்தையும் எழுதிப் பழகாமல் பரீட்சை பேப்பரில் நேரடியாக எழுதுகிற மாதிரி வைத்துக் கொள்ளாதீர்கள்.

நான் கையெழுத்து போடும்போது எனது பெயரின் ஸ்பெல்லிங் என்ன என்று யோசித்துக்கொண்டேவா போடுகிறேன்? என் விரல்கள் இயந்தர கதியில் செயல்படவில்லை? இதுக்கு காரணம் பிராக்டிஸ்தான். அதேபோல் எழுதி எழுதி பிராக்டிஸ் செய்துகொண்டால் பரீட்சை பேப்பரில் விரல்கள் ஏதோ சிக்நேச்சர் போடுவதைப் போல் நிமிஷத்தில் பாடங்களை எழுதித் தள்ளிவிடும்.

'எழுதி எழுதி பழகிக்கொண்டேன் எழுத்தினிலே' என்று ஒரு பாட்டே இருக்கு தெரியுமா? மனசில் நன்றாக பதிய வேண்டும் என்றால் எழுதிப் பழகுவதைத் தவிர வேறு வழியே இல்லை.

எழுதி முடித்தவுடன் புத்தகத்தைத் திறந்து வைத்துக் கொண்டு எல்லா பாயிண்டுகளையும் எழுதியிருக்கிறீர்களா என்று அவசியம் சரிபார்க்க வேண்டும். ஏதாவது பாயிண்ட் விட்டுப் போயிருந்தால் அந்தப் பாயிண்ட்டைச் சேர்த்து எழுதி திரும்பச் சரி பார்க்க வேண்டும்.

இப்போது ஒரு சப்ஜெக்டில் உள்ள அனைத்து பாடங்களையும் நான் மேலே சொன்னது போல் ரிவைஸ் செய்து விட்டீர்கள். இரண்டாவது ரிவிஷன் எப்படி இருக்க வேண்டும் தெரியுமா?

கேள்வித்தாள் ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள்.

அது முந்தைய பப்ளிக் எக்ஸாம் வினாத்தாளாக இருக்கலாம். அல்லது உங்கள் பள்ளியின் வினாத்தாளாக இருக்கலாம். பரீட்சை எழுதுவதுபோல் பாவனை செய்துகொண்டு மூன்று மணி நேரத்துக்குள் பதில்களை எழுதி விடுங்கள். நடுவில் பிரேக் எடுத்துக் கொள்ளும் சமாசாரமே வேண்டாம். எழுதி முடித்தவுடன் 'டெக்ஸ்ட்'இன் உதவியோடு நீங்களே செல்ஃப் - கரெக்ஷன் செய்து மார்க் போட்டுக் கொள்ளுங்கள். இப்படிச் செய்யும் போது தவறு செய்யும் இடங்கள் மனத்தில் நன்றாகப் பதிந்து விடும். பலன், பரீட்சையை எழுதும்போது அதே தவறுகள் நிச்சயம் இடம் பெறாது.

இந்தப் பயிற்சி இன்னும் இரண்டு முக்கியமான பலன்களைத் தருகிறது. ஒன்று, மூன்று மணி நேரத்தில் ஒரு வினாத்தாளை முழுவதுமாக அட்டெம்ப்ட் செய்வது எப்படி என்கிற சூட்சுமத்தைப் புரிய வைத்து விடுகிறது. இதை ஏன் முக்கியமான பலன் என்று சொன்னேன் என்றால் நிறைய குழந்தைகள் எல்லா வினாக்களுக்கும் விடை தெரிந்திருந்தும் வினாத்தாளை முடிக்க முடியாமல் விட்டுவிடுகிறார்கள். மதிப்பெண்களைப் பொறுத்தவரை இது எவ்வளவு பெரிய நஷ்டம்? பப்ளிக் எக்ஸாமில் இதுபோல் நேரலாமா? இதற்குக் காரணம், அவர்களுக்கு 'சென்ஸ் ஆஃப் டைம் - அலாட்மெண்ட்' போதவில்லை. இந்த ஆற்றலை வளர்த்துக் கொள்ள இந்தப் பயிற்சி பெரிதும் உதவும்.

அடுத்து இது தன்னம்பிக்கையை ஊட்டும் ஒரு டானிக். எவ்வளவு நன்றாகப் படித்திருந்தாலும் பரீட்சை என்ற உடன் நிறைய மாணவர்களுக்கு ஒரு காரணமற்ற பயம் வந்து விடுகிறது. படித்ததெல்லாம் மறந்துபோகும் அளவுக்கு. இவர்கள், நான் மேலே சொன்ன பயிற்சியைச் செய்து விட்டுப் போனால் வினாத்தாள் இன்னொரு பயிற்சி தாளாகத் தோன்றுமே ஒழிய பரீட்சைத் தாளாக பயமுறுத்தாது.

- சிலபஸ் பெரிதாக இருக்கிறது. செலக்டிவ் ஸ்டடி செய்கிறேன் என்கிற வேலை எல்லாம் வேண்டாம். காரணம், 'முக்கியம்', 'முக்கியமல்ல' என்று பாடங்களைப் பிரிப்பதற்கு எந்தப் பொதுவான அடிப்படையும் கிடையாது. ஏதோ ஒரு அடிப்படையில் நீங்கள் பிரித்தால் வினாத்தாளை செட் பண்ணுகிறவரும் அதே கண்ணோட்டத்தில் பாடங்களைப் பிரிப்பார் என்பது என்ன நிச்சயம்?

# 2 சில டிப்ஸ்!

இப்படித்தான் நான் மைசூரில் பி.எட்.எக்ஸாமை எழுதும்போது சைக்காலஜி பாடத்தில் முதல் மூன்று சாப்டர்கள் ரொம்பவே சிம்பிளாக இருந்ததால் அதில் என்ன பெரிதாய் கேள்வி கேட்டுவிடப் போகிறார்கள் என்று எல்லோரும் அலட்சியமாக இருந்துவிட்டோம். ஆனால் ஐந்து முக்கியமான கேள்விகள் அந்த மூன்று சாப்டர்களிலிருந்து வந்துவிட்டன. என்ன செய்ய முடியும்?

இதனால்தான் சொல்கிறேன், வினாத்தாளில் சாய்ஸ் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி செலக்டிவ் ஸ்டடி பண்ணுவது பெரிய ரிஸ்க்.

● 5 மணி நேரம், 6 மணி நேரம் என்று தொடர்ந்து படிக்காதீர்கள். நடுநடுவே ரிலாக்ஸ் செய்து கொள்ளுங்கள். ரிலாக்ஸிங் டெக்னீக்குகள் எத்தனையோ இருக்கின்றன.

வீட்டைச் சுற்றி ஒரு ரவுண்டு நடந்து விட்டு வரலாம். நியூஸ்பேப்பரை புரட்டலாம். அரை மணி நேரம் தூங்கி எழலாம், அதில் ஒரு தப்பும் இல்லை. எல்லாவற்றையும் விட சிறந்தது என்று நான் நினைப்பது பிராணாயாமம்தான். பிராணாயாமம் என்றால் வேறொன்றுமில்லை... ஒரு டீப்-பிரீதிங் எக்ஸர்ஸைஸ், அவ்வளவுதான். அதைச் செய்யும்போது ஒருபுறம் நாம் உட்கொள்ளும் ஆக்ஸிஜன் அளவு கூடி, ரத்தம் அதிகரிக்கிறது. இன்னொருபுறம் கார்பன்டைஆக்ஸைடு வாயு துப்புரவாக வெளியேற்றப்படுகிறது. பலன், ரொம்ப ஃப்ரெஷ்ஷாகவும் சுறுசுறுப்பாகவும் உணர்வீர்கள்.

"நான் கையெழுத்து போடும்போது எனது பெயரின் ஸ்பெல்லிங் என்ன என்று யோசித்துக் கொண்டேவா போடுகிறேன்?"

ஆனால் ரிலாக்ஸ் செய்து கொள்கிறேன் என்ற சாக்கில் நீங்கள் செய்யக்கூடாத விஷயங்கள் மூன்று.

1. டீ.வி பார்ப்பது.

2. வீடியோ கேம்ஸ், கம்ப்யூட்டர் கேம்ஸ் விளையாடுவது.

3. தொலைபேசியில் மணிக்கணக்காகப் பேசுவது.

இவை மூன்றும் ஏன் வேண்டாம் என்று சொல்கிறேன் தெரியுமா? இவற்றில் ஈடுபடும் நேரம் அரை மணி அல்லது ஒரு மணி நேரமாக இருந்தாலும் அதன் பாதிப்பு பல மணி நேரங்களுக்கு இருந்துகொண்டே இருக்கும். மனசு அவற்றை அசை போட்டுக் கொண்டே இருந்தால் படிப்பில் திரும்ப முழு கவனத்தைச் செலுத்துவது என்பது பிரம்ம பிரயத்தனம் ஆகிவிடும்.

● இரவில்தான் டிஸ்டர்பன்ஸ் கம்மியாக இருக்கிறது என்று நிறைய மாணவர்கள் கண் விழித்துப் படிக்க விரும்புகிறார்கள். அதில் ஒன்றும் தவறில்லை. ஆனால் அடுத்தநாள் அதுக்கு ஈடு செய்வது போல் குறைந்தது ஒரு ஆறு மணி நேரமாவது தூங்கிவிட வேண்டும்.

நைட் - ஸ்டடி என்று வரும்போது இன்னொரு முக்கியமான விஷயம். தூக்கம் வராமல் இருப்பதற்கு காப்பி, டீ சாப்பிடும் வழக்கத்தை மட்டும் தயவு செய்து ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள். காரணம், இவை முதல் இரண்டு மணி நேரத்துக்கு மூளையைச் சுறுசுறுப்பாக வேலை செய்ய வைத்தாலும் அதற்குப் பிறகு அதன் செயல் திறனை பல மடங்கு குறைத்துவிடும் சக்தி படைத்தவை.

தூக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றால் அதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன.

நான் கடைபிடித்த மூன்று உத்திகளைச் சொல்லுகிறேன்.

ஒன்று, இரவில் மாத்ஸ் பாடங்களைப் படிப்பது. ஒரு கணக்கைப் போட்டு விட்டாலே மூளை சுறுசுறுப்பாகிவிடும். பிறகு தூக்கமாவது ஒன்றாவது?

இரண்டு, தலையில் நிறைய எண்ணெயை வைத்துக்கொண்டு விடுவது. வழிய வழிய தலையில் எண்ணெய் இருக்கும்போது தூக்கம் வரவே வராது. (தூங்கப் போகுமுன் குளிக்க மறந்து விடாதீர்கள்!)

மூன்று, கேரட், வெள்ளரிக்காய் போன்ற பச்சைக் காய்கறிகளை நறுக்கி வைத்துக் கொண்டு தூக்கம் வரும்போது அவற்றைச் சாப்பிடுவது. காய்கறிகள் பச்சையாக இருக்கும்போது அவற்றைச் சாப்பிட நன்றாக மெல்ல வேண்டியிருக்கும். அப்படி மெல்லும் போது தூக்கம் பறந்துவிடும். (அதுக்காக

டிபார்ட்மெண்ட்டல் ஸ்டோருக்குப் போய் டிராலியில் நொறுக்குத்தீனிகளை அள்ளிக் கொண்டு வந்து விடாதீர்கள். அவை அத்தனையும் உடம்புக்குக் கெடுதல்!)

● இந்தச் சமயத்தில், முடிந்த அளவு, சாதத்தையும் உருளைக்கிழங்குகளையும் குறைத்து விடுங்கள். இவை, சாப்பிட்டவுடன் தூங்க வேண்டும் என்ற உந்துதலைக் கிளப்பிவிட்டு விடும். அதோடு இவை ஜீரணிப்பதற்கு அதிக நேரம் பிடிப்பதால் உங்கள் செயல்பாட்டை மந்தமாக்கிவிடும்.

அதற்குப் பதில் சோயா, முட்டை, பால், பன்னீர் போன்ற உணவு வகைகளை நிறையச் சேர்த்துக்கொள்ளுங்கள். காரணம் இவைகளைச் சாப்பிடும்போது உங்களால் அதிக அளவு உட்கொள்ள முடியாது. அரை வயிறுதான் சாப்பிட முடியும். பலன், வயிறு ஹெவியாக இருக்காது. அதோடு உங்கள் உடம்பைப் பொறுத்தவரை 'தி நீட் ஆஃப் தி அவர்' புரதச் சத்துதான். அதாவது புரோட்டீன். அதை வேண்டிய அளவில் இந்த உணவு வகைகள் தந்து விடுகின்றன.

இதைத் தவிர இரண்டு விஷயங்களில் முன்னெச்சரிக்கை வேண்டும். ஒன்று பரீட்சை முடியும் வரை வெளி இடங்களில் சாப்பிடவோ தண்ணீர் அருந்தவோ கூடாது. டைஃபாயிடு, ஜான்டிஸ் என்று படுத்து விட்டால் அவ்வளவுதான். இரண்டு, பப்ளிக் எக்ஸாம் நடக்கப் போகும் நேரம்தான் 'சிக்கன்பாக்ஸ்' சீசன். இப்போது அதுக்கு தடுப்பு ஊசி வந்து விட்டது. மறக்காமல் போட்டுக் கொள்ளுங்கள்.

● இவ்வளவு நாள் உழைத்ததும் பரீட்சையை ஜோராக எழுதுவதற்காகத்தானே? இப்போது பரீட்சை எழுதும்போது நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய விஷயங்கள்...

வினாத்தாள் கிடைத்த உடன் நன்றாகத் தெரிந்த கேள்விகளை முதலில் அட்டெம்ப்ட் செய்யுங்கள். இவற்றை எழுதி முடிக்கும்போது ஒருவித தன்னம்பிக்கை ஏற்பட்டுவிடும். இந்த தன்னம்பிக்கையையும் காமன்சென்ஸையும் வைத்து தெரியாத கேள்விகளைக்கூட ஜமாய்த்துவிடலாம்.

விடைத்தாள்களை அழகாக எழுதுங்கள், தெளிவாக எழுதுங்கள். முக்கியமானவற்றை ஹைலைட் செய்து 'நீட்'டாக பிரசெண்ட் செய்யுங்கள்.

பரீட்சை முடிவதற்குப் பத்து நிமிடம் இருக்கையில் எழுத வேண்டியவற்றை எழுதி முடித்து விடுங்கள். அந்த பத்து நிமிடங்கள் எழுதியதைத் திரும்ப படித்துப் பார்ப்பதற்கு, அஜாக்கிரதையால் ஏற்பட்டிருக்கும் தவறுகளை திருத்திக் கொள்வதற்கு. மாத்ஸில், 12 KM என்பதற்கு அவசரத்தில் 12 KG என்று எழுதிவிட்டால் பத்து மதிப்பெண் முழுவது மாய்ப் போய்விடும். அதேபோல் விடைகளின் நம்பர்களையும் ஒரு தடவைக்கு இரண்டு தடவை சரிபார்த்துக் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு பரீட்சையும் முடிந்தவுடன் உங்கள் 'பெர்ஃபார்மன்ஸ்'ஐ போஸ்ட்மார்ட்டம் செய்யாதீர்கள். மற்றவர்களோடு அதை ஒப்பிட்டுப் பார்க்காதீர்கள். நன்றாகப் படித்தோம், நன்றாக எழுதினோம் என்று அத்தோடு நடந்து முடிந்து போன பரீட்சையை மறந்துவிட வேண்டும். இதை இப்படிச் செய்திருக்கலாமோ, அதை அப்படிச் செய்திருக்கலாமோ என்று குழப்பிக் கொண்டால் அடுத்த பரீட்சையின் ப்ரிபரேஷன் கெட்டு விடும்.

பரீட்சைகளுக்கு நடுவில் விடுமுறை நாட்கள் கிடைக்கும் போது விடுமுறைக்கு அடுத்து வரும் எல்லா நாட்களையும் முதல் பரீட்சைக்கு ரிவைஸ் செய்வதில் செலவிட்டு விடாதீர்கள். அடுத்து வரும் எல்லா பரீட்சைகளுக்கும் சமமாக நேரத்தைப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

**நன்றாக உழைத்துப் படியுங்கள், உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளுங்கள், பரீட்சையை தைரியமாக எழுதுங்கள், வெற்றி நிச்சயம் கிடைக்கும்.**

உங்கள் எல்லோருக்கும் எனது அன்பான ஆசிகள்!

**"எல்லா ரிலாக்சேஷன் டெக்னீக்குகளிலும் சிறந்தது பிராணாயாமம் தான்!"**

பேட்டி: **கிருஷ்ணா**
படம்: **ஸ்ரீஹரி**

# பொன்னியின் செல்வன்

ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம்

## வானதியின் யோசனை

அருள்மொழிவர்மருக்கும் சிற்றரசர்கள் இருவருக்கும் நடந்த வாக்கு வாதத்தைக் கேட்டுக் கொண்டு நின்ற குந்தவைதேவி இப்போது சற்று முன் சென்று, "தாத்தா! மாமா! வாசலில் நின்றே பேச வேண்டுமா? உள்ளே வாருங்கள்! உங்கள் பேச்சை மீறிப் பொன்னியின் செல்வன் ஒன்றும் செய்துவிட மாட்டான்'' என்றாள்.

மலையமானும் வேளாரும் உள்ளே வந்தார்கள். இளையபிராட்டியைப் பார்த்து, வேளார், "தாயே! இளவரசர் மட்டும் பட்டத்தை ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தால் ஒரு தொல்லையும் இல்லை. அவருடைய கட்டளையை நாங்கள் நிறைவேற்ற வேண்டியவர்களாவோம். சக்கரவர்த்தியோ இராஜ்யத்தை எப்போது இறக்கி வைப்போம் என்று இருக்கிறார். காஞ்சியில் கரிகாலர் கட்டியுள்ள பொன்மாளிகைக்குப் போய்த் தம்முடைய கடைசிக் காலத்தை நிம்மதியாகக் கழிக்க விரும்புகிறார்!" என்றார்.

"மாமா! நீங்கள் இருவரும் வந்த போது நானும் இளவரசரிடம் அதைத்தான் சொல்லிக்கொண்டிருந்தேன். இந்தப் பெண் இடையில் வந்து முறையிட்டாள். அதைக் கேட்டு இளவரசர் மனமிரங்கிச் சிறைக்குப் போய் அவரை விடுதலை செய்ய விரும்பினார்..."

**அமரர் கல்கி**

"இந்தப் பெண் யார்? எதற்காக இவள் இப்படி விம்மி அழுகிறாள்?" என்று வேளார் கேட்டார்.

"தெரியவில்லையா, மாமா? இவள் தான் சம்புவரையர் மகள் மணி மேகலை..."

"ஓகோ! சம்புவரையர் சிறையில் இருப்பதை எண்ணி அழுகிறாள் ஆக்கும். அழ வேண்டாம், பெண்ணே! உன் தந்தையை விடுதலை செய்து அழைத்து வரும்படி சக்கரவர்த்தி கட்டளை பிறப்பித்து விட்டார். பாதாளச் சிறைக்குப் பார்த்திபேந்திர பல்லவன் போயிருக்கிறான்!" என்றார் மலைய மான்.

"தாத்தா! இவள் தன் தந்தையைப் பற்றி மட்டும் கவலைப்படவில்லை. வாணர் குலத்து வீரரைப் பற்றிக் கவலைப்படுகிறாள். 'அவரை விடுதலை செய்யுங்கள். இளவரசரை நான் தான் கொன்றேன்' என்று புலம்புகிறாள்!" என்றாள் இளைய பிராட்டி.

"ஓகோ! அப்படி இவள் சொல்லுவதாயிருந்தால் இவளையும் வேண்டுமானால் பாதாளச் சிறையில் கொண்டு போய் அடைத்துவிடுவோம். வல்லத்து இளவரசனை விடுவிக்க முடியாது!" என்றார் பெரிய வேளார்.

மணிமேகலை விம்மிக்கொண்டே குந்தவையைப் பார்த்து, "அதுதான் நான் கோருவதும், இளவரசி! என்னை



யும் அவர் இருக்குமிடத்தில் கொண்டு போய் அடைக்கச் சொல்லுங்கள்!'' என்றாள்.

சேனாதிபதி வேளார் தமது நெற்றியை விரலால் தொட்டுச் சுட்டிக்காட்டி, மெல்லிய குரலில், ''இந்தப் பெண்ணுக்குச் சித்தம் பேதலித்து விட்டதாகக் காண்கிறது!'' என்று கூறினார்.



துவரை சும்மா இருந்த வானதி இப்பொழுது பேச்சில் குறுக்கிட்டு ''பெரியப்பா! மணிமேகலையின் சித்தம் சரியாகத்தான் இருக்கிறது. உங்களுக்கும் திருக்கோவலூர்ப் பாட்டனுக்கும் தான் சித்தம் சரியாக இல்லை என்று தோன்றுகிறது. சிறையில் உள்ள வல்லத்திளவரசர் பொன்னியின் செல்வருடைய அருமைத் தோழர். இளையபிராட்டியிடமிருந்து ஓலை கொண்டு போய் இலங்கையிலிருந்து பொன்னியின் செல்வரை அழைத்து வந்தவர். வீர சொர்க்கம் அடைந்த இளவரசருடைய பூரண நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருந்தவர். அவர் மீது குற்றம் சாட்டிச் சிறையில் வைத்திருப்பவர்களுக்குத்தான் சித்தக் கோளாறாக இருக்க வேண்டும்!'' என்றாள்.

''ஆகா! இந்தப் பெண் எப்போது இவ்வளவு வாயாடியானாள்? வானதி! இளையபிராட்டியிடமிருந்து நீ கற்றுக் கொண்டது இது தானா? பெரியவர்கள்

முன்னால் வாயைத் திறக்காமல் சும்மா இருப்பதற்கு நீ இன்னும் பயில வில்லையா? உன்னை ஏதாவது கேட்டால் பதில் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும்!'' என்றார் பெரியவேளார்.

மலையமான் ''சேனாதிபதி! இந்தக் குழந்தையின் மீது ஏன் கோபித்துக் கொள்கிறீர்கள்? இங்கேயுள்ளவர்களின் மனத்தில் உள்ளதையே இவள் வெளியிட்டாள்!'' என்றார்.

குந்தவை ''ஆம்! மாமா! வானதியை நீங்களும் நானும் இனி மிரட்ட நினைப்பது உசிதமாயிராது. நாளைக்கு அவள் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாகிச் சிம்மாதனத்தில் அமர்வாள். அப்போது அவளுடைய கட்டளையைத் தாங்களும் நானும் நிறைவேற்ற வேண்டியதாகும்!'' என்றாள்.

''அருள்மொழி மட்டும் அதற்கு இசைந்தால் ஒரு தொல்லையும் இல்லையே? மகுடாபிஷேகத்தன்று பாதாளச் சிறையில் உள்ளவர்கள் அத்தனை பேரையும் விடுதலை செய்யும்படி கட்டளையிடலாமே?'' என்றார் மலையமான்.

''தங்களையும் என்னையும் வெளியில் உள்ளவர்கள் அத்தனை பேரையும் பாதாளச் சிறையில் பிடித்துப் போடும் படியும் கட்டளையிடலாம்!'' என்றார் சேனாதிபதி பெரிய வேளார்.

''ஐயா! நீங்கள் இருவரும் பெரியவர்கள். உங்களை மறுத்துப் பேச வேண்டியிருக்கிறதே என்று வருத்தப்படுகிறேன். ஆயினும் அவசரமாகச் செய்ய வேண்டிய காரியத்தை விட்டு விட்டு ஏதேதோ பேசுகிறீர்கள்...'' என்று இளவரசர் கூறுவதற்குள், சேனாதிபதி, ''இளவரசே! சோழ நாட்டின் பட்டத்து உரிமையை நிர்ணயித்துக் குழப்பம் எதுவும் நேரிடாமல் தடுப்பது மிகவும் அவசரமான காரியம் அல்லவா?'' என்றார்.

''சக்கரவர்த்தி ஒருவர் இருக்கிறார் என்பதையே மறந்து விட்டுப் பேசுகிறீர்கள்!'' என்றார் அருள்மொழி.

''நாங்கள் மறக்கவில்லை. சற்றுமுன் சக்கரவர்த்தியைப் பார்த்து விட்டுத்தான் திரும்பினோம். அவர்தான் இராஜ்யப் பிரச்னையைத் தீர்த்து வைக்க ரொம்பவும் அவசரப்படுகிறார். தீர்த்து வைத்துவிட்டுக் காஞ்சியில் கரிகாலர் கட்டிய பொன் மாளிகையில் போய் வசிக்கப் பிரியப்படுகிறார்.''

''இதோ நான் சக்கரவர்த்தியிடம் போகிறேன். வந்தியத்தேவரின் விடுதலைக்குக் கட்டளை வாங்கிக் கொண்டு வருகிறேன். பிறகு, நீங்கள் ஆட்சேபிக்க மாட்டீர்கள் அல்லவா?''

''இளவரசே! சக்கரவர்த்தியிடம் தாங்கள் வந்தியத்தேவனைப் பற்றிப் பிரஸ்தாபிப்பதே உசிதம் அன்று. பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளுடனும் நந்தினிதேவியுடனும் சேர்ந்து சதி செய்து வந்தியத்தேவன்தான் கரிகாலரைக் கொன்றிருக்க வேண்டும் என்று சக்கரவர்த்தி கருதுகிறார்...''

''ஆகா! அந்த எண்ணத்தை அவர் மனத்தில் உண்டாக்கியது யார்?''

''நாங்கள் அல்ல, இளவரசே! பார்த்திபேந்திரந்தான் அந்த நம்பிக்கையைச் சக்கரவர்த்திக்கு உண்டாக்கியவன்...''

''அப்படியானால் பல்லவரையே நான் போய்ப் பார்க்கிறேன். எந்த ஆதாரத்தைக் கொண்டு அம்மாதிரி குற்றம் சாட்டுகிறார் என்று கேட்கிறேன்.''

''பார்த்திபேந்திர பல்லவனைத் தாங்கள் இப்போது சந்திக்க முடியாது. சக்கரவர்த்தியின் கட்டளையுடன் அவன் சம்புவரையரை விடுதலை செய்துகொண்டு குடந்தைக்குப் போயிருக்கிறான். அங்கே சின்னப் பழுவேட்டரையரையும் மற்றச் சிற்றரசர்களையும் சந்தித்துப் பேசி உடனே அவர்களை அழைத்து வரும்படி சக்கரவர்த்தி சொல்லி அனுப்பியிருக்கிறார். இராஜ்ய உரிமையைப் பற்றிச் சமரசமாகப் பேசித் தீர்த்துக் கொள்ளலாம் என்று செய்தி அனுப்பியிருக்கிறார். மதுராந்தகருக்கே பட்டம் கட்டச் சம்மதம் என்றும் தெரியப்படுத்தியிருக்கிறார்.

பொன்னியின் செல்வர் முக மலர்ச்சியுடன் இளைய பிராட்டியையும் வானதி

யையும் பார்த்துவிட்டு, "ரொம்ப நல்ல செய்தி சொன்னீர்கள்" என்றார்.

"கொஞ்சங்கூட நல்ல செய்திஅல்ல. குடிகளின் விருப்பத்துக்கும் போர் வீரர்களின் கருத்துக்கும் மாறாக என்று மதுராந்தகன் சோழ சிங்காதனம் ஏறுகிறானோ, அன்றைக்கே நூறு ஆண்டுகளாக மேன்மை பெற்று வளர்ந்த சோழ சாம்ராஜ்யத்துக்கு விநாச காலம் ஆரம்பமாகும்" என்றார் சேனாதிபதி.

"அதில் சந்தேகமே இல்லை. ஈழ நாட்டிலிருந்து வடபெண்ணை நதி வரையில் குழப்பமும் கலகமும் தொடங்கும்" என்றார் மலையமான்.

"அதற்கெல்லாம் நீங்கள் இருவருமே தலைமை வகித்து நடத்துவீர்கள் போலிருக்கிறது. அது உங்கள் இஷ்டம். அதற்குள்ளே நான் சக்கரவர்த்தியிடம் விண்ணப்பம் செய்து வந்தியத்தேவரை விடுதலை செய்யப் பார்க்கிறேன்!" என்று அருள்மொழி வர்மர் அங்கிருந்து வெளியேறுவதற்காகத் திரும்பினார்.

"இளவரசே! சக்கரவர்த்தியிடம் தாங்கள் இந்தக் கோரிக்கையுடன் போக வேண்டாம். அதனால் "பெரும் விபரீதம் விளையும். தேவி! தங்கள் தம்பியைத் தடுத்து நிறுத்துங்கள்!" என்றார் சேனாதிபதி பெரிய வேளார்.

"ஆம்; குழந்தாய்! வயது சென்ற இந்தக் கிழவன் சொல்வதைக் கேள்!" என்றார் மிலாடுடையார்.

"அதனால் என்ன விபரீதம் நடந்து விடும் என்று கருதுகிறீர்கள்?" என்று குந்தவை கேட்டாள்.

"யாரோ சில பாதகர்கள் ஒரு பொய்யான வதந்தியைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள். அதைச் சொல்லவும் வாய் கூசுகிறது. பொன்னியின் செல்வர் தான் இராஜ்யம் ஆளும் ஆசையால் வந்தியத்தேவனை அனுப்பிக் கரிகாலரைக் கொல்லச் செய்ததாக நேற்று நம் சேனா வீரர்களிடம் இரண்டு பேர் வந்து சொன்னார்கள்..."

"தெய்வமே! இது என்ன பயங்கரமான அபவாதம்?" என்றாள் இளைய பிராட்டி குந்தவை.

"அந்த இருவரையும் நம் வீரர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? வடவாற்று வெள்ளத்தில் அமுக்கி அமுக்கி எடுத்துக்கொண்டிருந்தார்கள். நான் தற்செயலாக அங்கே போய் அவர்களைக் காப்பாற்றினேன்..."

பொன்னியின் செல்வர் குறுக்கிட்டு "இவ்வளவு கொடூரமான அபவாதத்தைச் சோழ நாட்டில் யாரும் நம்பப் போவதில்லை. நம் வீரர்களின் செய்கையிலிருந்தே தெரியவில்லையா?" என்றார்.

"இன்றைக்கு நம்ப மாட்டார்கள், இளவரசே! மக்களுடைய இயல்பு தங்களுக்குத் தெரியாது. சில காலத்துக்குப் பிறகு மறுபடியும் இந்த வதந்தி கிளம்பும். தங்களை அறியாதவர்கள் சிலர் நம்பக் கூடும். அன்னிய நாடுகளில் இராஜ்யத்துக்காக உறவினர்கள் ஒருவரையொருவர் கொன்று கொள்வது சர்வ சாதாரணமாயிருக்கிறது. ஈழ நாட்டு இராஜ வம்சத்தின் சரித்திரம் தங்களுக்குத் தெரியுமே...?

"சேனாதிபதி! பிற்காலத்தில் ஒரு பொய் வதந்தி பரவும் என்பதற்காக இன்றைக்கு என் பிராண சிநேகிதனைப் பாதாளச் சிறையில் விட்டு வைத்திருக்கச் சொல்கிறீர்களா?"

"பிற்காலத்தில் அல்ல, இளவரசே! இன்றைக்குத் தாங்கள் வந்தியத்தேவனின் விடுதலையில் ஊக்கம் எடுத்துக் கொண்டால் நாளைக்கே சிலர் அந்த வதந்தியில் நம்பிக்கை கொள்வார்கள். சக்கரவர்த்தியின் காதிலும் அது விழும். அதனால் தங்கள் தந்தையின் மனம் எவ்வளவு புண்படும் என்று யோசியுங்கள்!"

பொன்னியின் செல்வரின் திருமுகம் கருமேகத்தினால் மறைக்கப்பட்ட பூரண சந்திரனைப் போல் ஆயிற்று. குந்தவை தேவியைப் பார்த்து, "அக்கா! தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றார்.

இளையபிராட்டியின் முகம் மிக்க வேதனையைக் காட்டியது. அவர் பெரிய வேளாரைப் பார்த்து, "சேனாதிபதி! இத்தகைய கொடூரமான வதந்தியைப்

பரப்ப முயலுவோர் யாராயிருக்கும்?'' என்று கேட்டார்.

"வடவாற்றில் நம் வீரர்கள் முழுக்கு முழுக்கி எடுத்துக்கொண்டிருந்தவர்களை நான் தனியே அழைத்துக்கொண்டு போய் அவர்களை நயத்திலும் பயத்திலும் கேட்டேன். சம்புவரையர் மகன் கந்தமாறன்தான் இவ்விதம் சொல்லி அனுப்பியதாகக் கூறினார்கள்!"

அப்போது மணிமேகலை முன் வந்து, "என் தமையன் காரியத்துக்காக நான் வெட்கப்படுகிறேன். நல்லவனாயிருந்த என் அண்ணன் பழுவூர் இளையராணியின் போதனையினால்தான் இப்படிப் பாதகனாகிவிட்டான். உண்மையில் ஆதித்த கரிகாலரைக் கொன்றவள் நான். என்னைச் சிறைப்படுத்துங்கள்! வல்லத்திளவரசரை உடனே விடுதலை செய்யுங்கள்!" என்று ஆத்திரமும் அழுகையும் பொங்கக் கூறினாள்.

இளையபிராட்டி அவளுடைய முதுகை அன்புடன் தொட்டு, ''மணிமேகலை! சாந்தமாயிரு! நீ இவ்விதம் சொல்வதை யாரும் நம்ப மாட்டார்கள். மேலும் ஏதேனும் அபவாதத்தைக் கிளப்புவார்கள். இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்கு வழி கண்டுபிடிக்கலாம்'' என்றாள்.

பிறகு சேனாதிபதியைப் பார்த்து, ''ஐயா! தங்களுடைய புத்திமதியை நானும் என் சகோதரனும் ஒப்புக்கொள்கிறோம். இப்போது வல்லத்திளவரசரை



விடுதலை செய்ய முயல்வதால் வீண் வதந்திகள் ஏற்பட இடமுண்டு என்பது உண்மைதான். உண்மையான குற்றவாளியை முதலில் கண்டுபிடிக்க வேண்டும். இதைக் குறித்து முதன்மந்திரி அநிருத்தரிடம் நான் கலந்தாலோசிப்பேன். அவருடைய சீடன் ஆழ்வார்க்கடியான் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளைத் தேடிக் கொண்டு போயிருக்கிறான். அவன் ஏதேனும் தகவல் கொண்டு வருவான். பெரிய பழுவேட்டரையரும் பழுவூர் இளையராணியும் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. அவர்கள் கண்டுபிடிக்கப்பட்டாலும் உண்மை வெளியாகலாம். அதற்கிடையில் நான் இந்தப் பெண்ணிடம் கடம்பூரில் நடந்ததையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்! அதுவரையில் பாதாளச் சிறையில் வல்லத்திளவரசர் சௌகரியமாயிருப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள். அவர் இந்தப் பயங்கரமான கொலைக்குற்றத்தைச் செய்யவில்லை என்பது நிச்சயம்!'' என்றாள்.

இச்சமயத்தில் ''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது, அக்கா!'' என்றாள் கொடும்பாளூர் இளவரசி.

"சொல்,வானதி!" என்றாள் குந்தவை.

"முன்னொரு தடவை நாம் இருவரும் பாதாளச் சிறைக்குப் போய்விட்டு வந்தோமே, நினைவிருக்கிறதா? அது போல் நாம் எல்லாருமாக இன்றைக்கும்



போய்ப் பார்த்துவிட்டு வருவோம். கடம்பூர் இளவரசியையும் அழைத்துப் போவோம்!'' என்றாள் வானதி.

குந்தவை பெரிய வேளாரைப் பார்த்து, "சேனாதிபதி! தங்கள் குமாரியின் யோசனையைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''என் குமாரியும் புத்திசாலித்தனமாகப் பேசக் கூடும் என்று தெரிகிறது. கரிகாலர் இறந்த அன்றிரவு அதே இடத்தில் அவருடன் இருந்தவன் வல்லத்திளவரசன். அவனிடம் விசாரித்தாலும் உண்மை புலப்படலாம்'' என்றார் சேனாதிபதி பெரியவேளார்.

உடனே எல்லாரும் பாதாளச் சிறைக்குச் சென்றார்கள். சின்னப் பழுவேட்டரையர் கோட்டையை விட்டுப் போவதற்கு முன்னாலேயே தங்க நாணயங்கள் அச்சிடும் வேலையை நிறுத்திவிட்டார். ஆகையால், நாணயத் தொழிற்சாலை வெறுமையாக இருந்தது. காவற்காரர்களும் சிலர்தான் இருந்தார்கள். புலிகள் அடைத்து வைக்கப்பட்டிருந்த இடத்தைத் தாண்டிச் சுரங்க வழியில் பிரவேசித்துச் சென்று வல்லத்திளவரசன் வந்தியத்தேவன் அடைக்கப்பட்டிருந்த அறையை அடைந்தார்கள்.

ஆனால் அங்கே வந்தியத்தேவனை அவர்கள் காணவில்லை. அவனுடைய அறையில் சுவரில் மாட்டியிருந்த வளையங்களில் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்த வைத்தியர் மகன் பினாகபாணியைக் கண்டார்கள். அவன் இவர்களைக் கண்டதும், "ஐயோ! ஐயோ! என்னை விடுதலை செய்யுங்கள்! விடுதலை செயயுங்கள்!'' என்று பரிதாபமாக அலறினான்.

## ஐம்பத்து நான்காம் அத்தியாயம்

# பினாகபாணியின் வேலை



வைத்தியர் மகன் பினாகபாணி அரசாங்கத்தில் பெரிய பதவிக்கு வருவதென்று தீர்மானம் செய்திருந்தான். வந்தியத்தேவனைச் சந்தித்த நாளிலிருந்து அவனுடைய உள்ளத்தில் இந்த ஆசை தோன்றிக் கொழுந்துவிட்டு ஓங்கி வளர்ந்துகொண்டிருந்தது.

இதற்கு முன் அவன் ஈடுபட்ட சில காரியங்களில் அவன் அவ்வளவாக வெற்றி பெறவில்லை. நந்தினிதேவி அவனிடத்தில் சிறிது கருணை காட்டியது போலத் தோன்றியது. பிற்பாடு பழுவூர் ராணி அவனை அடியோடு மறந்துவிட்டாள். குந்தவை தேவியைப் பார்க்கப் போனபோது, அவர் அவனுடன் சரியாக முகம் கொடுத்துப்

பேசவும் இல்லை. பழையாறை அரண் மனை வாசலில் வந்தியத்தேவன் மீது 'ஒற் றன்' என்று குற்றம் சுமத்தியதில் அவனி டம் அடிபட்டதுதான் மிச்சமாயிற்றே தவிர லாபம் ஒன்றும் கிட்டவில்லை.

ஆனால் முதன்மந்திரி அநிருத்தர் அவனைக் கூப்பிட்டு அனுப்பிக் கோடிக் கரைக்குச் சென்று ஊமைராணியைப் பிடித்துக்கொண்டு வரும்படி அனுப்பிய போது, இனித்தான் பெரிய பதவிக்கு வரு வது நிச்சயம் என்று முடிவு செய்து கொண்டான். அந்தக் காரியத்தை எப்படி யாவது சரிவர நிறைவேற்றி விட்டால் போதும்; முதன்மந்திரியின் தயவினால் அவன் அடையக் கூடாதது ஒன்று மில்லை. பிறகு, முதற் காரியமாக வந்தியத் தேவனை ஒரு கை பார்க்க வேண்டும். அப்புறம், அந்தப் பூங்குழலியின் கர்வத் தையும் அடக்கி ஒடுக்கி விட வேண்டும்.

இந்த மாதிரி ஆகாசக் கோட்டைகள் கட்டிக்கொண்டு பினாகபாணி கோடிக் கரை சென்றான். அங்கே கோடிக்கரை யில் ராக்கம்மாளை மெள்ள வசப் படுத்திக்கொண்டான். அவள் அவனிடம் ஏமாந்து போனாள். ஆபத்துதவிக் கூட் டத்தில் சேர்ந்தவன் அவன் என்று எண்ணிக் கொண்டு அவர்களுடைய முயற்சிகளைப் பற்றி அவனிடம் பேசி னாள். அவள் உதவியைக் கொண்டு ஊமை ராணியைக் கண்டுபிடித்துத் தஞ்சைக் கோட்டை வாசல் வரையில் கொண்டு வந்து சேர்த்தான்.

இப் பிரயாணத்தின் போதெல்லாம் பினாகபாணியின் உள்ளம் வேலை செய்துகொண்டே இருந்தது. ஊமை ராணி சம்பந்தமான இரகசியங்களை அறி யப் பிரயத்தனம் செய்தது. பாதாளச் சிறை யில் அவன் ஒருநாள் அடைப்பட்டிருந்த போது அங்கிருந்த பைத்தியக்காரன் ஒரு வன் கூறிய விவரங்கள் நினைவுக்கு வந் தன. அப்போது அவை, பைத்தியக் காரனின் உளறலாக அவனுக்குத் தோன் றியது. இப்போது, அவன் கூறியவற்றில் உண்மையிருக்கும் என்று எண்ணினான்.

ஊமை ராணி ஏறி இருந்த பல்லக்கு தஞ்சைக் கோட் டைக்கு அருகில் வந்த சம யம் புயலும் மழையும் அடித்து அவன் மீது மரம் முறிந்து விழுந்ததல்லவா? அதனால் ஏற்பட்ட காயங்கள் ஆறிய பின்னர் அவன் முதன் மந்திரி அநிருத் தரைப் பார்க்கப் போனான். அதற் குள்ளே பல முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன. ஊமை ராணி சக்கர வர்த்தியின் உயிரைக் காப்பதற்காக உயிரை விட்டு விட்டாள். கரிகாலர் கொலையுண்டு இறந்துவிட்டார். அடுத்த பட்டம் யாருக்கு என்பதைப் பற்றி நாடு நகரமெல்லாம் அல்லோலகல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது. தஞ்சைக் கோட்டை கொடும்பாளூர் வேளாரின் வசத்துக்கு வந்துவிட்டது. பழுவேட்டரை யர்களும் அவர்களைச் சேர்ந்த சிற்றர சர்களும் படை திரட்டிக் கொண்டிருப் பதாகச் செய்தி பரவியது. பெரிய உள் நாட்டுப் போர் மூளலாம் என்பதற்கு அறிகுறிகள் தென்பட்டன.

இத்தகைய கொந்தளிப்பான நிலை யில் வைத்தியர் மகன் பினாகபாணி முதன்மந்திரி அநிருத்தரைப் போய்ப் பார்த்தான். பெருங் கவலைக் கடலில் ஆழ்ந்திருந்த அன்பில் பிரம்மராயர் பினாகபாணியோடு அதிகமாகப் பேசிக் காலம் போக்க விரும்பவில்லை. தாம் இட்ட காரியத்தை அவன் நிறைவேற்றி விட்டபடியால், அவனுக்குப் பரிசு கொடுத்துச் சீக்கிரமாக அனுப்பிவிட விரும்பினார்.

ஆனால் பினாகபாணி பாதாளச் சிறையில் தான் சந்தித்த பைத்தியக் காரனைப் பற்றிச் சொல்லத் தொடங் கியதும் அவருடைய கவனம் அவன் பக் கம் திரும்பியது. பாண்டிய ராஜ்யத்தின் புராதனமான மணிமகுடமும் தேவேந் திரன் அளித்ததாகக் கூறப்படும் இரத் தின ஹாரமும் இலங்கையில் எங்கே இருக்கின்றன என்பது அந்தப் பைத்தியக் காரனுக்குத் தெரியும் என்று கேட்டதும் அநிருத்தர் மிக்க ஆர்வம் கொண்டார். அந்த மணிமகுடத்தையும் இரத்தின ஹாரத்தையும் தேடிக் கண்டுபிடிப் பதற்குப் பராந்தக சக்கரவர்த்தியின் காலத்திலிருந்து முயன்றும் பலன் கிட்ட வில்லை. அவற்றைக் கைப்பற்றும் வரை யில் பாண்டிய வம்சத்தைச் சேர்ந்தவன்

என்பதாக யாராவது ஒருவன் முளைத்துக் கொண்டுதானிருப்பான். திருப்புறம்பயத்தில் நள்ளிரவில் ஒரு சின்னஞ்சிறு பையனைப் பாண்டிய சிங்காதனத்தில் ஏற்றி மகுடம் சூட்டிய நாடகத்தைப் பற்றி அநிருத்தர் ஆழ்வார்க்கடியான் மூலம் அறிந்திருந்தார். இம்மாதிரி யாராவது சிலர் அவ்வப்போது கிளம்பிக் கொண்டுதானிருப்பார்கள். அவர்களுக்கு ஈழத்து அரசர்களும் சேர மன்னர்களும் உதவி செய்வார்கள். பாண்டிய நாடு ஒரு வழியாகச் சோழ சாம்ராஜ்யத்துடன் சேர்ந்து விட்டதாக ஏற்பட வேண்டுமானால், சோழ சக்கரவர்த்தியே மதுரையிலும் முடி சூட்டிக் கொள்ள வேண்டும். அந்த வைபவத்தின் போது பாண்டிய இரத்தின ஹாரத்தையும் சோழர் சக்கரவர்த்தி அணிய வேண்டும்.


வையெல்லாம் முன்னமே அநிருத்தர் தீர்மானித்திருந்த காரியங்கள். ஆகையினாலேயே ஈழநாட்டுக்குப் படையெடுத்துச் சென்ற ஒவ்வொரு சோழ தளபதியிடமும் அநிருத்தர் மேற்கூறிய மணிமகுடத்தையும் இரத்தின ஹாரத்தையும் கண்டுபிடித்துக் கொண்டு வரும்படி சொல்லி அனுப்பி வந்தார். அதுவரையில் ஒருவராவது அக் காரியத்தில் வெற்றி பெறவில்லை.

இப்போது பாதாளச் சிறையில் உள்ள ஒருவனுக்கு அவை இருக்குமிடம் தெரியும் என்று கேள்விப்பட்டதும் அன்பில் அநிருத்தப் பிரமராயர் ஆர்வம் கொண்டது இயற்கையே அல்லவா?

வைத்தியர்மகன் இன்னொரு செய்தியும் கூறினான். அது முதன் மந்திரியின் ஆர்வத்தை அதிகமாக்கியதோடு கவலையையும் உண்டாக்கியது. அந்தப் பைத்தியக்காரன் சோழ வம்சத்தைப் பற்றி ஒரு மகத்தான இரகசியம் தனக்குத் தெரியும் என்றும், சோழ சிங்காதனத்துக்கு உரிமை கொண்டாடும் இளவரசன் ஒருவன் உண்மையில் சோழ வம்சத்தைச் சேர்ந்தவனே அல்ல என்றும் கூறியதாகப் பினாகபாணி சொன்னான்.

இதையெல்லாம் கேட்டதும் அநிருத்தர் முதலில் தாமே பாதாளச் சிறைக்குப் போய் அந்தப் பைத்தியக்காரனைப் பார்க்க எண்ணினார். பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டார். தாம் அங்கே போனால் எதற்கு என்னத்திற்கு என்ற கேள்விகள் கிளம்பும். மலையமானும் வேளாரும் அநிருத்தரிடம் பூரண நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. அவர் சக்கரவர்த்தியின் விருப்பத்தின்படி மதுராந்தகன் கட்சியை ஆதரிப்பதாகவே அவர்கள் கருதியிருந்தார்கள். தாம் பாதாளச் சிறைக்குப் போனால் அதிலிருந்து ஏதேனும் புதிய சந்தேகங்கள் அவர்களுக்கு ஏற்படும். சம்புவரையரைப் பார்க்கப் போவதாகவும் எண்ணிக் கொள்வார்கள். - இந்த அம்சத்தைப் பற்றி நன்கு யோசித்த பிறகு, அநிருத்தர் வைத்தியர் மகனையே உபயோகித்துக் கொள்ள விரும்பினார். தம் முத்திரை மோதிரத்தைக் கொடுத்துப் பாதாளச் சிறைக்குச் சென்று அந்தப் பைத்தியக் காரனைப் பார்த்து வரும்படி கூறினார்.

பினாகபாணி அவ்விதமே அப் பைத்தியக்காரனைப் பார்க்கப் போனான். பக்கத்து அறையில் வந்தியத்தேவன் அடைக்கப்பட்டுக் கிடந்ததைப் பார்த்ததும் அவனுக்குக் குதூகலமே உண்டாகிவிட்டது. அந்த அறையின் வாசலில் சிறிது நின்று வந்தியத்தேவனுடன் பேச்சுக் கொடுத்தான். வந்தியத்தேவன் அவனுடன் பேசவில்லை. அதனால் ஆத்திரம் அடைந்து அவனை நன்றாகத் திட்டிவிட்டு அடுத்த அறைக்குப் போனான். பைத்தியக்காரன் அவனிடம் சுமுகமாகப் பேசினான். உண்மையில் அவன் பைத்தியக்காரன் அல்ல என்பதைப் பினாகபாணி கண்டுகொண்டான். பிறகு, பாண்டிய நாட்டு மணிமகுடம் - இரத்தின ஹாரம் ஆகியவற்றைக் குறித்துக் கேட்டான். பைத்தியக்காரன் உடனே மௌனமானான். சோழ வம்சத்து இரகசியத்தைப் பற்றியும் சொல்ல மறுத்துவிட்டான். "எனக்கு

முதலில் விடுதலை உத்தரவு வாங்கி வா! பிறகுதான் சொல்வேன்!'' என்று கூறி விட்டான்.

திரும்பி வந்து பினாகபாணி முதன் மந்திரியிடம் தன்னுடைய தோல்வியைப் பற்றிக் கூறினான். அவனை விடுவித்துக்கொண்டு வந்தால் நிச்சயம் பலன் கிட்டும் என்று தெரிவித்தான். முதன்மந்திரிக்கும் அது உசிதமாகத் தோன்றியது. இம்மாதிரி இராஜ்ய உரிமை பற்றிக் குழப்பம் ஏற்பட்டிருக்கும் நிலைமையில் அபாயகரமான இரகசியங்களைப் பற்றிப் பேசும் பைத்தியக்காரனைச் சிறையில் வைத்திருக்கக்கூடாது என்று கருதினார். அவனைத் தமது அரண்மனைக்கே அழைத்து வந்து உண்மையை அறிய வேண்டும் என்று எண்ணினார்.

அதன்பேரில் கொடும்பாளூர் வேளாரைப் பார்த்து அவரிடம் ஒருவாறு இந்தச் செய்தியைக் கூறினார். சின்னப் பழுவேட்டரையரால் பல வருஷங்களுக்கு முன்னால் சிறையில் அடைக்கப்பட்ட கைதியை முதன் மந்திரியின் விருப்பத்தின் பிரகாரம் விடுதலை செய்வதில் பெரிய வேளாருக்கு ஆட்சேபம் ஒன்றும் தோன்றவில்லை. எனவே, அப்பைத்தியக்காரக் கைதியை விடுதலை செய்யக் கட்டளை எழுதிக் கொடுத்தார்.

அதை வாங்கிக்கொண்டு பினாகபாணி கர்வத்துடன் பாதாளச் சிறைக்குச் சென்றான். முதலில் வந்தியத்தேவன் அறையின் வாசலில் நின்று அவனை விடுதலை செய்ய உத்தரவு கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். வந்தியத்தேவன் அதை உண்மை என்று நம்பி நன்றி கூறத் தொடங்கினான். உடனே பினாகபாணி தன் உண்மை சொரூபத்தைக் காட்டலானான். வந்தியத்தேவனை நன்றாகத் திட்டிவிட்டு, ''உனக்கு நாற்சந்தி மூலையில் கழு மரத்தின் மேலேதான் விடுதலை'' என்று எகத்தாளம் செய்தான். பின்னர் அடுத்த அறைக்குச் சென்று பைத்தியக்காரனுடன் சுமுகமாகப் பேசினான். அவனைச் சுவரோடு சேர்த்துப் பிணைத்திருந்த சங்கிலிகளை அவிழ்த்து விட்டான். ''இதோ உனக்கு விடுதலை உத்தரவு வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். இப்போதாவது உனக்குத் தெரிந்த இரகசியங்களைச் சொல்லுவாயா?'' என்ற கேட்டான்.

முதன்மந்திரி அநிருத்தரிடம் அழைத்துப் போவதற்கு முன்னால் தானே அந்த இரகசியங்களை அறிந்து கொள்ள வைத்தியர் மகன் விரும்பினான்.

பைத்தியக்காரன் தன்னுடைய விடுதலையில் அவ்வளவு உற்சாகம் கொண்டவனாகக் காணப்படவில்லை. வெளியேறுவதற்கும் அவசரப்பட்டவனாகத் தோன்றவில்லை. பினாகபாணியின் வார்த்தையில் அவ்வளவு நம்பிக்கை கொண்டவனாகவும் தெரியவில்லை. ''என்ன? ஏது? உத்தரவு யார் கொடுத்தது? சிறையிலிருந்து வெளியேறுவது நிச்சயமா? கோட்டையிலிருந்து வெளியே போக விடுவார்களா?'' என்று கேட்டுக் கொண்டிருந்தான்.

திடீரென்று பக்கத்துச் சுவரிலிருந்து சில கற்கள் பெயர்ந்து விழுந்தன. பினாகபாணி என்னவென்று திரும்பிப் பார்த்தபோது வந்தியததேவன் அவன் பின்னால் நிற்பதைக் கண்டான். பினாகபாணி இடுப்பில் செருகியிருந்த கத்தியை அவசரமாக எடுத்துக் கொண்டான். வந்தியத்தேவன் அவன் மீது பாய்ந்து கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். கையிலிருந்த கத்தியையும் தட்டி விட்டான். இருவரும் சிறிது நேரம் உருண்டு புரண்டு துவந்த யுத்தம் செய்தார்கள். அச்சமயம் பைத்தியக்காரன் சுவரில் மாட்டியிருந்த சங்கிலி ஒன்றைத் தூக்கிப் பினாகபாணியின் கழுத்தில் போட்டு இறுக்கினான்...

(தொடரும்)



## நன்கு வளர்ச்சியடைந்த
## சென்னைப் புறநகர்ப் பகுதியில்
## டீலக்ஸ் அபார்ட்மெண்டுகள் ரூ.3.41 லட்சம் முதல்!!

### சிக்கனமான விலையில் வசதியான வாழ்க்கை



ராஜகீழ்ப்பாக்கம்

**ஹன்ஸா கார்டன்**

தாம்பரத்திற்கு முன்னதாக அமைந்துள்ள ஹன்ஸா கார்டன், ஒன்று / இரண்டு படுக்கையறை மற்றும் இரண்டு படுக்கையறை + படிப்பறை கொண்ட ஃப்ளாட்டுகளை வழங்குகிறது.

நேர்த்தியான வடிவமைப்பு, தரமிக்க கட்டுமானம்.

- ஒரு படுக்கையறை ஃப்ளாட்டின் விலை ஏறத்தாழ ரூ.3.41 லட்சம். இரண்டு படுக்கையறை ரூ.4.64 லட்சம் முதல். இரண்டு படுக்கையறை + படிப்பறை ரூ.5.58 லட்சம் முதல்.
- ஃப்ளாட் முழுவதும் செராமிக் டைல்ஸ் ஃப்ளோரிங்.
- ஒவ்வொரு ஃப்ளாட்டிற்கும் தொலைபேசி மற்றும் டிஷ் ஆன்டெனா இணைப்பு.
- சுத்தப்படுத்தப்பட்ட குடிநீர் சப்ளை மற்றும் நவீன முறையில் அமைக்கப்பட்ட கழிவுநீர் சுத்திகரிப்பு.
- விளையாட போதுமான இடவசதி மற்றும் புல்வெளியமைந்த சுற்றுச்சூழல்.
- தாம்பரம் ரயில் நிலையம் செல்ல காம்ப்ளக்ஸிற்கே சொந்தமான போக்குவரத்து வசதி.
- பாரிமுனை, அண்ணாசாலை, சைதாப்பேட்டை, வேளச்சேரி, தி.நகருக்கு நேரடி அரசு பேருந்துச் சாலை இணைப்பு.

***இடம் : மாடம்பாக்கம் பிரதான சாலை, ராஜகீழ்ப்பாக்கம், வேளச்சேரி - தாம்பரம் சாலையில் தாம்பரத்திற்கு 5 கி.மீட்டருக்கு முன்னால் உள்ளது.***



குரோம்பேட்டை

**ஹன்ஸா வந்தனா**

குரோம்பேட்டை ரயில் நிலையம் அருகில் அமைந்துள்ள ஹன்ஸா வந்தனா, ஒன்று மற்றும் இரண்டு படுக்கையறை கொண்ட டீலக்ஸ் அபார்ட்மெண்டுகளை உங்களுக்கு வழங்குகிறது.

- நான்கு ஃப்ளாட்டுகள் உள்ள தனித்தனி கட்டிடம்.
- ஃப்ளாட்டின் விலை ரூ.4.21 லட்சம் முதல்.
- ஃப்ளாட் முழுவதும் செராமிக் டைல்ஸ் ஃப்ளோரிங்.
- வாட்டர் ட்ரீட்மெண்ட் பிளாண்ட்.

**இடம் : நாயுடு ஷாப் ரோடு, ராதா நகர், குரோம்பேட்டை.**

புக்கிங்கிற்கு அணுகவும்:



**ஹன்ஸா எஸ்டேட்ஸ் பிரைவேட் லிமிடெட்**

கிவ்ராஜ் எஸ்டேட்ஸ், நான்காம் தளம்,
624, அண்ணா சாலை, சென்னை - 600 006.
**போன் : 8293135, 8292315, 8292323**
**ஃபேக்ஸ் : 8293135.**
email : hansaest@md4.vsnl.net.in

# இந்தக் கலைஞனை வாழவைக்க என்ன வழி?

**ச**சி.

என் உயிர் நண்பன்.

தமிழ்ப் பத்திரிகைகளில் கவிதைகளுக்கும், சிறுகதைகளுக்கும் தொடர்களுக்கும் தனது ஓவியங்களால் உயிரூட்டிக் கொண்டிருந்த கலைஞன். இரவு பகல் பார்க்காமல் அசுரத்தனமாக உழைத்து அதிவேகமாக முன்னேறிக் கொண்டிருந்த இளைஞன்.

அவனுக்கா இப்படி ஒரு நிலைமை வரவேண்டும்?

எந்த இதழிலும் சில நாட்களாகவே அவனது ஓவியங்கள் தென்படவில்லை என்றதும் எங்கேயோ என்னவோ நடந்திருக்கிறது என்று சந்தேகப்பட்டேனே, அது அர்த்தமற்ற சந்தேகமாகவே போயிருக்கக் கூடாதா?

**நா**ன் அப்போது +2 படித்துக் கொண்டிருந்தேன். தஞ்சாவூரில் உள்ள ஆடுதுறைதான் எங்கள் சொந்த ஊர். ஒருநாள் ஒரு கல்லூரி மலரைப் புரட்டிக் கொண்டிருந்தபோது, கவிதை ஒன்றுக்காக வரையப்பட்ட ஓவியம் என்னை ரொம்பவே கவர்ந்தது. இந்திய வரைபடத்தின் மீது பாரதமாதா வித்தியாசமாகக் காட்சி அளித்தாள். ஓவியம் வரைந்த மாணவனின் பெயரும் விலாசமும் அச்சாகி இருந்தன. அவன் உள்ளூர் என்று தெரிந்ததும் அவனை உடனே பார்க்கவேண்டும் என்று ஏனோ தோன்ற, கிளம்பிவிட்டேன்.

'**ந**டுத்தர வர்க்கம்' என்று பறைசாற்றும் வீடு. நான் போனபோது வரைந்து கொண்டிருந்தான். தனது ஓவியத்தைப் பாராட்ட முதன்முதலில் ஒரு ரசிகன் வந்திருக்கிறான் என்றதும் அவன் மகிழ்ச்சியில் திக்குமுக்காடிப்போனது அப்பட்டமாகத் தெரிந்தது. ஏன் ஓவியக்கல்லூரியில் சேர்ந்து படிக்காமல் என்ஜினியரிங் டிப்ளமா படித்துக் கொண்டிருக்கிறாய் என்று கேட்டபோது ஐந்தாண்டுகள் படிக்க குடும்பச் சூழ்நிலை இடம் தராது என்று

ஏக்கத்துடன் சொன்னான். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு வந்தேன்.

சந்திப்புகள் அடிக்கடி நிகழவும் ஆழமான நட்பு ஒன்று துளிர்விட்டது.

கோர்ஸ் முடிந்த கையோடு பத்திரிகைகளுக்குப் படம் போட்டு அஞ்சலில் அனுப்பத் தொடங்கினான். தினமலர் வாரமலரில் ஒரு கவிதைக்காக அவனுடைய ஓவியம் பிரசுரமான போது அதிகம் சந்தோஷப்பட்டவன் நான்தான். 'இனி நீ இருக்க வேண்டிய இடம் சென்னை' என்று அவனுக்குத் தன்னம்பிக்கை ஊட்டி சென்னைக்கு அனுப்பிவைத்தேன்.

வில்லிவாக்கத்தில் ஒரு சின்ன அறையில் தங்கிக் கொண்டு சைக்கிளில் எல்லா பத்திரிகை ஆபீஸ்களுக்கும் சென்று வருவதாகக் கடிதம் எழுதினான்.

துணுக்குகளுக்குப் படம் போட்டுக் கொண்டிருந்தவனின் திறமையைப் பார்த்து சிறுகதை, தொடர் என்று பெரிய வாய்ப்புகளைக் கொடுத்து பத்திரிகைகள் உற்சாகப்படுத்தின. எதிர் பார்ப்பு அதிகமானவுடன் இன்னும் அதிகமாக உழைத்தான். ஓவியங்கள் யாருடைய சாயலி லும் இருக்கக் கூடாது என்று தனக்கென ஒரு தனி பாணியை உருவாக்கிக் கொண்டான். விடிய விடிய ஓவியம் வரைந்து காலை ஒன்பது மணிக்குப் பத்திரிகை அலுவலகங்கள் திறந்தவுடன் படங்களைக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டுதான் மறுவேலை பார்ப்பான்.

இரண்டு மாதத்துக்கு ஒருமுறை வந்து போகும் என்னிடம் "நீ பக்கத்தில் இருந்தால், நான் இன்னும் கூட சாதிப்பேன், நீ இங்கேயே இருந்துவிடு!" என்று ஒரு குழந்தையைப் போல் கெஞ்சுவான்.


• சங்கர்

உழைப்பாலும் திறமையாலும் வாசகர்களின் மனத்தில் ஒரு ஸ்திரமான இடத்தைப் பெற்று வேகமாக முன்னேறியவனுக்கு எவ்வளவு பெரிய பேரிடி?

உழைப்பாலும் திறமையாலும் வாசகர் களின் மனத்தில் ஒரு ஸ்திரமான இடத்தைப் பெற்று வேகமாக முன்னேறியவனுக்கு திருமணமாகி ஒரு வருடம் கூட பூர்த்தி ஆகாத நிலையில் வாழ்க்கையில் எவ்வளவு பெரிய பேரிடி?

திடீரென்று இரண்டு நாட்களுக்கு வயிற்று வலி வாந்தி என்று அவதிப்பட்டவன் டெஸ்ட் செய்து கொண்டபோது நுரையீரலில் புற்றுநோய் என்பது ஊர்ஜிதமானதும்;

பல மருத்துவர்கள் கைவிட்டுவிட்ட நிலையில் தி.நகர் ரமணா மருத்துவமனையின் டாக்டர். ரங்கபாஷ்யம் மட்டும் "ஆபரேஷன் செய்து கட்டியை அகற்றுகிறேன், வைத்தியச் செலவுக்கு ஏற்பாடு செய்யுங்கள்!" என்று துணிந்ததும்;

அவனது பெற்றோரும் மனைவி வீட்டாரும் சாப்பாட்டுக்கு என்று இருந்த விவசாய நிலங்கள், வீடு என்று எல்லாவற்றையும் விலையாக்கிக் கொண்டுவந்து தந்ததும் ஆபரேஷன் நடைபெற்றதும் பழைய கதை.

ஆபரேஷன் வெற்றி அடைந்து, அவன் உயிர் பிழைத்துவிட்டான் என்று டாக்டர் சொன்னவுடன்... அப்பப்பா... நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை!

அவன் பட்ட கஷ்டங்கள் அதோடு முற்றுப்பெற்றிருக்கக் கூடாதா?

தொடர்ந்து கீமோதெராபி சிகிச்சை செய்தால்தான் அவன் உயிர் வாழ முடியும்– அதற் குத் தனியாக ஐந்து லட்ச ரூபாயும், இனி வாரம் ஒன்றுக்கு மருந்து மாத்திரைகளுக்கு மூவாயிரம் ரூபாயும் ஏற்பாடு செய்யச் சொல்லி டாக்டர் சொல்ல, நாங்கள் ஸ்தம்பித்து விட்டோம்.

டைப்ரைட்டர் மெக்கானிக்காக இருக்கும் நான் ஆறுதலாக அவன் அருகில் இருப்பதைத்தவிர வேறு என்ன செய்ய முடியும் என்று எனக்குத் துக்கம் பீறிட; ஒரு பொட்டு நிலம் பாக்கி இல்லாமல் எல்லாவற்றையும் ஆபரேஷன் போது விற்றுவிட்டோமே, இப்போது மறுபடியும் பணத்துக்கு எங்கே போவது என்று பெரியவர்கள் கதற; இப்படி எல்லாம் நடக்கும் என்று தெரிந்திருந்தால் கல்யாணம் செய்து கொண்டு ஒரு பெண்ணின் வாழ்க்கையை வீணடித்திருக்கமாட்டேனே என்று அவன் தேம்ப... இதுதான் இன்றைய நிலைமை.

மது, புகை என்று எந்த கெட்டபழக்கமும் இல்லாத என் நண்பனுக்கு ஏன் இப்படி நேரவேண்டும்? முழுநேர ஓவியனாக வேண்டும் என்ற ஒரே லட்சியத்துக்காக மின்சார வாரியத்திலிருந்து வந்த வேலையைக்கூட நிராகரித்தானே, அந்தக் கலைஞனை, அவனுடைய கலையை வாழவைக்க எங்களுக்கு ஒரு வழி கிடைக்காதா?

சங்கர்

சந்திப்பு: ஜெயந்த்



# ஏராள ஜஹான்











போட்டிகள் நடத்தி கோடீசுவரன்களை, லட்சாதிபதிகளை, குரோர்பதிகளை உருவாக்கும் 'பெரிய' பணியை நிறைய பேர் செய்து கொண்டிருக்க, 'இனோவேஷன் இன் எஜுகேஷன்' என்ற தலைப்பில் போட்டி நடத்தி வருங்காலத்தின் தலைசிறந்த விஞ்ஞானிகளை அடையாளம் காட்டும் 'சிறிய' பணியைச் செய்திருக்கிறது இன்டெல் நிறுவனம்.

இந்தியா முழுவதும் ஒன்பதாயிரம் மாணவர்கள் கலந்து கொண்ட இந்தப் போட்டியில் சென்னையைச் சேர்ந்த பிரகதீஷ் சுப்பிரமணியம், சந்தீப் கிருஷ்ணா, சுரேஷ் கோபாலகிருஷ்ணன் ஆகிய மூவரும் தேசிய அளவில் நடைபெறப்போகும் 'ஃபைனல்ஸு'க்குத் தேர்வு செய்யப்பட்டிருக்கிறார்கள்.

பரிசை வாங்கித்தந்த அவர்களுடைய கண்டுபிடிப்புகளைப் பற்றி விளக்கம் கேட்டோம்...

*பிரகதீஷ் சுப்பிரமணியம் (10ம் வகுப்பு, பவன்ஸ் இராஜாஜி வித்யாஷ்ரம்)*

புது புது விவசாய உத்திகளைக் கண்டுபிடித்து, இரசாயன உரங்களையும் பூச்சி மருந்துகளையும் அதிக அளவில் உபயோகிக்க தொடங்கிவிட்டோம். ஆனால் மண்ணின் தன்மைக்கு ஏற்ப சரியான அளவு உரங்களைப் போடுகிறோமா என்றால் அதுதான்





# சே அச்சா!



இல்லை. பெரும்பாலும் தேவைப்படும் அளவுக்கு அதிகமாகவோ குறைவாகவோதான் போடுகிறோம். பூச்சி மருந்துகளை உபயோகப் படுத்தும்போதும் இதே பிரச்னைதான். பலன், மண்ணிலும் சரி சுற்றுச் சூழலிலும் சரி, நச்சுத்தன்மை அதிகரித்துவிட்டது. இன்னொரு விஷயம். இரிகேஷன், அதாவது நீர்ப்பாசனம் செய்யும்போது பயிரின் வயது, அதனுடைய தற்போதைய வளர்ச்சி நிலை இவற்றைப் பற்றி எல்லாம் நாம் கவலைப்படுவதே இல்லை. பலன், பயிர்களின் தரம் பாதிக்கப்பட்டு விடுகின்றது.

இந்தப் பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் வகையில் ஒரு 'கன்ட்ரோல்டு ஸ்பிரிங்க்ளர் இரிகேஷன் சிஸ்டம்'ஐ அதாவது, கட்டுப்படுத்தப்பட்ட தூவல் பாசன முறையை உருவாக்கினால் என்ன என்று தோன்றியது.



நான் கண்டுபிடித்த சிஸ்டத்தை விளக்குகிறேன்...

• கரும்பு பயிரை எடுத்துக் கொள்ளுங்கள். அதைச் சாகுபடி செய்வதில் வெவ்வேறு ஸ்டேஜ்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஸ்டேஜிலும் அதனு டைய வளர்ச்சிக்குத் தேவையான சத்துகள், நீரின் அளவு இவற்றைப் பற்றி எல்லாம் வேளாண்மை ஆராய்ச்சியாளர்கள் ஏற்கெனவே கண்டு பிடித்து வைத்திருக்கிறார்கள். இந்த தகவல்களை ஆதாரமாகக் கொண்டு ஒரு கரும்பு சாகுபடி ப்ரோக்ராம் எழுதுவதுதான் முதல்படி. அதாவது, பயிரின் வயதையும் அதன் தற்போதைய நிலையைப் பற்றியும் தகவல் தந்துவிட்டால், பயிருக்கு இந்த அளவு நீர் தேவைப்படும்... இந்த அளவு உரம் தேவைப்படும் என்று இந்தப் ப்ரோக்ராம் கணக்கிட்டுச் சொல்லிவிடும்.



ப்ரோக்ராம் என்ன அளவுகளை அறிவுறுத்துகிறதோ அதை உத்தரவாக மாற்றும் ஒரு 'கன்ட்ரோல்-பானல்'ஐ அடுத்து அமைக்க வேண் டும்.

• கன்ட்ரோல் பானலின் உத்தரவைச் செயலாக்க, ஸ்பிரிங்க்ளர் கருவியைக் கட்டுப்படுத்தும் ஒரு 'கன்ட் ரோலிங் டிவைஸ்'ஐ பானலுடன் இணைத்துவிட வேண்டும்.



• சந்திப் • சுரேஷ்







* இப்போது, ஆராய்ச்சியாளர்கள் பொரிக செய்த அளவு நீரும், உரமும் ஸ்பிரிங்க்ளர் கருவி மூலம் பயிர்களின் வேர் பாகத்துக்குச் சீராக எடுத்துச் செல்லப்பட்டுவிடும்.

* இதே உத்தியை உபயோகித்து, மழைத் துளியின் அளவு, அதன் அடர்த்தி இரண்டையும் தணிக்கை செய்து, பயிருக்குத் தேவையான மழைநீர் மட்டுமே அதைச் சென்றடையும்படி கூட செய்யலாம்.

இந்தக் கண்டுபிடிப்பை ஒர்க்கிங் மாடலாக உருவாக்க வேளாண்மை ஆராய்ச்சி கூடங்களை அணுகப் போகிறேன்.

ஆஸ்ட்ரோ-ஃபிஸிக்ஸ் படித்து விண்வெளி ஆராய்ச்சியில் சாதிப்பதுதான் தனது லட்சியம் என்று கூறும் பிரகதீஷிடம் விவசாயத்துக்கும் விண்வெளிக்கும் அதிக இடைவெளி இருக்கிறதே என்று கேட்டோம்...

"அயல் கிரகங்களில் குடியேறுவது பற்றி மில்லியன் கணக்கில் செலவு செய்து ஆராய்ச்சி நடத்தி வருகிறோம். வெளிகிரகங்களில் மனிதன் குடியேற வேண்டும் என்றால் முதலில் அங்கே தாவரங்கள் வளரும் சூழ்நிலை உருவாக்கப்பட வேண்டும். அது குறித்த சாத்தியங்கள் பற்றியே நான் ஆராய்ச்சி செய்ய விரும்புகிறேன்" என்றார்.



**சந்தீப் கிருஷ்ணா, சுரேஷ் கோபால கிருஷ்ணன் (+2, பத்மா சேஷாத்ரி)**

'டீம்-கேடகரி'யில் வெற்றி பெற்றிருக்கும் இவர்கள் இருவரும் உயிர் நண்பர்களாம். சுரேஷ் சொல்லுகிறார்:

என்னுடைய சொந்த ஊர் ஆந்திராவில் உள்ள தளப்புள்ளா என்ற கிராமம். கோடை விடுமுறைக்கு ஒரு தடவை ஊருக்குச் சென்றிருந்தேன். போய்ச் சேர்ந்த மறுநாள் காலை ஏதோ முக்கியமான ப்ரோக்ராம் பார்ப்பதற்காக தொலைக்காட்சியைத் தட்டிய அடுத்த நிமிடம் மின்சாரம் போய்விட்டது. காலை 8:00 மணிக்கு போன கரண்ட் திரும்ப வரும்போது இரவு 8:00 மணி. வீட்டில் உள்ளவர்களை விசாரித்தபோது கடந்த ஆறுமாதமாகவே இதுதான் நிலைமை என்றார்கள். நொந்து விட்டேன்.

விடுமுறை முடிந்து சென்னை வந்தவுடன் சந்தீப்பிடம் என் 'இருண்ட' நாட்களின் அனுபவத்தைச் சொன்னேன்.

அன்றிலிருந்து, நேரம் கிடைக்கும் போதெல்லாம் இருவரும் இதைப்பற்றியே பேசுவோம். திடீரென்று ஒரு யோசனை தோன்றியது - கிராமங்களில் விவசாயம் செய்யப்படாத பல நிலங்கள் இருக்கின்றன. அவற்றை வைத்து மின்சாரம் தயார் செய்தால் என்ன என்று! இது குறித்து நிறைய ஆராய்ந்தோம், விவாதித்தோம். கடைசியில் வழியைக் கண்டுபிடித்து விட்டோம்.

எங்களது கண்டுபிடிப்பு...

* காற்று எப்பொழுதுமே அழுத்தம் அதிகமாக உள்ள இடத்திலிருந்து அழுத்தம் குறைவான பகுதிக்குப் பாயும் தன்மை கொண்டது. வெற்று நிலப்பகுதியில் செயற்கையான முறையில் குறைவான அழுத்தத்தை உண்டு பண்ணிவிட்டால் காற்று அசுர வேகத்தில் அங்கே பாய்ந்து வரும். இந்த காற்றை உபயோகித்து பல இறக்கைகள் கொண்ட காற்றாலைகளை இயக்கி மின்சாரத்தை உண்டு பண்ணுவது.

* வெற்று நிலத்தில் குறைந்த அழுத்தம் உருவாக்குவதற்கு இரும்புப் பட்டைகளை பூமியில் புதைத்து சூரிய வெப்பத்தால் நிலத்தை சூடாக்கி 'தர்மோகப்பின்' முறையில் அதே நிலைத்தைக் குளிர்வித்தால் நிலம் குறைவான அழுத்தத்துக்கு உள்ளாகிவிடும்.

* இந்த முறையில் மின்சாரம் உற்பத்தி செய்ய, ஒரு முறை முதலீடு செய்தால் போதும். பிறகு பராமரிப்புச் செலவு கிடையாது. அதனால் மிகவும் குறைந்த செலவில் மின்சாரம் உற்பத்தி செய்து விடலாம்.

இருவரும் மேல்நிலை கல்வி முடித்தபிறகு இன்ஜினியரிங் கோர்ஸில் சேர்ந்துவிட இப்போதே ஐஐடி நுழைவுத்தேர்வை எழுதி முடித்துவிட்டார்களாம். இரண்டுபேருக்குமே கவிதை எழுதுவதுதான் பொழுதுபோக்கு என்கிறார்கள்!

வரும் பிப்ரவரி மாதம் மும்பையில் நடக்க இருக்கும் 'ஃபைனல்ஸ்' இல் ஜெயித்து மே மாதம் சர்வதேச அளவில் நடக்கப்போகும் போட்டியிலும் வெற்றிபெற கல்கி வாசர்கள் சார்பில் வாழ்த்தி, கை குலுக்கிவிட்டு வந்தோம்!

— **ஜெயன்**

படங்கள்: **ராஜன்**

# பெரிய புராணக் கட்டுரைப் போட்டி

**முதல் பரிசு ரூ. 15 ஆயிரம்**

சென்னை, ஜன. 12—

'பெரிய புராணத்தில் வாழ்க்கை நெறி' என்ற தலைப்பிலான கட்டுரைப் போட்டியை இந்து மிஷன் நடத்துகிறது.

பெரிய புராணத்தில் விவரிக்கப்படும் வாழ்க்கை நெறிகளைப் பின்பற்ற வேண்டும் என்ற விருப்பத்துடன் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் இப்போட்டியை அறிவித்துள்ளார்.

இப் போட்டியில் பங்கேற்க வயது வரம்பு கிடையாது. ஒரு பக்கத்துக்கு 25 வரிகளுடன் 40 பக்கங்களுக்கு மிகாமல் கட்டுரையை எழுதலாம்.

வெற்றி பெறும் கட்டுரைகள் குறித்த எல்லா உரிமைகளும் இந்து மிஷனையே சாரும். அத்துடன் போட்டிக்கு அனுப்பப்படும் கட்டுரைகள் திருப்பி அனுப்பப்பட மாட்டாது.

செயலாளர், இந்து மிஷன், சங்கர பவனம், 1076, 19 - வது பிரதான சாலை, அண்ணாநகர் மேற்கு, சென்னை - 40 என்ற முகவரிக்கு கட்டுரைகளை அனுப்பலாம். தொலைபேசி எண் - 6267904. கட்டுரைகள் வந்து சேர இறுதி தேதி - 10.2.2001.

முதல் பரிசு ரூ. 15 ஆயிரம். 2-வது பரிசு ரூ. 10 ஆயிரம்; 3-வது பரிசு ரூ. 5 ஆயிரம். இவை ரொக்கமாக வழங்கப்படும். இதர பத்து கட்டுரைகளுக்கு ஆறுதல் பரிசாக தலா ரூ. ஆயிரம் வழங்கப்படும். பரிசுத் தொகையுடன் சான்றிதழும் வழங்கப்படும்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்திலுள்ள மடம் வளாகத்தில் இந்து மிஷன் ஏற்பாடு செய்யும் நிகழ்ச்சியில் பரிசுகளும், சான்றிதழ்களும் வழங்கப்படும்.

நன்றி : **தினமணி** - 13.1.2001

3

**ய**முனா மறுபடியும் அந்த நான்கு வரிக் கவிதையை, கலக்கம் ஈஷிக் கொண்ட பார்வையோடு பார்த்தாள்.

*யமுனா நதியும்*
*தாஜ்மஹாலும்*
*பிரியலாம்.*
*யமுனா! நீ என்னைப்*
*பிரியலாமா?*
*உன் லீல்.*

இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் யமுனாவை ஒரு சின்னப் புன்னகையோடு தலையை ஒரு பக்கமாய்ச் சாய்த்துப் பார்த்தார்.

"இந்த கவிதைக்கு என்ன சொல்றீங்க...?"

"ஸ... ஸார்...! எனக்கு ஒண்ணுமே புரியலை. நீங்க சொல்ற லீலாகிருஷ்ணனை எனக்குச் சத்தியமா தெரியாது ஸார்."

"ஸாரி மிஸஸ் யமுனா...! இந்த 'தெரியாது... தெரியாது' என்கிற வார்த்தையை நீங்க ரொம்ப நேரத்துக்கு சொல்லிட்டிருக்க முடியாது. லீலாகிருஷ்ணன் தற்கொலை பண்ணிக்கிறதுக்கு முந்தி எழுதி வெச்ச லெட்டர் இது. இதையும் படிக்கப் பார்த்துக்குங்க..." நான்காய் மடிக்கப்பட்ட ஒரு கடிதத்தை யமுனாவிடம் நீட்ட அவள் உடல் நடுக்கத்தோடு பின்வாங்கினாள்.

"வே... வேண்டாம் ஸார்..."

"வேண்டாமா...? சரியாப் போச்சு...! நீங்க வேண்டாம்னு சொல்லிட்டா நானும் சரின்னு தலையாட்டிட்டுப் போயிட முடியாதம்மா. இது போலீஸ் கேஸ். நியாயப்படி பார்த்தா உங்க வீட்டு சோபாவில் உட்கார்ந்துகிட்டு எல்லார் முன்னாடியும் என்கொயரி பண்ணணும். இந்த கேஸை நான் அப்படி டீல் பண்ண விரும்பலை. காரணம் எனக்கு வேண்டியது உண்மை. இந்த உண்மையை இந்த காம்பவுண்ட் கேட் வாசலிலேயே சொன்னாக்கூட போதும்... நான் திரும்பிப் போயிடுவேன்... நீங்களும் லீலாகிருஷ்ணனும் காதலர்களா...?"



"இ.. இல்லை..."

"பின்னே... அந்தக் கவிதை....?"

"பொய்...."

"இந்த லெட்டர்....?"

"அதுவும் பொய்..."

"படிச்சுப் பார்க்காமலேயே பொய்ன்னு சொன்னா எப்படி...? படிச்சுத்தான் பாருங்களேன்..."

யமுனா கலவரமாய் வீட்டின் உட்பக்கம் திரும்பிப் பார்த்தாள். யாரும் பார்வைக்கு கிடைக்கவில்லை. பக்கத்து வீட்டு டி.வி. 'கோல்ட்வின்னர் கோல்ட்வின்னர்தான்' என்று சத்தியம் செய்து கொண்டிருந்தது.

"ம்... லெட்டரைப் படிங்க யமுனா.

# நில்ல

சின்ன லெட்டர் தான்..."

வியர்த்து வழிகிற முகத்தைச் சேலைத் தலைப்பால் ஒற்றிக் கொண்டு கடிதத்தைப் பரபரவென்று பிரித்தாள். கவிதையில் பார்த்த அதே சாய்வான எழுத்துக்கள்.

*என் இனிய யமுனா!*

*என் இறுதிப் பயணத்துக்கு நான் குறித்து விட்டேன். நான் உன்னிடம் சொன்ன ஒரு சின்னப் பொய் தீப்பிழம்பாய் மாறி நாம் வளர்த்த காதல் நந்தவனத்தைச் சாம்பலாக்கி விடும் என்று கொஞ்சம் கூட நான் நினைத்துப் பார்க்கவில்லை. இந்த மண்ணுலகில் நம் காதல் தீய்ந்து போனாலும் விண்ணுலகில் அதைத் துளிர்க்க வைப்போம்.*

*உன் வருகைக்காக காத்திருக்கும் உன் லீல்.*

யமுனாவின் மனத்தில் இருந்த பயம் இப்போது அழுகையாய் மாறி அவளுடைய பெரிய விழிகளில் நீராய்ப் பளபளத்தது.

"ஸார்.... இதெலலாம் பொய்... எனக்கு வேண்டாதவங்க யாரோ... என்னோட சந்தோஷமான வாழ்க்கையில் குழப்பத்தை ஏற்படுத்தறதுக்காக..."

"இப்படியெல்லாம் பண்ணியிருக்காங்கன்னு சொல்ல வர்றீங்க இல்லையா...?"

"ஆமா... ஸார்..."

"அந்தக் கோணத்திலேயும் கேஸை நகர்த்திப் பார்த்தேன். பட் அதுல உண்மை இருக்கிற மாதிரி தெரியலை. நீங்களும் லீலாகிருஷ்ணனும் காதலர்களாயிருந்திருக்கீங்கங்கிறதுக்கு வலுவான வேற ஒரு ஆதாரமும் கிடைச்சிருக்கு..."

"எ... என்ன ஆதாரம்...?"

கலவரம் அகலாத கண்களோடு கேட்டாள் யமுனா.

பால்பாண்டியன் பேண்ட் பாக்கெட்டுக்குள் கையை நுழைத்து அந்த வாழ்த்து அட்டையை எடுத்தார்.

"இந்த வாழ்த்து அட்டை உங்களுக்கு ஞாபகம் இருக்கா...?"

யமுனா வாங்கிப் பார்த்தாள். அது ஒரு புத்தாண்டு வாழ்த்து அட்டை.

ஒரு மஞ்சள் ரோஜாவிலிருந்து இதழ்கள் உதிர்ந்து கொண்டிருக்க கீழே சிவப்பு ஸ்கெட்ச் பேனாவால் எழுதப்பட்ட

**ராஜேஷ்குமார்**

இரண்டு வரிகள்.

70% பழைய நினைவுகளோடும்
30% புதிய நினைவுகளோடும்
புத்தாண்டை வரவேற்போம்!
இப்படிக்கு கடந்த வருடத்தின்
31,5,3,36000 விநாடிகளும் உங்கள்
நினைவாகவே இருந்த உங்கள் யமுனா.

யமுனாவின் கையிலிருந்த வாழ்த்து அட்டை நடுங்கியது. ஸ்கெட்ச் பேனாவால் எழுதப்பட்ட அந்தக் கையெழுத்தை உற்றுப் பார்த்தாள்.

அது அவளுடைய கையெழுத்துதான்.

பால்பாண்டியன் கேட்டார்.

"இது உங்க கையெழுத்துதானே...?"

"பார்க்கிறதுக்கு அப்படித்தான் இருக்கு..."

"நீங்க சொல்றதுக்கு என்ன அர்த்தம்...?"

"என் கையெழுத்து மாதிரியே யாரோ எழுதியிருக்காங்க."

"உங்களுக்கு ஏதாவது வித்தியாசம் தெரியுதா?"

"இல்ல..."

"பின்னே எப்படி வேற யாரோ எழுதியிருக்காங்கன்னு சொல்றீங்க...?"

"இப்படி ஒரு புத்தாண்டு வாழ்த்து அட்டையை நான் யாருக்கும் அனுப்பவே யில்லை ஸார்..."

"சரி உங்க கையெழுத்து 'மாதிரி' ஒண்ணைக் கொடுங்க."

"எதுக்கு...?"

"ஃபாரன்ஸிக்கில் இருக்கிற க்ராஃபாலஜிஸ்ட்கிட்டே உங்க கையெழுத்து மாதிரியையும் இந்த வாழ்த்து அட்டையையும் கொடுத்தா ரெண்டு கையெழுத்தும் ஒரே நபரோடதுதானா இல்லை வெவ்வேறு நபர்களோடதான்னு கண்டுபிடிச்சு சொல்லிடுவாங்க..."

"ஸ... ஸார்..."

"என்ன...?"

"இப்ப வீட்ல ஒரு கல்யாணக் காரியம் நடக்கப் போகுது. இந்த நேரத்துல இந்தப் பிரச்னை வேண்டாமே! என்னோட கையெழுத்து 'மாதிரி'யைக் கல்யாணமெல்லாம் முடிஞ்ச பின்னாடி தர்றேனே...!"

"ஸாரி மிஸஸ் யமுனா... இந்த லீலா கிருஷ்ணனோட கேஸை உடனடியாக இன்வெஸ்டிகேட் பண்ணி ரிப்போர்ட்டை மேல் அதிகாரிக்கு சப்மிட் பண்ண வேண்டிய கட்டாயத்தில் இருக்கேன். நீங்க உங்க கையெழுத்து 'மாதிரி'யைக் கொடுத்தால்தான் உண்மையைக் கண்டுபிடிக்க முடியும்..."

"நான் சொன்னதுல உங்களுக்கு நம்பிக்கையில்லையா ஸார்...!"

பால்பாண்டியன் புன்னகை செய்தார். "ஒருத்தர் சொன்னதை மட்டுமே வெச்சுக்கிட்டு கேஸை ஒரு முடிவுக்குக் கொண்டு வர்றதுக்கு இது ஆலமரத்தடி பஞ்சாயத்து கிடையாது. எந்த ஒரு உண்மைக்கும் சாட்சியம் வேணும். ஃபாரன்ஸிக் ரிப்போர்ட் வேணும். இந்த வாழ்த்து அட்டையில இருக்கிற கையெழுத்து உங்களோடது இல்லைன்னு ஃபாரன்ஸிக் க்ராஃபாலஜிஸ்ட் சொல்லிட்டார்ன்னா நாங்க கேஸை வேற கோணத்திலிருந்து பார்க்க ஆரம்பிச்சுடுவோம்..."

யமுனா மறுபடியும் ஒரு தடவை வீட்டுக்குள் பார்வையைச் செலுத்திவிட்டு, பால்பாண்டியனிடம் திரும்பினாள்.

"ஸார்...! வீட்ல இப்போ என்னோட கணவரும் அவரோட சிஸ்டர்ஸும் இருக்காங்க. அவங்களுக்கு இந்த விஷயம் தெரியக் கூடாது ஸார்..."

"நீங்க இப்படி பயப்படறது எனக்கு ஆச்சர்யமா இருக்கு... இந்த விவகாரத்தில் என்னோட அட்வைஸை உங்களுக்கு சொல்லட்டுமா மிஸஸ் யமுனா...?"

"சொல்லுங்க ஸார்."

"உங்களுக்கும் லீலா கிருஷ்ணனுக்கும் உண்மையில் எந்தத் தொடர்பும் இல்லைதானே...?"

"இல்லை..."

"அப்புறம் உங்க ஃபேமிலி மெம்பர்ஸுக்கு ஏன் பயப்படணும்... அவங்களையும் வெச்சுகிட்டே இந்தப் பிரச்னையைப் பத்திப் பேசுவோம்..."

"வே... வேண்டாம்






"கடவுள் நம்பிக்கையே போயிடுச்சு எனக்கு!"

"ஏண்டா?"

"பூஜையறையில் மூணு மணி நேரம் வச்சு பூஜை செய்தபின்தான் பிராக்ரஸ் ரிப்போர்ட்டை அப்பாவிடம் காட்டினேன்... அப்படியும் அடி பின்னிட்டாரு!"

— உ. ராஜாஜி

ஸார்...'' யமுனா கையெடுத்துக் கும்பிட்டாள். "என்னோட மாமனார்க்கும் மாமியார்க்கும் போலீஸ்ன்னாலே அலர்ஜி. அவர் ஹார்ட் பேஷண்ட் வேற...''

''சரி! அப்ப என்ன பண்ணலாம் சொல்லுங்க...''

"உங்களுக்கு என்னோட கையெழுத்து 'மாதிரி' வேணும் இல்லையா...?''

"ஆமா....''





"திருடனைத் துரத்திட்டு ஓடிப் போய்ப் பாதி வழியிலேயே உட்கார்ந்துட்டீங்களாமே!''

"ஓட முடியலைன்னு மூச்சு வாங்கிட்டுத் திருடனே உட்கார்ந்துட்ட பிறகு, நான் மட்டும் தனியா ஓட, பைத்தியமா பிடிச்சிருக்கு?''

— பர்வதவர்த்தினி

"பக்கத்துத் தெருவில் பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில் ஒண்ணு இருக்கு. வழியில் வர்றப்ப பார்த்து இருக்கலாம்.''

"ஆமா பார்த்தேன்... சொல்லுங்க...''

"சரியா பத்து மணிக்கு என் கையெழுத்து 'மாதிரி'யோடு அந்தக் கோயிலுக்கு வர்றேன்...''

பால்பாண்டியன் தாடையை வழுவிக் கொண்டார். "வர்றேன்னு சொல்லிட்டு வராமே இருந்துட்டா நான் மறுபடியும் வீட்டுக்கு வர வேண்டியிருக்கும். அதாவது வீட்டுக்குள்ளேயே வர வேண்டியிருக்கும்...''

"ஸ... ஸார்...! அப்படியெல்லாம் வந்துடாதீங்க ஸார்... நான் கண்டிப்பா பத்து மணிக்கெல்லாம் கோயில்ல இருப்பேன்...''

"உங்க பேச்சை நம்பி இப்போ போறேன். நீங்க என்னை ஏமாத்த நினைச்சா அதுக்கப்புறம் நான் என் போலீஸ் குணத்தைக் காட்ட வேண்டியிருக்கும்...''

பால் பாண்டியன் தன் இடது கை ஆட்காட்டி விரலைக் காட்டி எச்சரித்து விட்டு மெல்ல நகர்ந்தார்.

யமுனா பரபரவென்று உள்ளே வந்தாள்.

ஹாலில் யாரும் இல்லை.

ஹரிதாவும் சௌம்யாவும் சமையலறையில் ஏதோ சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். கணவனைப் பார்ப்பதற்காக மாடிப்படியை அணுகியபோது அகிலே எதிர்ப்பட்டான்.

"என்ன யமுனா...! வாசல்ல நின்னுக்கிட்டு யார் கூட அப்படி அரட்டை... தெரிஞ்சவரா...?''

யமுனா பதற்றத்தையெல்லாம் மனத்தின் ஒரு மூலைக்குக் கொண்டு போய் உட்கார்த்தி வைத்துவிட்டு இயல்பாய்ப் புன்னகைத்தாள்.

"இல்லீங்க... அஞ்சு வருஷத்துக்கு முந்தி இந்த ஏரியாவில் குடியிருந்த ஒருத்தரைப் பத்தி அந்த ஆள் விசாரிச்சார். எனக்குத் தெரியாதுன்னு சொல்லியும் மனுஷன் விடலை. லொடலொடன்னு ஏதோ பேசிக்கிட்டிருந்தார்.''

''சரி... நான் குளிக்கப் போறேன். குளிச்சிட்டு வர்றதுக்குள்ளே ஒரு பேண்ட் ஷர்ட்டை அயர்ன் பண்ணி வை...! இன்னிக்கு என்ன டிபன்...?''

"மிளகு பொங்கல், அடை.''

"அதுவும் தயாராயிருக்கட்டும். ஒரே பசி...'' அகில் பேசிக் கொண்டே படியிறங்கிப் போனான்.

யமுனா மேலே வந்தாள். பயம் இப்போது கடினமாய் அவள் இதயத்தை அடைத்துக் கொண்டது. படுக்கையறைக்குள் நுழைந்தவள் கட்டிலின் மேல் கிடந்த கார்ட்லெஸ் டெலிபோனை எடுத்துக் கொண்டு பக்கத்து டாய்லட்டுக்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டாள். ஃபோனை உயிர்ப்பித்து டயலில் எண்களை ஒற்றியெடுத்தாள்.

மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது. பெண் குரல் கேட்டது. "ஹலோ.''

யமுனா கேட்டாள்.

"யார் சரனாவா...?''

"ம்...''

"நான் யமுனா...''

"என்னடி! குரல்ல இவ்வளவு டென்ஷன்?''

"டென்ஷனா! இருதயம் ஏன் வெடிக்கலைன்னு கேளு...?''

"என்ன விஷயம் சொல்லு...''

"லீலா கிருஷ்ணன் தற்கொலை பண்ணிக்கிட்ட விஷயம் உனக்குத் தெரியுமா...?''

**வ**ருணின் நுரையீரல்கள் காற்றுக்காக திணறி மீண்டும் சகஜ நிலைக்குத்

திரும்ப அரை நிமிஷ நேரம் பிடித்தது. 'யார் இவள்?'

டெலிபோனின் மறுமுனையில் குரல் சிரித்தது.

"என்ன வருண்... உன்னோட ஃப்ளாஷ் பேக்கை ஒரே ஒரு வரியில்தான் சொன்னேன். பேச்சையே காணோமே."

வருண் சுற்றும் முற்றும் பார்த்து ஃபோனின் மவுத்பீஸை பாதுகாப்பாய்ப் பொத்திக்கொண்டு ஹஸ்கி வாய்ஸில் கேட்டான்.

"நான் பம்பாய் ஜெயில்ல இருந்தது உனக்கு எப்படித் தெரியும்...?"

"பாம்பின் கால் பாம்பறியும்."

"அப்படீன்னா... நீயும்...?"

"அதே ஜெயில்..! அதே ரெண்டு வருஷம்! நான் லேடீஸ் செல்லில் இருந்தது மட்டும் தான் வித்தியாசம்..."

"சரி இப்ப எதுக்காக இந்த போன்?"

"நீயும் நானும் ஒரு பத்து நிமிஷம் தனியா சந்திச்சுப் பேசணும்?"

"என்ன விஷயம்...?"

"இந்தியாவோட பொருளாதாரப் பிரச்னை ரொம்பவும் மோசமாயிருக்கு. அதை மேம்படுத்தறதுக்கு என்ன வழின்னு யோசிக்கத்தான்..."

"இதோ பார்.... இந்தக் கேலி கிண்டல் எல்லாம் என்கிட்ட வேண்டாம்..."

"ஸாரி வருண்...! சும்மா ஒரு ஜோக்குக்காக அப்படிச் சொன்னேன். நேர்ல வா... பேசிக்கலாம்."

"எங்கே வரணும்...?"

"ஹோட்டல் பட்டர்ஃப்ளை - ரூம் நெம்பர் 347."

"டயம்...?"

"இன்னிக்கு என்ன கிழமை...?"

"செவ்வாய்க்கிழமை..."

"ராகு காலம் எத்தனை மணிக்குன்னு தெரியுமா?"

"தெரியாது..."

"மூணு மணியிலிருந்து நாலரை மணி வரைக்கும் ராகு காலம். இந்த ராகு காலத்துக்குள்ளே எப்ப வந்தாலும் சரி. பத்தே நிமிஷம்...! பேசிட்டுப் போயிடலாம்..."

"உன் பேர் என்ன...?"

"பர்வதராஜகுமாரி..."

(தொடரும்)



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.
Website : www-Kumbakonamonline.com/vedapadasala

☎ : (0435)
Off : 425948
Fax : 423777
Patasala : 422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்ககும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 457 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 171 மாணவர்களுக்கு 14 வேத, சாஸ்திர அத்யாபகர்கள், புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். *புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.*

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>திட்ட விபரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை தொகை (One Time) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 5000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs.15,000 |
| பௌர்ணமி ஆயுஷ்ய ஹோமம் | Rs. 1,000 | Rs.10,000 |
| ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakh |

Cross செய்யப்பட்ட D.D.-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

● அவ்வை கே. சஞ்சீவி பாரதி, அவ்வையார்பாளையம்



? இ. காங்கிரஸ், ஆட்சியில் பங்கு கேட்கிறதே?

! இடுக்கண் வருங்கால் நகுக என்பதை இளங்கோவன் சீரியஸாகக் கடைப்பிடிக்கிறார் பாருங்கள். அவர் பதவிக்கே நெருக்கடி இருக்கையில் என்னமாய் ஜோக் அடிக்கிறார்! ஆஹா!

● விஜயலக்ஷ்மி முருகேசன், சென்னை - 74

? (பழைய) நீதிக் கட்சிக்கும், புதிய நீதிக் கட்சிக்கும் என்ன வேறுபாடு?

! முதலாவது ஜாதி அமைப்பை எதிர்க்க வந்தது. இரண்டாவது ஜாதிக்காக வந்திருக்கிறது!

● டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

? வரப்போகும் பட்ஜெட், எதிர்பாராத அளவுக்குக் கசப்பாக இருக்குமாமே?

! கசப்பை விழுங்கவும் இன்னும் உழைக்கவும் நாம் தயார் - நாட்டை முன்னேற்றுவதற்காக. ஆனால் அரசியல்வாதிகளும் ஆளும் வர்க்கமும்கூட அந்த தியாகத்தில் பங்கேற்றாலன்றி நற்பயனுக்குப் பதிலாக மேலும் நசிவே ஏற்படும்.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? அரசுப் பணியில் கணவனும் மனைவியும் வேலை பார்த்தால் வீட்டு வாடகைப் படி வெட்டு என்றும், வேறு பல சலுகைகள் ரத்து என்றும் மஹாராஷ்டிரா அரசு அறிவித்திருக்கிறதே?

! இது அநீதி! பணிக்குச் செல்லும் அனைவருக்கும் ஒரே சட்ட-திட்டங்கள்தான் இருக்க வேண்டும். ஒவ்வொரு ஊழியரும் ஒரு தனி நபர்தானே தவிர உறவு முறை ஆராய்ச்சியில் ஈடுபடுவது தவறு. ஒட்டுமொத்தமாக அனைவருக்கும் அலவன்சுகளைக் குறைக்க அல்லது ரத்து செய்ய முடிவெடுப்பது வேறு விஷயம். ஆனால், அதைச் செய்ய எந்த அரசும் துணியாது.

● டி.எஸ்.இந்திரா, மயிலாடுதுறை



? பாடத்திட்டத்தில் திரைப்படத் துறையையும் சேர்க்க வேண்டும் என்று நடிகர் நாசர் கோரிக்கை வைத்திருப்பது சரியா?

! ஏன் திரைப்படம் மட்டும்? நுண் கலைகள் என்று ஒரு பாடம் சேர்த்து, அதில் நாடகம், திரைப்படம், இசை, நடனம், பாரம்பரிய நவீன கலைகள் என்று அனைத்தையும் அறிமுகப்படுத்தலாம் - படுத்தவேண்டும்!

● நகை ஓி. மகாராசன், கடமலைக் குண்டு





? விடா முயற்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டு விக்கிரமாதித்தனா? கஜினி முகம்மதுவா?

! இருவருமே அல்ல; இளங்கோவனை வெளியேற்ற, வேறுபாடுகளைத் துறந்து, இணைந்து செயல்படும் தங்கபாலுவும் திண்டிவனத்தாரும்தான்.

● ஆர். தங்கராஜ், திருப்பூர்

? இந்தியா என்றாலே பாம்பாட்டிகளும் சாமியார்களும் நிறைந்த ஏழை நாடு என்று அமெரிக்கா நினைத்துள்ளதாமே?

! இரண்டு ரூபாய்கூட பெறுமானமில்லாத சின்ன சிலிகான் 'சிப்'பை டாலர் கொழிக்கும் தங்கச் சுரங்கமாக மாற்றத் தெரிந்து வைத்திருப்பதும் அதே இந்திய மூளைதான் எனவும் அமெரிக்கா கண்டுகொண்டிருக்கிறதே!

● ஜஹ்பர் மதீனா பேகம், விலாத்திகுளம்

? சமீபத்தில் தங்கள் மனத்தைக் கவர்ந்த சம்பவம்?

! சென்னை புக் ஃபேர். வாசிக்கும் ஆர்வம் மக்களிடம் இல்லை என்று யார் சொன்னது?

பட்ஜெட் மிகவும்

❐ ரூ.50 பரிசு பெறுபவர் :
எஸ். முரளி,
44/10ஏ, ரெட்டியார் காலனி,
குறிஞ்சிப்பாடி - 607 302

* ரூ.25 பரிசு பெறுபவர் :
கருப்பம்புலம் சித்திரவேலு,
நெய்விளக்கு - 614 808.

● எஸ். தென்றல் சேகர்,
சேத்துப்பட்டு

? வாழ்க்கை எனும் விருந்தில் காதல் என்பது கூட்டா? பொரியலா? சாம்பாரா? சாப்பாடா?

! கல்கி இளமைச் சிறப்பிதழ் படிக்கவில்லையா...? ஊறுகாய்!

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

? கோவிந்தாச்சார்யா வெளியேற்றப் படவில்லை என்கிறாரே ஜனா கிருஷ்ணமூர்த்தி?

! கட்சியிலிருந்து அதிகாரபூர்வமாக வெளியேற்றப் படாதிருக்கலாம். ஆனால் கட்சிப் பணியாளர்களின் வசிப்பிடத்திலிருந்து தலைவரால் வெளியேற்றப் பட்டுள்ளார். ஜனாஜி யாரைச் சமாதானப்படுத்த சப்பைகட்டு கட்டுகிறாராம்?



● புதுவண்டி ரவீந்திரன்,
கடலூர்

? சமீபத்தில் நீங்கள் ரசித்த அரசியல் வட்டார ஜோக்?

! ரஜினிகாந்த், விஜய்காந்த் சேர்ந்து கட்சி ஆரம்பித்தால் அரசியல் தூய்மை அடையும் என்று ஸ்ரீஜெயேந்திரர் சொல்லியிருப்பது தான்.



● பி. காந்தி,
மதுரை

? தி.க.வீரமணி நடத்திய மதச் சார்பற்ற அணிகளின் கூட்டத்தை அ.தி.மு.க. புறக்கணித்துவிட்டதே?

! தொடரப்போகும் புறக்கணிப்புகளின் ஆரம்பம் என்பது வீரமணிக்குத் தெரிந்தால் சரி!

● ஸ்ரீவித்யா காளிதாஸ்,
சிதம்பரம்

? தமிழக அமைச்சர் நா. கிருட்டிணனிடம் கொடுத்த மனு குப்பைத் தொட்டியில் கிடந்தது பற்றி...?

! மனுவை, கண்டபடி தெருவில் விட்டெறியாமல் நேர்த்தியாகக் குப்பைத் தொட்டியில் போட்ட அலுவலர்களின் பொறுப்புணர்வு மெச்சத்தக்கதே! சிங்காரச் சென்னை கனவு பலிக்க வேண்டாமா...?

● கருப்பம்புலம் சித்திரவேலு,
நெய்விளக்கு *

? சோ சந்தித்த போது மட்டும் தலைவர்களும் சரி, மீடியாவும் சரி தாம்-தூமென்று குதித்தன; ஆனால் இப்போது 'ஜெ'வை விஜயசாந்தி சந்தித்துள்ளார். யாரும் அவ்வளவாகக் கண்டு கொள்ளவில்லையே?



! ரஜினியை சோ சந்தித்த பிறகு தமிழக அரசியலில் என்னவாயிற்று என்று தெரியுமாதலால் ஜெ-சோ சந்திப்புக்கும் முக்கியத்துவம். மற்றப்படி விஜயசாந்தி ஜெவைச் சந்திப்பதாலோ அம்பிகா, ராதா அ.தி.மு.கவில் சேர்வதாலோ என்ன நடந்து விடப் போகிறது!

● க. நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

? சீனத் தலைவர் லீ பெங்கின் இந்தியப் பயணம் இரு நாட்டு உறவு மேம்பட உதவுமா?



! இந்தோ-சீன மோதலுக்குப் பின் முதல் முறையாகக் கட்டுப்பாடு கோடு பகுதியின் வரைபடங்களை இரு நாடுகளும் பரிசீலனைக்காக பரஸ்பரம் மாற்றிக் கொண்டுள்ளன. குறிப்பிடத்தக்க ஆரம்பம்தான். ஆனால் சீனர்கள் பலே பேர்வழிகள். அடிப்படைப் பிரச்னைகளைத் தீர்க்காமலே உறவுகளை வியாபார நோக்கில் வளர்க்க விரும்புவார்கள். இந்திய மார்க்கெட்டில் தங்கள் பங்கைச் சுவீகரித்துக் கொள்ளவே முயற்சி செய்வார்கள்.

# நசப்பாக இருக்குமாமே?





‘‘பேரப்பையா, நம்ம பரம்பரை
வீட்டைப் பாருடா!’’





ஒரு வீடு குடி பெயர்கிறது.

எங்கிருந்து?

கர்னாடகாவின் குல்பர்காவிலிருந்து.

எங்கு?

எழுநூறு கிலோமீட்டர் தள்ளி இருக்கும் சென்னையில் உள்ள தக்ஷின்சித்ராவுக்கு.

இளம் மஞ்சள் நிற லைம்ஸ்டோன்களைச் செதுக்கி கட்டப்பட்ட இரண்டு அடுக்கு வீடு, குட்டி அரண்மனையைப் போல் கம்பீரமாகக் காட்சி அளிக்கிறது. பிஜப்பூரில் தொடங்கி கோல்கொண்டா வரை ஆட்சி செய்த பாமினி அரசர்கள் காலத்து கட்டட அமைப்பு. வளைந்து நெளிந்த ஜன்னல்களிலும் பால்கனிகளிலும் மட்டும் மஹாராஷ்ட்ரா, குஜராத், ராஜஸ்தான் பாணி இஸ்லாமியக் கட்டடக் கலையின் பிரதிபலிப்பு. முத்தாய்ப்பாய் இந்து கலாச்சாரத்திற்கே உரிய முற்றம். முற்றத்தை ஒட்டிய வராண்டாவும் அதில் உள்ள மர வேலைப்பாடுகளும் கரி அடைந்து போயிருந்தாலும் முற்றத்துக்கு அழகு சேர்க்கத் தவறவில்லை.

தக்ஷின்சித்ரா.

கட்டடக் கலையே கான்க்ரீட்மயமாகிக் கொண்டு வர, எஞ்சியிருக்கும் பாரம்பரிய வீடுகளைத் தேடிப் பிடித்து அவற்றின் முகம் மாறாமல் அப்படியே தகர்த்துக்கொண்டு வந்து கலாசார விருந்து படைக்கும் ஒரு காட்சியகம்.

"காற்று, மழை, புயல் என்று எதற்கும் அசைந்து கொடுக்காமல் விரைப்பாக இருநூறு ஆண்டுகளைக் கடந்துவிட்ட இந்த வீட்டைக் குடிபெயர்ப்பது அவ்வளவு சுலபமில்லை!" என்கிறார் தக்ஷின்சித்ராவின் தலைவி டெபோரா தியாகராஜன்.

"பல கட்டடக்கலைகளின் சங்கமம் இந்த வீடு. அதனால், மற்ற வீடுகளைக் குடி பெயர்த்தது போல் இதைச் செய்ய முடியாது. ஒவ்வொரு கல்லாகப் பெயர்த்து அதில் வரிசையாக எண்களைப் பதித்து, பிறகுதான் இங்கு கொண்டு வர வேண்டும். ஆனால் கற்களைப் பெயர்ப்பதற்கு முன்னால் வீட்டின் அமைப்பைப் பற்றி ஒரு விலாவாரியான டாக்குமென்ட்ரி படம் எடுத்து வரைபடத்தையும் தயார் செய்துவிடுவோம். பல கோணங்களிலிருந்து புகைப்படங்களும் எடுப்போம். கற்களை மட்டும் கொண்டு வருவதற்கே அறுபத்தி ஆறு லாரிகள் தேவைப்படும். இதர பொருட்களுக்குப் பதினொரு லாரிகள். வீட்டின் விலை ஆறு லட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய் என்றாலும் அதை தக்ஷின்சித்ராவில் குடி அமர்த்தி முடிக்கும்போது முப்பத்து மூன்று லட்சத்து ஐயாயிரம் ரூபாய் செலவாகியிருக்கும்!" என்கிறார் டெபோரா.

வீட்டின் தற்போதைய சொந்தக்காரர்?

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு இஸ்லாமிய வியாபாரியின் வாரிசு. பெயர் சையத் அன்வர் உல். தற்போது ஹைதராபாத்தில் இருக்கும் இவர் பிறந்து, வளர்ந்து நிக்கா செய்து கொள்ளும்வரை வாழ்ந்தது இந்த வீட்டில்தான். பதினைந்து அறைகள் கொண்ட இந்த மாளிகையை ஏன் விட்டு விட்டு ஹைதராபாத்துக்குப் போனார்?

"விவசாயத்தில் லாபம் இல்லை, வியாபாரம் பண்ண வேண்டிய சூழ்நிலை! குழந்தைகளின் கல்விக்கு நகர வாழ்க்கைதான் பொருந்தும் என்று தோன்றியது. ஹைதராபாத்துக்குக் குடி பெயர்ந்துவிட்டேன். ஆனாலும் வீட்டைப் பூட்டிப் போட கஷ்டமாகத்தான் இருக்கிறது. வாடகைக்கு விடவும் மனசில்லை. அதனால் உறவுக்காரர்களின் பராமரிப்பில் விட்டுவிட்டேன். அவர்கள் முற்றத்தில் ஆடு மாடுகளைக் கட்டி வைத்தாலாவது காத்து- கறுப்பு அண்டாமல் இருக்குமே என்ற நம்பிக்கை. ஆறு மாதங்கள் அல்லது ஒரு வருடத்திற்கு ஒருமுறை வந்து ஏக்கமாய் ஒரு பார்வை பார்த்துவிட்டு வருவதோடு சரி. நகர வாழ்க்கை பிடித்துவிட்டதால், இந்த ஊருக்குத் திரும்பவும் வந்து இந்த வீட்டில் குடியேற வாய்ப்பே இல்லை என்றாலும் உள்ளூர்க்காரர்களிடம் வீட்டை விற்க மனசு வரவில்லை. 'மாடர்ன்' ஆகக் கட்டுகிறேன் என்று இதை நிச்சயம் இடித்து விடுவார்கள் என்ற பயம். இதற்காகவே யாருக்கும் விற்காமல் முப்பது வருடம் காப்பாற்றினேன்.

"சமீபத்தில்தான் சென்னையிலிருந்து அந்த அம்மா வந்தார்கள். 'சஞ்சீவி மலை கணக்காக உங்கள் வீட்டை பெயர்த்துக் கொண்டு போய் சென்னையில் வைக்கிறோம். விற்கச் சம்மதமா?" என்று கேட்டார்கள். என்னால் நம்பவே முடியவில்லை. ரொம்ப சந்தோஷமாகிவிட்டது. 'வயதான காலத்தில் பேரப் பிள்ளைகளை அழைத்துக்கொண்டு போய் 'இதுதான் நம்முடைய பரம்பரை வீடு!' என்று காட்டலாமே என்கிற சந்தோஷம். முழு அக்ரீமன்ட் போட்டுவிட்டேன். ஆனால் போனவர்கள் இன்னும் வரவில்லை. அவர்களுக்காகத்தான் காத்திருக்கிறேன். என் வீட்டைக் காப்பாற்ற நிச்சயம் வருவார்கள்!" என்கிறார் சையத் அன்வர்.

— ஜெ

# இளமைச் சிறப்பிதழில் புத்துணர்ச்சி பொங்கியது!

✉ பிரதமரின் ஹாலிடே ஹோம் ஓர்க் தலையங்கம் படித்தேன். குமரகம் சிந்தனையில் தேசம் ஒன்றுபட்ட சிந்தனையுடன் செயல்பட்டு வலிமையுற்று உயர வேண்டும் என்ற பிரதமரின் எண்ணம் வரவேற்கத்தக்கது. ஆனால் லஞ்சம் – ஊழல் அரசியலில் கிரிமினல்கள் இவற்றைத் தடுத்தாலொழிய சுதந்தரத்துக்கு முந்தையக் காலகட்ட ஒருங்கிணைப்பைக் கொண்டு வர இயலாது.

**சென்னை – 73, கே.வி. ராமன்.**

✉ தி.க.சி. யைப் பற்றி ஆர். நல்லகண்ணு சொன்ன செய்திகள் மனம் நெகிழ வைத்தது.

**திருவையாறு, இரா. நாகராஜன்.**

✉ கல்கி இளமைச் சிறப்பிதழில் குதூகலம், புத்துணர்ச்சி போன்றவை பொங்கி வழிந்தன. போதாதற்கு இரண்டு புத்தகங்கள். இன்றைய இள வட்டங்களின் கதாநாயகன் விஜய்யின் பேட்டி இதழுக்கு மகுடம் போல் அமைந்திருந்தது. எல்லாவற்றையும்விட 'டாப்ஃபேஷன்ஸ்' தலைப்பில் சௌத், நார்த், வெஸ்ட் என இன்றைய ஆடை கலாசாரத்தைப் பெண்களுக்கு நன்கு அடையாளம் காட்டியிருந்ததுதான் சிறப்பு. மிக உபயோகமான விஷயம் இது!

**மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.**

✉ சமத்துவபுர நிலைமைகளை ஆய்வு செய்து ஒரு நடு நிலைமையான செய்தியை வெளியிட்டதற்கு நன்றி!

**இராஜபாளையம், வே. ஈஸ்வரன்.**

✉ "ராஜேஷ்குமாரின் 'மூடுபனி நிலவு' கதைக்கு ஜெ.டிஸ்னியின் வித்தியாசமான ஓவியம் இளைஞர் சிறப்பிதழுக்கு மேலும் மெருகு சேர்த்தது!

**பொன்மலை, ஆர். பிரகாஷ்.**

✉ தங்களது 7.1.2001 இதழில் தி.மு.க.வில் திக்... திக்... என்ற கட்டுரையில் தென் சென்னை பகுதியில் கிட்டுவின் எதேச்சதிகாரம் என்று குறிப்பிட்டுள்ளீர்கள். எங்கள் மாவட்டச் செயலாளர் போல் அனைவரையும் அரவணைத்துக் கட்சியைப் பலபடுத்தும் ஓர் உண்மையான தி.மு.க செயலாளர் யாரும் கிடையாது. ராணுவக் கட்டுப்பாடு போல் தலைமைக்குக் கட்டுபட்ட இயக்கம் தி.மு.க. எங்கள் வெற்றியின் ரகசியமும் அதுவே!

**சைதை, இ. ராம்ஜி.**

✉ இளைஞர்களுக்கு ஸ்ரீ விஜயேந்திரர் சொன்ன வார்த்தைகள் இன்றைய சூழ்நிலையில் ஒட்டுமொத்த இளைஞர்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒன்று. அவர் வார்த்தைகள் யதார்த்தமாக இருந்தன.

**தென்கடப்பந்தாங்கல், டி.எஸ். சேகர்.**

✉ இன்றைய பொழுதில் கம்ப்யூட்டரில் என்ன படிக்கலாம் என்பதைவிட அடிப்படை தகுதிகள்தான் கம்ப்யூட்டரின் அஸ்திவாரம் என்ற ஜெயராம கிருஷ்ணனின் அனுபவங்களும் ஸ்டூடண்ட்ஸ் ஜெராக்ஸ் புகழ் அருணாசலத்தின் பிஸ்னஸ் மேனேஜ்மெண்ட் ரகசியங்களும் மிகுந்த பயன் உள்ளவை! வயதான கல்கியில் அவ்வப்போது இளமைக்குத் தூண்டுகோலாக விஷயங்கள் அமைவது நல்ல புத்துணர்ச்சி!

**பள்ளிபாளையம், ரஞ்சனிப்ரியன்.**

✉ மாணவர் நகலக உரிமையாளரும் நந்தன் இதழாசிரியருமான ஆனாரூனாவின் பேட்டி இளைஞர்களுக்கு டானிக் போன்றதாகும். தரம் நாடுவோர் தவறாமல் நாடுவது என்னும் விளம்பரத்தை உண்மையிலேயே மெய்ப்பித்து காட்டி வரும் அவரின் வெற்றி ரகசியம் புரிந்து கொண்டேன்.

**நெய்விளக்கு, கருப்பம்புலம் சித்திரவேலு.**

✉ சென்னையில் இருந்து புறப்பட்டு நடுங்கும் குளிரில், அவருடன் சேர்ந்து எங்களையும் நடுங்கச் செய்துவிட்டார் சாருகேசி, சென்னை டு சைனா பயணக் கட்டுரை மூலம்!

**சென்னை – 78, சி. பூங்கோதை.**



HOW TO WIN FRIENDS?

- GRANDMA WORM



MYSTERY OF THE

MISSING DIAMOND

- SHORT STORY

A VISIT TO ZOORASIA

- POSTER WITH ARTICLE

IS HEARTBURN RELATED TO THE HEART?

-Hello Doctor!

KID'S MOVIE: ADULTS LOVE IT!

- COVER STORY

FEBRUARY 2001

# GOKULAM

The monthly magazine for children

Rs.6/-

47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097

# வினோத்

**H**appy men have happy friends என்ற வாக்குக்கு உதாரணம் கவாஸ்கர். அது கிரிக்கெட்களமானாலும் சரி, புதிர்க்களமானாலும் சரி, அமர்க்களம் பண்ணுகிறார் ஆசாமி.

'Stumped' என்ற க்விஸ் நிகழ்ச்சியை ஸ்டார் ப்ளஸ்ஸில் பார்த்தால் இது தெரியும். க்விஸ்மாஸ்டர் ஹர்ஷாபோக்லே. கவாஸ்கரும் வி.வி.லக்ஷ்மணும் ஸித்துவும் ஓர் அணி; வெங்கட் ராகவனும் ஸ்ரீநாத்தும் மணிந்தர் சிங்கும் எதிர் அணி.

கவாஸ்கரைப் பற்றிய ஒரு தகவலைக் கூறி, அது சரியா தவறா என்று வெங்கட்டிடம் கேட்டார் ஹர்ஷா. கவாஸ்கரின் முகத்திலிருந்து சரியான பதிலை ஊகித்துவிடலாமென்று நினைத்து அவரைப் பார்த்தார் வெங்கட். உடனே கவாஸ்கர் தவறு என்று சொல்வதுபோல் தலையை இடது வலமாகப் பலமாய் ஆட்டி, பிறகு சரி என்று சொல்வது போல மேலும் கீழுமாக ஆட்டி அதைத் தொடர்ந்து பூஜ்யம் போடுகிற மாதிரி வட்டமாக ஆட்டி –

வெங்கட் பாவம், தடுமாறிப் போனார். கவாஸ்கருக்கோ ஒரே குஷி. படா comical scene.

**ரி**ங் மாஸ்டர் சாட்டையை எடுத்துச் சொடுக்கியதும் சிங்கம் நடுங்குகிறதே, ஏன்? அவரிடம் அதற்குப் பயமா? அல்ல என்றார் இறையன்பு. விலங்கானாலும் மனிதரானாலும் ஒவ்வொருவருக்கும் ஒரு எல்லை இருக்கிறது; அந்த எல்லைக்குள் நுழையாமல் தள்ளி இருப்பதுதான் ரிங் மாஸ்டரின் சாமர்த்தியம் என்றார் இந்த ஐ.ஏ.எஸ் அதிகாரி. அந்த எல்லைக்குள் காலடி வைக்கும்போது சிங்கம் சீறுகிறது, ரிங் மாஸ்டர் பின் வாங்கி விடுகிறார் என்றார்.

இதேபோல, கணவன், மனைவி, நண்பர்கள், தாய் தந்தை முதலிய எல்லாருக்கும் ஓரோர் இடைவெளி இருக்கிறது. இருக்க வேண்டியது அவசியம் என்று இறையன்பு விளக்கியபோது, கேட்பதற்குச் சுவாரஸ்யமாக இருந்தது. (ஸன் – 'தெரிந்ததும் தெரியாததும்') When I look at a complicated problem in the right angle, it becomes still more complicated என்று புலம்பினார் ஒரு பேராசிரியர். இவர் அப்படியில்லை. இரும்புக்குண்டான விஷயத்தையும் இலவம் பஞ்சுத் துண்டாக விளங்க வைக்கிறார். Proxemics எனப்படும் இடைவெளியியல் பற்றி, பேசுகிறவருக்கும் கேட்கிறவருக்கும் இடைவெளி ஏற்படாத வகையில் எடுத்துச் சொன்னார். பெரிய அலுவலகங்களின் பெரிய அதிகாரிகள் பெரிய சைஸ் மேஜை போட்டுக் கொள்வது, யாரும் தன்னை ரொம்பவும் நெருங்கி விடக் கூடாது என்பதற்காகத்தான், என்ற ரகசியத்தையும் போட்டு உடைத்தார். (இந்த ஐ.ஏ.எஸ்காரரின் மேஜை எப்படியோ?)

**பா**ட்டிலே வந்த பாரதி நம்மைச் சிந்திக்க வைத்ததுண்டு. சிரிக்கச் செய்ததுண்டு. சினம் கொள்ளும்படி சீண்டியதுண்டு. ஆனால் அழ வைத்தது கிடையாது. அந்தக் காரியத்தைத் திரைப்பட 'பாரதி' செய்துவிட்டார். முழுப் படத்தையும் சின்னத்திரையில் கொண்டு வந்த விஜய்க்காரர்கள் வாழ்க.

காய்ச்சலில் படுத்திருக்கும் மகளின் நெற்றியைத் தொட்டுப் பார்த்து, ஜுரம் இறங்காததை அறிந்து கண் கலங்கிப் பராசக்தியிடம் வேண்டுவதையும், 'காலா! என்னருகில் வாடா! உன்னைக் காலால் மிதிக்கிறேன்!' என்று முழங்க முடியாமல் முழங்கிவிட்டு உயர்கிற கால் தொப்பென்று சரிய உயிர் பிரியும் கட்டத்தையும் காண்கையில் நம்மையுமறியாமல் கரகரவென்று கண்ணீர் வழிகிறது. தேவானியோ பார்வையாலேயே கவிதைகளைக்



• இறையன்பு



• 'சீனு' - கார்

ரிமோட்

கொட்டுகிறார். The pain of the mind is worse than the pain of the body என்பது எவ்வளவு உண்மை!

எனினும், ஊரெல்லாம் சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்த பொங்கல் திருநாளன்று நம்மை வருத்தப்பட வைத்த விஜய் டீவியைச் தூற்றுவதா, போற்றுவதா என்று தெரியவில்லை.

ஒரு பக்கம் கடல் அலைகள் இசைக்கு ஏற்ப ஏறி இறங்க, இன்னொரு பக்கம் முழங்கால் உயரத்துக்கு வளர்ந்த நெற்கதிர்



# காமெடிக்கு ஒரு கவாஸ்கர்!

கள் பச்சைப் பசேலென்று ஒயிலாட்டம் ஆட, அவற்றின் நடுவே யிருந்து குபீரென வெள்ளையுடைக் குமரிகள் குதித்துக் கிளம்பும் காட்சி வெகு நேரத்துக்கு மனதில் நிற்பதாக இருந்தது. (ராஜு)

படம்: 'சீனு' பாட்டு: 'வணக்கம், வணக்கம், வணக்கம்.' குரூப் டான்ஸ்: மாளவிகாவும் மற்றவர்களும்.

Work well done is art.

புதுமை செய்கிறேன் பார் என்று சொல்லிக் கொண்டு, தானும் சிரமப்பட்டு மற்றவர்களையும் சிரமப்படுத்துகிறவர்கள் பலர் உண்டு. 'பொதிகை'யில் விசித்திர வீணை இசைத்த விஜய் வெங்கடேஷ்வர் அப்படி இருக்கவில்லை. விசித்திர வீணை, புல்லாங்குழல், வயலின் மூன்றிலும் தேர்ச்சி பெற்று இனிமையாக அரை மணி நிகழ்ச்சி நடத்தினார்.

முதலில் சரஸ்வதி ராகத்தை விசித்திர வீணையில் ஆலாபனை செய்து, அனுராக மூலே கீர்த்தனையைப் புல்லாங்குழலில் வாசித்து, கல்பனா ஸ்வரங்களை வயலினில் காட்டினார். அந்தக் கடைசி சமாசாரத்தில் மட்டும் குன்னக்குடியின் வித்தைகளைக் கொண்டு' வர முயன்றதால் சற்று இனிமை குறைந்தது.

அதனாலென்ன? When something clicks, it clicks.



விகா



# திருவள்ளுவர் தினம்!

## மாட்டுப் பொங்கல்

**நா**ன் ஜனவரி 15 - மாட்டுப் பொங்கலன்று பிறந்ததாலோ என்னவோ எனக்குச் சிறு வயது முதலே மாடுகள் மீது மட்டற்ற பாசம். என் வயசுப் பையன்களெல்லாம் ஜீப், பஸ் வைத்து விளையாடும்போது நான் மட்டும் எதிர்வீட்டு முருகேச மாமா மாட்டுத் தொழுவத்தில் இருக்கும் பசுவோடு விளையாடிக் கொண்டிருப்பேன்.

ஒரு பொங்கலன்று எங்கள் தெரு பையன்களின் பொதுக்குழு, செயற்குழுவையெல்லாம் கூட்டி முருகேச மாமாவின் மாட்டை நாயகனாக வைத்து மாட்டுப் பொங்கலைச் சிறப்பாகக் கொண்டாட முடிவெடுத்தோம். செலவுக்காக ஆளுக்கு இரண்டு ரூபாய் வீதம் பங்களிப்பதாக முடிவெடுத்தோம். விஷயத்தை முருகேச மாமாவிடம் சொன்னபோது 'கரும்பு தின்னக் கூலியா?' என்று நினைத்து பூம் பூம் மாட்டை விட வேகமாகத் தலையசைத்துச் சம்மதித்தார்.

எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சைக்குக் கூட விடியலில் எழாத நான், காளையை குளிப்பாட்டுவதற்காக 6 மணிக்கு அலாரம் வைத்து 5 மணிக்கே முழித்தேன். மற்றவர்களையும் திரட்டிக் கொண்டு மாமா வீட்டுத் தொழுவத்துக்குப் போய் மாட்டை அவிழ்த்து விட்டோம். புதுப் பெண், மாமியார் நாத்தனார்களைக் கண்டு மிரள்வது மாதிரி ரோட்டில் வரும் ஆட்டோ, ஸ்கூட்டர்களைக் கண்டு மிரண்டது மாடு. தேரை இழுப்பது போல இழுத்துப் போய் இதயம் நல்லெண்ணெய், புலி மார்க் சீயக்காய்த் தூள் சகிதம் செம்மாங்குளத்தில் மாட்டைக் குளிப்பாட்டினோம்.

ரோட்டில் நேராக ஒரு கோடு கூட வரையத் தெரியாத என் ஜூனியர் நண்பன் அப்பு ஆபத்துக்கு அடையாளமான சிவப்பு பெயிண்டால் கொம்புக்கு வர்ணம் பூசி நெற்றியில் திலகமெல்லாம் வைத்தான்.

இது நாள் வரை கழுவு நீரும், ரேஷன் அளவு பருத்திக் கொட்டையும் தின்று வந்த மாட்டுக்குக் கரும்பு, பழம், புண்ணாக்கு, புல் என்று செமை விருந்து படைத்தோம். இதையெல்லாம் பார்த்த முருகேச மாமாவின் முகத்தில் மகிழ்ச்சி ததும்பியது.

மாட்டின் கயிற்றைப் பிடித்தபடி தானும், நண்பர்களும் தெருவலம் வந்தோம். பூவுக்குள் இப்படியொரு பூகம்பமா என எண்ணும்படி மாடு திடீரென தறிகெட்டு, டெண்டுல்கர் விளாசும் பந்து விரைவதுபோல எங்களையெல்லாம் மீறி தெருவிலிருந்து ரோட்டில் ஓட ஆரம்பித்துவிட்டது. மாமா முகம் நொடிப் பொழுதில் இருண்டுவிட்டது. டிராபிக் சிக்னல்களுக்கே அல்வா கொடுக்கும் ஆட்டோக்கள் கூட மாட்டின் ருத்ர தாண்டவம் கண்டு ஸ்தம்பித்து நின்று விட்டன. மொத்தத்தில் முதல்வன் படப் பாணியில் எங்கள் ஏரியா டிராபிக் ஜாம் ஆகிவிட்டது.

நல்ல வேளையாக ரோட்டில் வந்த கிராமத்துவாசி ஒருவர் மாட்டுக்கார வேலனாக மாறி மாட்டை நெருங்கி 'ஆவ்! ஆவ்!' என மாட்டுப் பாஷையில் பேசியதும் மாடு, பாகிஸ்தான் சர்வாதிகாரி முஷரப் போல போர் நிறுத்தத்துக்கு ஒப்புக் கொண்டது. அப்பாடா, என மாட்டை முருகேச மாமாவிடம் ஒப்படைத்தபின் தான் மனசு அமைதியானது.

அன்றிலிருந்து மாடு, மாட்டுப் பொங்கல் என்றாலே அலர்ஜி. மாட்டுப் பொங்கலை இப்போது திருவள்ளுவர் தினம் என்றுதான் அழைக்கிறோம்!

- முஹமது ஹுமாயூன்



கல்யாணமான கடந்த ஒரு வருட காலத்தில், ஒரு முழுப் பகல் ஒரு முழு இரவு தன் காதல் மனைவி காயத்ரியைப் பிரிந்து இருந்திருக்கிறான் சம்பத் என்றால் இதுதான் முதல் முறை.

வீட்டை நெருங்க நெருங்க அவனுக்குள் மனசு கிடந்து 'பக்பக்'கென்று அடித்துக் கொண்டது. காயத்ரி அப்படியொன்றும் முரட்டுப் பிடிவாதம் பிடிக்கிற டைப் அல்ல. சொல்கிற விதத்தில் எடுத்துச் சொன்னால் புரிந்துகொண்டு சமாதானமாகிவிடுவாள். அதற்கான முன்னேற்பாடுகளுடன் வந்திருந்தான். வீட்டின் முன்னே பைக்கை நிறுத்தினான்.

வாசலில் கண்ணீரும் கம்பலையுமாய்க் காத்திருந்த காயத்ரி, பாய்ந்து வந்து அவன் மார் சட்டையைப் பற்றி லேசாக உலுக்கி, "என்னங்க நீங்க, இப்படிப் பண்ணிட்டீங்க? ராத்திரியெல்லாம் தூக்கமே இல்லை. வாசலுக்கும் உள்ளுக்குமா எத்தனை வாட்டி அலைஞ்சிருப்பேன் தெரியுமா?" என்று பேசிக் கொண்டிருக்கும்போதே பொல பொலவென்று கண்ணீர் உதிர்ந்தது.

"சரி சரி உள்ள வா" அவன் உள்ளுக்கு வந்ததும் கதவு சாத்திக் குழந்தையை அள்ளிக் கொள்வது போல் அள்ளியெடுத்துக்கொண்டு





வந்து சோபாவில் கிடத்தினான். "இத பார் காயத்ரி, இன்கம்டாக்ஸ் கணக்கு முடிக்க நேற்றுதான் கடைசி நாள் என்று எம்டியே கூப்பிட்டு உட்கார வச்சிட்டார். எந் நேரமானாலும் முடிச்சிட்டுத்தான் வெளியே போறதுன்னு கூடவே உட்கார்ந்

# வேஷங்கள்

திருக்கார். இந்த நிலையிலே - நீயே சொல்லு. நான் அவரை மீறி வந்துட முடியுமா?"

இதைக் கேட்டதும் காயத்ரி மனசு கொஞ்சம் இளகிற்று. "சரி சரி வெந்நீர் விளாவி வச்சிருக்கேன். சீக்கிரம் போய்க் குளிச்சிட்டு வாங்க. அதுக்குள்ள நான் தோசை வார்த்து, உங்களுக்குப் பிடிச்ச சட்னி பண்ணி வைக்கிறேன்."

"அதுக்கு முன்னால நான் உனக்கு ஒரு மாயம் கொண்டு வந்திருக்கேனே!" சம்பத் ஒரு குழந்தைக் குதூகலத்தோடு கையோடு கொண்டு வந்திருந்த கிட் பாகின் ஜிப்பை விலக்கினான். "பார்த்தியா, வாசனை ஆளைத் தூக்குது. சொல்லிட்டே இருப்பியே, எங்க கேன்டீன் அவல் பொங்கல் பத்தி, கார்த்தால வெளிய வரப்ப... அப்பத்தான் கிளறி இறக்கி வச்சான். அவசர அவசரமா பல் துலக்கி, நானும் சாப்பிட்டு, உனக்கும் வாங்கி வந்தேன்... ஸோ, உன் டிபன் கடை வேலையும் மிச்சம் பண்ணியாச்சு."

குறுகுறுவென்று அவனை ஏறிட்டவள், "லஞ்சமா?" என்றாள்.

"அந்த லஞ்சத்தை நீ தொடாதே. நானே வந்து ஊட்டி விடறேன்," என்று பொங்கல் வைத்த காகிதப் பையை டின்னர்டேபிள் மேல் அவன் வைக்க, அதற்குப் பொன்னாடை போர்த்துவதுபோல் தேங்காய்ப் பூத் துவலையை அவனது வெற்றுடல் மறைய வேய்ந்தான்.

பத்தே நிமிடத்துக்குள் குளித்து முடித்து, தலை துவட்டியவாறு பாத்ரூமிலிருந்து வெளி வந்தான் சம்பத்.

காயத்ரியின் முகத்திலிருந்த வெறுப்புக் கலந்த சிடுசிடுப்பைக் கண்டு சற்று அதிர்ச்சி வாங்கினான். சோபாவின் பக்கவாட்டில் அவன் வைத்த அவல் பொங்கல் பார்சலும் கொஞ்சம் போல் கலைந்து எடுபடாமல்

புனிதன்

இருந்தது.

"காயத்ரி..." குழப்பமாய் அழைத்தான்.

சற்று ரௌத்ரம் கூட்டி எழுந்திருந்தவளின் காலிடற தடுமாறினாள்.

"காயத்ரி!" அவளைப் பற்றிக்கொண்டு, "என்ன ஆச்சும்மா? ஏன்... ஏன் இப்படித் தடுமார்றே?" என்றான் கரிசனத்தோடு.

"நான் பரவால்லிங்க. நிதானத்துல தடுமார்றேன்..." விரக்தியாய்ச் சிரித்தாள் அவள். "ராத்திரியெல்லாம் நீங்க நிதானமில்லாமல் தடுமாறிட்டிருந்திருப்பீங்களே, அப்ப உங்களை யார் தாங்கிப் பிடிச்சாங்க?"

சம்பத்துக்குக் கோபம் உச்சி மண்டைக்கு ஏறிற்று. "காயத்ரி, என்னத்தை வச்சு நீ இப்படிக் கண்டபடியெல்லாம் உளறிட்டிருக்கே?"

"இதோ, இதை வச்சித்தாங்க..." அவன் எடுத்து வந்த பொங்கல் பார்சல் கவரை அவன் முகத்துக்கு நேரே நீட்டினாள் அவள்.

ஒரு மேல்நாட்டு விஸ்கியின் உறை அது! பளபளவென்று வெகு நேர்த்தியாக அச்சாகியிருந்தது. அதை ஒருமுறை புரட்டிப் பார்த்துப் பேசினான் அவன் இளக்காரத்துடன். "ஸோ... எனக்குக் குடிக்கிற பழக்கம் இருக்கு. அதை இந்த ஒரு வருஷமா தாலி கட்டின பொண்டாட்டிக்குக்கூடத் தெரியாம மறைச்சு வச்சிருக்கேன். என் சாமர்த்தியமெல்லாம் இந்த ஒருநாள் வெளித் தங்கினபோது தன்னால பணால் ஆகி, உனக்கு உண்மை அம்பலமாயிடுச்சு. அப்படித்தானே?"

"அந்த அதட்டலில் காயத்ரிக்கு இலேசான நடுக்கம் கண்டது. "நீங்க பெரிய பாங்கர் பரமேஸ்வரனோட மருமகன். அவர் எப்படிப் பட்டவர்னு இந்த ஊருக்கே தெரியும். அப்படிப்பட்ட ஒழுக்கசீலரோட மருமகன் தண்ணி போடறார்னு வெளியே தெரிஞ்சா அவருக்குப் பெரிய மானக்கேடு இல்லையா? அதுவுமில்லாம..."

"ஷட்டப்! சம்பத் வெடித்தான்."அப்ப நீ என்னைக் குடிகாரன்னே தீர்மானம் பண்ணிட்ட... இதே போலப் பேசிட்டுப் போனே... உன்னை..."

"அடியுங்க. கொல்லுங்க. இப்பதானே கொஞ்சம் கொஞ்சமா உங்க சொரூபம் தெரிய ஆரம்பிச்சிருக்கு?" காயத்ரி மூக்கை உறிஞ்சினாள்.

அவன் தன் தோல்வியை மறைக்க, ஹாலின் பக்கவாட்டிலிருந்த சின்ன புத்தக அலமாரியின் மேல் நோட்டம் விட்டான். திடுதிப்பென்று ஒரு புத்தகத்தை உருவிப் பிரித்து அவள் கண்முன் நீட்டி, "இது என்ன புத்தகம்?" என்றான்.

"திருக்குறள். இந்தக் குறள் புஸ்தகத்து அட்டையைப் பார்த்தியா? ஏதோ ஒரு சினிமா காலண்டர் பளபளன்னு இருக்கேன்னு எடுத்துப்போட்டேன். அதனால வள்ளுவரை சினிமாக்காரங்க கோஷ்டியிலே சேர்த்துடுவியா? உறைக்குள்ள இருக்கிறதுதான் உனக்குத் தேவை; உறை எதுவா இருந்தா என்ன? தேவையில்லாம மனசைப் போட்டுக் குழப்பிக்காதே. உன் குழப்பத்துல அடிபட்டு நானும் காயப்பட வேணாம்" அவன் அந்த ஒயின் கவர் உறையை முடிந்தவரை துண்டு துண்டாய்க் கிழித்துப் போட்டான்.

"என்னை மன்னிச்சிடுங்க..." அவள் கேட்டது ஆத்மார்த்தம்.

அவளைத் தன் பரந்த மார்பில் சாய்த்துக்கொண்டு அவள் பொங்கலைக் கொஞ்சம் கொஞ்சமாய் ஊட்டினான். அது அவள் மனசு போல் ஆறியிருந்தது.

**வா**ஷ்பேசினில் கை கழுவிக்கொண்டு வந்தவன், கடிகாரத்தைப் பார்த்ததும் நினைத்துக்கொண்டவனாய், "காயத்ரி, இன்னிக்கு டிநகர்ல உன் ஃப்ரண்ட் கல்யாணம் - முகூர்த்தம் நைன் டு டென் தர்ட்டின்னு முந்தாநாள் கூட... தூக்கத்துல பினாத்திட்டு இருந்தியே, மறந்துட்டியா?" என்றான்.

**"தலைவர் பலே பேர்வழி!"**
**"என்ன விஷயம்?"**
**"வீட்டு வாசல்ல கூட்டணி ஹவுஸ்புல்னு போர்டு மாட்டிட்டாரு!"**
**— அம்பை தேவா**

பச்சை மிளகாயை கடித்துவிட்ட மாதிரி, "ஸ்...ஸ்..." என்று உறிஞ்சிக்கொண்டாள். "அந்த மட்டுக்கும் தேவலை. அன்னிக்கே கிஃப்ட் பெட்டி தயார் பண்ணிட்டேன். டைம் இருக்கு இல்லே? எனக்கு ரொம்ப சிநேகம் அவள். என்னை ரொம்பத்தான் எதிர்பார்த்துட்டிருப்பா..."

அவள் பேசிக் கொண்டிருந்தபோதே பீரோவைத் திறந்து பட்டுப் புடவை, மாட்சிங் ப்ளவுஸ், உள்ளாடையெல்லாம் சம்பத் தேர்ந்தெடுத்து வைத்துவிட்டான்.

"உங்களுக்கெதுக்குப்பா இந்த வேலையெல்லாம்?" என்று உரிமையுடன் செல்லமாய்க் கோபித்துக்கொண்டாள் காயத்ரி.

"சரி சரி. நீ போய் ட்ரெஸ் பண்ணிட்டு வா. நான் அடுத்த வேலையைக் கவனிக்கிறேன்... " சம்பத் சுறுசுறுப்பானான்.

பீரோ திறந்து அவளது நகை செட்டுகளில் அவனுக்குப் பிடித்தமான முத்து செட்டை

எடுத்து பிரித்து வைத்தான். தனது உடைகளில் அவன் என்றுமே விசேட அக்கறை செலுத்து வதில்லை. பாண்ட்டும் அதற்கு மேட்ச்சிங்காய் சட்டையும் ஒன்றுக்குள் ஒன்று வைத்து அடுக்கியிருப்பான். இதே வேலையை காயத்ரி செய்தால் அவனுக்குப் பிடிக்காது. மேலோட் டமாய் இருந்த ஒரு செட்டை எடுத்து, ட்ரெஸ்ஸிங் மேஜை விளிம்பில் வைத் தான்.

காயத்ரி உடுத்தி முடித்துவெளி வந்ததும் அவனுக்காக எடுத்து வைத்திருந்த முத்து செட்டைப் பார்த்து முறுவலித்து, "நெனச் சேன். ஏன்தான் இப்படியெல்லாம் செய் யறிங்களோ? இப்ப நான் ரெடி. நீங்க?" என்றாள்.

அதேசமயம் அழைப்பு மணியோசை கேட்டது.

கிளம்பத் தயாரான அவனிடம், "என் னங்க இது. ஏதாவது கரடியா? வாசல்லயே நிக்க வச்சுப் பேசி அனுப்பிட்டு வாங்க" என்றாள் அவள்.

கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டவன், "ஏன் அனாவசியமா டென்ஷன் ஆகறே? நேத்து ஒரு சின்ன ஆபீஸ் வேலை மிஸ் பண்ணிட்டேன். அதுக்குத்தான் ஆள் வந்திருக்குன்னு நினைக்கிறேன். நான் ஒரு அரை மணி யில சரி பண்ணி அனுப்பிட்டு பின் னாலயே வந்து கலந்துக்கறேன், ஓகேவா?" என்று பேசிக் கொண்டே கதவைத் திறந் தான்.



சம்பத்தின் ஊகம் சரியாகவே இருந் தது. வந்திருந்தவன் அவர்களுடைய ஆபீஸ் பியூன் ஜார்ஜ்தான்.

"இப்படி உள்ளவா" என்று ஒரு கதவைத் திறந்து வழி விட்டதும் படக்கென்று கத வைச் சாத்திக்கொண்டான் அவன். "நேத்து நீ பண்ண வேலை வீட்ல இங்க படா பேஜராப் போயிடுச்சுப்பா" சோபா ஓரத் தில் வைத்திருந்த அவனது கிட்பாகை எடுத் தான்.

"சார்... நான் என்ன சார் தப்பு பண் ணேன்?"

"ஒண்ணுமில்லை... அந்தக் கேன்டீன் பார்சலை வச்சுக் கொண்டாற உனக்கு ஃபாரின் விஸ்கி பைதானா கிடைச்சது?"

"அத்தைச் சொல்றியா?" என்றான் ஜார்ஜ் அலட்சியமாக. கேண்டீன்ல மந்தார இலையில பார்சல் கொடுத்தான். அப் படியே எடுத்துனு வர அசிங்கமா இருந் துச்சு. சுத்தி முத்தி பார்த்தேன். அந்த விஸ்கி பாட்டிலுக்கு ரெண்டு உறை மாட்டி வச் சிருந்தான். பளபளன்னு டீஸன்டா இருந் தது. ஒண்ணுத்த உருவி, பார்சலைப் போட்டுக் கொணாந்தேன். இது ஒரு தப்பா...?"

"தப்பே இல்லப்பா" என்று கன்னத்தில் போட்டுக் கொள்ளாத குறையாய் மன்னிப்புக் கேட்டுக் கொண்டவன், 'எனக்கு ஒரு உதவி செய்யணுமே!' என்று இறங்கி வந்தான்.

"சார் கேட்டிங்களே அந்த பாட்டிலைச் சேர்க்க வேண்டிய இடத்துல கொண்டு போய்ச் சேர்த்துட்டிங்களா, இல்ல நான் ஏதாவது..."

"ஆமாம்பா. நீதான் ஒத்தாசை பண் ணணும் கூடவே ஒரு லெட்டர் தர்றேன். ரெண்டையும் ரெண்டாம் பேருக்குத் தெரியாமப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்க்கணும். உன்னைத் தவிர எனக்கு வேற நம்பகமான ஆள் கிடைக்கலேப்பா..."

இந்த முன்னுரையோடு அவன் எழுத ஆரம்பித்தான்.

"உங்களுக்குக் குடிப் பழக்கம் இல்லாதது ரொம்ப நல்லது. ஆனா, அது இருக்கறவங் களோட பலவீனத்தைப் பயன்படுத்திக் கிட்டு உங்க காரியத்தை நீங்க சாதிக்க நினைக்கறதும் ஒரு பலவீனம்தானே! இந்தக் காரியத்துல உங்களுக்குத் துணை போனதுக் காக ரொம்ப வருத்தப்படறேன். கொடுத்த வாக்கை மீற முடியலை. இதுவே முதலும் கடைசியுமாயிருக்கட்டும்."

கடிதத்தையும் புட்டியையும் பெற்றுக் கொண்ட ஜார்ஜ், "சரி சேர்த்துடறேன் சார். அவர்கிட்டேருந்து பதில் ஏதும் வாங்கி வரணுமா சார்?" என்றான்.

"ஐயோ, அதெல்லாம் வேணாம். ரொம்ப ரகசியம் இது. வெளிய தெரிஞ்சா போச்சு. மிஸ்டர் பரமேஸ்வரன் என்னோட மாமனார் ரொம்ப கௌரவப்பட்ட மனிதரப்பா. அவரோட பொண்ணு. என் ஒய்ஃப். அவரை ரொம்ப ஒசந்த இடத்துல உட்கார வச்சிருக்கா. அவரா இப்படின்னு தெரிஞ்சா.. அவ தாங்க மாட்டா..."

சம்பத்தின் குரலும் விழியும் கலங்கிப் போயிருந்தன. ○

# இன்னொரு சுஜாதா?

"என்னை எழுதத் தூண்டியவர் சுஜாதா. அவரது அறிவியல் நூல்களைப் படித்து விட்டுதான் மொழிபெயர்ப்புக்கு வந்தேன்!" என்கிறார் சமீபத்தில் மொழி பெயர்ப்புக்கான குறள்பீட விருது பெற்றிருக்கும் வஸந்த் செந்தில்.

"அறிவியல் விஷயங்களைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டும் என்றால் தமிழ் அறிவு மட்டும் இருந்தால் போதாது, அறிவியல் ஞானமும் வேண்டும். சுஜாதாவின் வெற்றி அதுதான். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அறிவியல் வல்லுனர்கள் நிறைய பேருக்குத் தமிழ் மொழியோடு பரிச்சயம் குறைவாகவே இருக்கிறது. பலன், அவர்களின் வார்த்தைப் பிரயோகம் புரிந்து கொள்ள கடினமாகிவிடுகிறது. அறிவியல் தமிழ் பின்தங்கி இருப்பதற்கு இது தான் காரணம்!" என்று சொல்லும் வஸந்த் செந்தில் தனியார் மருத்துவமனை ஒன்றில் பணிபுரியும் டாக்டர்.

மருத்துவம் தொடர்பான சிறுகதைகளை 'கிரகப்பிரவேசம்' என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டிருக்கும் இவரிடம், "சுஜாதாவின் பாதிப்பு அதிகமாகத் தெரிகிறதே? உங்களுக்கென்று ஒரு தனிப் பாணியை உருவாக்கிக் கொள்ளக் கூடாதா?" என்றால் "அவரது நூல்களை அளவுக்கு அதிகமாகப் படித்து விட்டதாலோ என்னவோ என்னையும் அறியாமல் இப்படி நேர்ந்துவிட்டது!" என்று புன்முறுவலுடன் ஒப்புக் கொள்கிறார்.

'நனையாத நிலா', 'ஒற்றைச் சிறகு', 'துணையிழந்த பாரவண்டி' என்று பல கவிதை நூல்களை வெளியிட்டிருக்கும் இவர் "குறள்பீட விருது வாங்கியது சந்தோஷம்தான், ஆனால் ஒரு சின்ன வருத்தம் இருக்கிறது..." என்று இழுக்கிறார்.



"குறள்பீட விருது என்று ஒரு விருதைக் கொடுப்பதாக அரசு முடிவு செய்தவுடன் 'தமிழுக்கு இது ஒரு சாகித்ய அகாடமி!' என்றார் முதல்வர். சாகித்ய அகாடமி விருது வருடந்தோறும் ஒருவருக்கு மட்டும் தான் வழங்கப்பட்டு வருகிறது. அதைப் போலவே இதையும் வழங்கியிருந்தால் நன்றாக இருந்திருக்கும். பெரியவர் அ.ச.ஞா.வுக்கு மட்டும் கொடுத்திருக்கலாம். கொஞ்ச நாட்களில் ஒரு சராசரி தமிழக அரசு விருது மாதிரி இது ஆகிவிடப்போகிறதே என்கிற வருத்தம் எனக்கு!" என்று இவர் சொல்லும்போது உண்மையாகவே குரலில் வருத்தம் தொனிக்கிறது!

'தமிழ் இலக்கணம்- ஒரு புதிய அறிமுகம்!' என்ற புத்தகத்தையும் எளிய தமிழில் மருத்துவ அகராதி ஒன்றையும் வெளியிடும் பணியில் மும்முரமாக இருக்கும் வஸந்த்துக்கு வாழ்த்துச் சொல்லிவிட்டு வந்தோம்!

— ஏக்ஜி

படம்: ஜரிஸ்



# உயிர்காக்க உதவுங்கள்!

எனது மகள் செல்வி **S.** நர்மதாதேவி வயது சுமார் 20, சென்னை காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரியில் **B.Sc.,** படித்துக் கொண்டிருக்கும்போது துரதிருஷ்டவசமாக அவளின் இரு சிறுநீரகங்களும் பழுதடைந்து கடந்த ஒரு வருடமாக சிகிச்சை செய்து தற்சமயம் சென்னை போரூர் ஸ்ரீ ராமச்சந்திரா மருத்துவமனையில் தீவிர சிகிச்சை பெற்று வருகிறாள். அவளுக்கு கூடிய விரைவில் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்றும், அதற்கு குறைந்த பட்சம் ரூ. 1,50,000/- செலவாகும் என்றும் மருத்துவர்கள் கூறுகின்றார்கள். தனியார் கம்பெனியில் மிகவும் குறைந்த வருமானம் உள்ள என்னால் மேற்கண்ட பெரிய தொகையை சமாளிக்க இயலவில்லை. ஆதலால் இதைக் கண்ணுறும் கருணை உள்ளம் கொண்ட அன்பர்கள் தங்களால் இயன்ற அளவு உதவி செய்து, என் மகளின் உயிரைக் காப்பாற்றுமாறு வேண்டுகிறேன்.

**இப்படிக்கு,**

**T.N. ஷண்முகம்,**
**20, பொன்னப்ப நாயக்கன் தெரு (விரிவாக்கம்)**
**லட்சுமிபுரம்,**
**குரோம்பேட்டை, சென்னை – 600 044**

---

**Golden Opportunity at a Moderate price**

**Please Book early to Avoid Disappointment**

# FRIENDS TRAVELS

59, Appar Swamy Koil Street, Mylapore, Chennai - 600 004.

## வட இந்திய புனித யாத்திரை

**23 நாட்கள் கொண்டது: ரூ. 6200/-**

**புறப்படும் தேதி: 04.05.2001**

சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் இருந்து இரண்டாம் வகுப்பு 3 டயர் கோச்சில் ரிசர்வ் செய்து அழைத்துச் செல்லப்படும்.

பூரி, கோனார்க், புவனேஸ்வர், வாரணாசி(காசி) கயா, புத்தகயா, அயோத்தி, ஹரித்வார், ரிஷிகேசம், இலட்சமண ஜூலா, பத்ரிநாத்–கேதார்நாத், அலகாபாத், டெல்லி, மதுரா, பிருந்தாவனம், ஆக்ரா மற்றும் பல புண்ணிய ஸ்தலங்கள்.

**LTC available to eligible employees.**

பங்கேற்க விருப்பம் உள்ள அன்பர்கள் ரூ. 2000/- முன்பணம் செலுத்தி பதிவு செய்து, மீதியை புறப்படும் தேதிக்கு 20 நாட்கள் முன்பு செலுத்த வேண்டும்.

***M. BALAKRISHNAN***
***LIC (Retd.) - Organizer.*** ***Ph: 499 35 68***

# நடக்குமென்பார், நடக்கும்!



மேஷம் : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

அதிர்ஷ்ட வாய்ப்புகள் அத்தனையும் உங்க வசம் வந்து நிற்கப் போகுது. அதனால கொடுக்கல், வாங்கல், ஸ்பெகுலேஷன் லாபம் கொண்டு வரும். பத்திரிகைக்காரங்களுக்கு மதிப்பு கூடும். குடும்பத்துல சுப காரியம் களை கட்டும். பிரார்த்தனை பலிக்கும். ஆனா, பயணத்துல கவனம் தேவை. விபத்து நேரலாம்.

கடகம் : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எடுத்த காரியம் எல்லாத்திலேயும் வெற்றி மேல் வெற்றி. புதிய பொறுப்பு, புதிய பதவி, கூடி வரும். அந்தஸ்து ஆகாசத்துக்கு உசரும். பொருளாதார நிலைமை திருப்தியா இருக்கும். எதிர்பார்த்த நல்ல செய்தி வாசல் தேடி வரும். தொழில் வளர்ச்சி ஏறுமுகமாய் இருக்கும். தாய் உடல்நலம் கவனம் தேவை. வாகனத் தொல்லையால் எதிர்பாராத செலவு ஏற்படக் கூடும்.





ரிஷபம் : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

துணிச்சலா, தன்னம்பிக்கையா நிறைய காரியங்களைச் செய்வீங்க. குழந்தைங்க நலம் சீராக இருக்கும். சின்னச் சின்ன பிரச்னையும் சஞ்சலமும் ஏற்படும். பண விஷயத்துல உஷாரா இருக்கணும். இல்லாட்டி 'அம்போ'ன்னு நிக்க வேண்டியதுதான். வெளியூர் வியாபாரத்துல அவ்வளவா லாபம் கிடைக்காது. தான, தருமம், தெய்வப் பிரார்த்தனைன்னு இருங்க... எல்லாமே நல்லதா நடக்கும்.

சிம்மம் : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

இதுவரை ஒதுங்கிய உறவும், நட்பும், இப்ப உங்களுக்கு உதவ வருவாங்க. துணிச்சல் அதிகரிக்கும். எதிரிங்க மாயமாய்ப் போவாங்க. பயணம் பயனுள்ளதா இருக்கும். வாகன ராசிகூட இருக்குங்க. கணவன்-மனைவி உறவுக்குள்ள சின்னதாய் சலசலப்பு வரும். கவலைப்படாதீங்க. சீக்கிரமே ராசி ஆயிடும்.





மிதுனம் : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

புத்திசாலித்தனம் பிரகாசமா வெளிப்படும். அதனால உற்சாகமா இருப்பீங்க. பெண்களுக்குப் பல வழிகளிலும் ஆதாயம் கிடைக்கும். வேகம் குறைச்ச, விவேகம் கூட்டிக்கோங்க... தீய பலன்கள் மட்டுப்படும். திடீர் முதலீடுகள் கூடவே கூடாது. வீண் அலைச்சல்தான் மிச்சமாகும். சாதுக்கள் தரிசனம் மன அமைதி கொடுக்கும்.

**கன்னி : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)***

**ஆரோக்கியம் அற்புதமா இருக்கிறதால, உங்க நடையிலேயே ஒரு மிடுக்கு தெரியும். வெளிநாடு சான்ஸ்கூட இருக்குங்க. நண்பர்கள், உறவினர்கள்னு அனுகூலம் நிறையவே எதிர்பார்க்கலாம். ஏதாவது பிரச்னை வந்தா, அது உங்க கடாமுடா பேச்சாலதான். அதனால பக்குவமா பேசி, சுமுகமா நடந்துக்குங்க. வெற்றிக் கொடி கட்டிடலாம்!**



# அக்னிசர்மா பக்கம் ஜனவரி 24 முதல் 30 வரை



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

புதிய முயற்சி, முதலீடு, வியாபாரத் துவக்கம்னு ஏதாவது செய்யற ஐடியா இருந்ததுன்னா, அப்படியே டிராப் பண்ணிடுங்க. இந்த வாரம் எதுவும் சாதகமான பலன் தராது. விளையாட்டு விநோதங்களில் விருப்பமிருந்தா அதையும் குறைச்சுக்கறது நல்லது. பெண்களுக்கு நல்ல வாரம். மனமகிழ்ச்சி அதிகமாகும். நல்லவங்க நட்பு கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும்.

**மகரம் : (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)**

**உங்களோட திறமையும், புத்திசாலித்தனமும் பாராட்டப்படும். பண நடமாட்டம் பேஷா இருக்கும். பெண்களுக்கு நல்ல பலன்களா நடக்கும். திருமணம், குழந்தைப்பேறு, சுபகாரியம்னு மங்களகரமான விஷயங்கள் நடக்கப் போகுது. ஆடை, நகை, அணிமணின்னு பொருள் சேர்க்கை ஏற்படும். மகான் தரிசனம் கிடைக்கும். புது முயற்சிகள் வேணாம். பிரச்னை வரும்.**





**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எல்லாரும் பாராட்டும்படியான காரியங்களைச் செய்யப் போறீங்க. அதனால அவசரம், பதற்றம், எதிலும் கூடாது. கொஞ்சம் அசந்தாலும் டென்ஷன்தான். பணக்காரங்க உறவு கிடைக்கும். வாசக்கதவை ராச லட்சுமி தட்டுவா...தயாரா இருங்க. சுக்கிரன், சஞ்சாரம் வசீகரத்தை அதிகரிக்கும். கணவன் – மனைவி பரஸ்பரம் பாசமா இருப்பீங்க. குடும்பத்துல குதூகலத்துக்குக் குறைச்சலே இல்ல.

**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க கவலை எல்லாம் மலை ஏறப் போற காலம் வந்தாச்சு. அப்பவோ இப்பவோன்னு இழுத்தடிக்கிற விஷயம், கனிஞ்சு தானா கையில விழும். அரசியல்வாதிகளோட புகழ் ஜிவ்வுன்னு ஏறும். கலைத்துறை நட்சத்திரங்களுக்கும் உற்சாகமான வாரம்தான். வியாபாரம் லாபம் தரும். ஞானமார்க்கத்தில் ஈடுபாடு இருக்கிறவங்களுக்கு, தெய்வீக அனுபவம் நேரும்.





**தனுசு** : (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

இந்த வாரம், கிரக சஞ்சாரம் நல்லபடியா இருக்கறதனால, உங்க பெயரும் புகழும் உச்சாணிக்கு ஏறப் போகுது. பண நடமாட்டம் நல்லா இருக்கும். சுப காரியங்கள் கெட்டிமேளம் கொட்டப் போகுது. பெண்கள் நிலை உயரும். எடுத்தக் காரியம் ஜெயிக்கும். தெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். பெரியோர் ஆசி கிடைக்கும். விசேஷ காரியம் நடக்க சந்தர்ப்பம் வரும். எதிர்பார்த்துக் காத்திருங்க.

**மீனம்** : (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

உங்க நேர்மைக்கும் கடும் உழைப்புக்கும் பலன் கிடைக்கப் போகுது. அந்த மகிழ்ச்சியில வீட்டு நலன்ல கவனம் வைக்கத் தவறிடாதீங்க. படிக்கிற பசங்களுக்குப் பிரகாசமான எதிர்காலம் தெரியும். அரசுப் பணியாளர்களுக்குச் செழிப்பான வாரம். கணவன் – மனைவி உறவு திருப்தியா இருக்கும். உடன்பிறந்தவர்களால் ஏதேனும் பிரச்னை, குழப்பம் நேரும். திறமையா சமாளியுங்க.



அனுராதா ரமணன்

பெங்களூரின் கடும் குளிர் கூட உறைக்கவில்லை அஜய்க்கு. மனசு முழுக்க சுஜாதா நிறைந்திருந்தாள். அவளது நினைவே கதகதப்பாக...

காலையில் ஒரு காப்பி குடித்தது தான். மணி பத்தாகப் போகிறது. அன்றைக்குச் சனிக்கிழமையாதலால் சுஜாவிற்கு ஆபீஸ் கிடையாது என்பது அவனுக்குத் தெரியும்.

ஹோட்டல் அறையிலிருந்தபடி சுஜாவின் வீட்டுத் தொலைபேசி எண்களை ஒற்றி ஒற்றி சுட்டுவிரல் வலி எடுத்ததுதான் மிச்சம். எதிர் முனையில் தொலைபேசி ஒலித்ததும் யாரோ எடுக்கிறார்கள் என்பது தெரிகிறது. ஆனால், அவன், 'சுஜா, நான்தான் அஜய்' என்று சொல்ல ஆரம்பித்தாலே எதிர்முனை ஊமையாகி விடுகிறது. டக்கென ரிசீவர் வைக்கும் சத்தம், அவனது நெஞ்சில் ஆணி அறைவது போல.

தன்னை வரச் சொல்லிவிட்டு, சுஜா, இப்படி மௌனமாக தொலைபேசியில் கூட குரல் கொடுக்காமல் புறக்கணிப்பாள் என்று அவனுக்குத் தோன்றவில்லை. தோன்ற நியாயமுமில்லை.

இன்று நேற்றா பழக்கம்? அஜய்க்கு முதன் முதலாக ஒரு பெண்ணிடம் ஈர்ப்பு ஏற்பட்டதே சுஜாவைச் சந்தித்தப் பிறகுதானே!

அவன் பெருமூச்செறிந்தான். இந்தச் சந்திப்பிற்காக ஒருநாள் இரண்டு நாட்களில்லை. கிட்டத்தட்ட ஐந்து வருடங்களுக்கு மேலே காத்திருக்கிறான் அவன்.

'இப்பொழுது எப்படி இருப்பாள் அவள்?'

அவனால் கற்பனை செய்து கூட பார்க்க முடியவில்லை. ஆரம்பக் காலங்களில் - அதாவது கம்ப்யூட்டர், ஈமெயில் இவை எல்லாம் பிரபலமாகாத காலத்தில் இருவரும் வாரம் தவறாமல் வரிந்து வரிந்து கடிதம் எழுதிக் கொண்டிருப்பார்கள்.

இதில் அவனை விடவும் அவள்தான் மிகுந்த அக்கறையுடனும், தீவிரத்துடனும் எழுதுவாள்.

அம்மாவின் சமையல் பற்றியும், வீட்டில் வளர்க்கும் பூனை, குட்டிகள் போட்டது பற்றியும், அதில் ஒரு குட்டிக்கு அவள் செல்லமாய் அஜய் என்று பெயர் வைத்திருப்பதாகவும், அப்பாவுக்கு அது பிடிக்கவில்லை என்றும், கல்லூரியில் நிறைய மாணவர்கள் தனது ஃபிரண்ட்ஷிப்புக்காக தன்னையே சுற்றிச் சுற்றி வருவதாகவும் அதில் சில முகங்கள் அஜய்யை விட அழகாக இருப்பதாகவும், ஏற்கெனவே தெரியாத்தனமாய் உன்னை லவ்வி விட்டதால் வேறொருவனை மனசால் நினைத்தால் கூட அது கற்புக்கரசிகளுக்கு 'அழகில்லை' என்றும் கிண்டலடித்து எழுதியிருப்பாள்.

சில சமயங்களில் கடிதம் மிகத் தீவிரமாக இருக்கும். அப்பாவின் போக்கே சரியில்லையென்றும், பணம் பணம் என்று பேயாக அலைவதாகவும், இப்படியே போனால், என்றைக்காவது ஒருநாள் தான் தூங்கிக் கொண்டிருக்கும்பொழுதே, தன்னை எவனுக்காவது விற்று விட்டால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை என்றும், அதற்குள் வந்து தன் கழுத்தில் மூன்று முடிச்சுப் போட்டு அழைத்துப் போகாவிட்டால் தற்கொலைப் படையினரைப் போல, தன் கழுத்து டாலரிலேயே சயனைட் குப்பி வைத்திருப்பதாகவும் மிரட்டி எழுதுவாள்.

ஈமெயில் வந்த பிறகு, பரஸ்பரம் இருவரும் தினமுமே ஒரு 'ஹாய்' அல்லது 'பேய்' சொல்லிக் கொண்டுதான் இருந்தார்கள்- சென்ற ஆறு மாதங்களுக்கு முன்பு வரை.

# இனிமேல் ஆரம்பம்

என்னவோ தெரியவில்லை. ஆறு மாதங்களாக சுஜாவிடமிருந்து கடிதம் வருவது குறைந்து விட்டது. எப்பொழுதாவது அத்திப் பூத்தாற்போல ஒற்றை வரியில் 'ஐ யாம் ஓ.கே., ஆர் யூ ஓகே?' என்று வரும். ஆபீஸில் வேலை பளு அதிகம் என்று ஒரு கடிதம். பிறந்த நாள் வாழ்த்துக்கு ஒன்று. கடைசியாக ஈஸ்வரனின் பிறந்த நாளுக்கு லேட்டாக ஒரு வாழ்த்து வந்தது. அதற்குப் பிறகுதான் அஜய், தன் மனசிலிருப்பதையெல்லாம் கொட்டி அவளுக்கு ஒரு மெயில் அனுப்பியிருந்தான். அதற்கு உடனேயே வந்திருந்த அவளது பதில் அவனது பிடரியில் குதூகல காற்றாய் உந்த வைத்து - இதோ, இப்பொழுது பெங்களூர் வரை கொண்டு வந்து சேர்த்து விட்டது.

'இனிமேல் என்ன... அவளும் கல்யாணத்திற்குத் தயாரா இருக்கா. ஏதோ அவள் அப்பா மனசு மாறுவதற்குள்ள எந்த கோவில்லயாவது வச்சு தாலிய கட்டிட வேண்டியதுதான்.'

அவன் பரபரத்தான். இருபத்தியோராவது முறையாகத் தொலைபேசி எண்களை விரல்களால் ஒற்றினான்.

"ஹலோ..."

''சுஜா...



## பெரிய சாத்தான்!

முதன்முதலாக முப்பரிமாண வித்தையில் வெளியாகி வாண்டுகளைக் கொள்ளை கொண்ட 3D-திரைப்படம் 'மை டியர் குட்டிச் சாத்தான்'. கொஞ்சம் நாகரீக வண்ணம் பூசிக் கொண்டு புதிய பொலிவுடன் 'சோட்டா சேட்டன்' என்கிற பெயரில் இந்தியில் இப்போது மறுபடியும் ரிலீஸாகியிருக்கிறது.



மிரள வைக்கும் அலங்காரங்கள், பகட்டு ஆபரணங்களுடன் ஊர்மிளாவை உலவ விட்டிருக்கிறார்கள். அவரின் வழக்கமான ஆடைக்குறைப்பு சமாசாரங்கள் இதில் இல்லையென்பது ஆறுதல்.

தயாரிப்பாளர் அப்பச்சனின் மகன் ஜிஜோதான் இயக்குனர் என்பதால் யோசிக்காமல் காசைக் கொட்டி, புதிய காட்சிகளை இணைத்திருக்கிறார்கள். இந்தி என்பதால், இளையராஜாவைக் கழற்றிவிட்டு அனுமாலிக்கை அணுகியிருக்கிறார்கள்.

கதையில் கொஞ்சம் மாறுதல்... காட்சியில் கொஞ்சம் கிராஃபிக்ஸ்... சக்தி கபூர், சதீஷ் கௌசிக் என்ற இந்தி முகங்கள்... ஃபராகான் ஆட்டுவிக்கும் ஊர்மிளா... என இது பெரிய சாத்தான்!

– ஜீவன்

சுஜாதானே பேசறது."

எதிர்முனையில் சிறிய தயக்கம்.

"ஹலோ... சுஜா..." அவன் மீண்டும் குரல் கொடுத்தான்.

"நான் சுஜா இல்ல.. அவ அம்மா. நீங்க யாரு?"

அஜய் முகம் மலர்ந்தான்.

"ஆன்ட்டி, நான் அஜய் பேசறேன். மெட்ராஸ்லே இருந்து சுஜாவுக்கு மெயில் அனுப்பியிருந்தேனே. நான் வர்றதாச் சொல்லி..."

"அப்படியா... சொல்லவேயில்லையே... எப்படியிருக்கேப்பா? அம்மா, அப்பா, உன் தங்கை அர்ச்சனா எல்லாரும் சுகம்தானே?"

சுஜாவின் தாய் கல்பகத்துக்குப் பேசும் பொழுதே குரல் தழுதழுத்தது.

இருக்காதா பின்னே... அவர்கள் குடும்பமும் அஜய்யின் குடும்பமும் இப்படி மூன்றாம் மனிதர்கள் போல நலம் விசாரிக்கும்படியாகவா பழகியிருக்கிறார்கள்... கல்பகம் கேசரியும், திரட்டுப்பாலும் தன் கையாலேயே செய்து அஜய்யை வரவழைத்து எத்தனை முறை கொடுத்திருக்கிறாள். ஒரு நாள் கிழமை என்றால் இரண்டு குடும்பமும் சேர்ந்து அடிக்கிற கூத்து கொஞ்சமா, நஞ்சமா...

"ஏன்ப்பா.... பெங்களூர்க்கு வந்தவன், நேரே நம்ம வீட்டுக்கு வராம, எங்கேயோ ஹோட்டல்ல தங்கியிருக்கே...?"

அஜய் தயங்கினான்.

என்னதான் ஒருயிரும் ஈருடலுமாக பழகியிருந்தாலும் அவனை நேராக சுஜாவின் வீட்டுக்கு காரை செலுத்தாமல் தடுத்தது கேசவராமின் முகம்தான்.

"வரலாம்தான்... எங்கே, மகாராணி உத்தரவு தரல்லையே இன்னும்..."

எதிர்முனையில் சிறிது நேரம் மௌனம். பின் வலிய வரவழைத்துக் கொண்ட உற்சாகத்துடன கல்பகத்தின் குரல்.

"போறுமே... அவ சொல்லித்தான் நீ வரணுமா என்ன? இப்ப நான் சொல்றேன். புறப்பட்டு வா..."

அவன் தயங்கித் தயங்கி கேட்டான்.

"அங்கிள் எப்படியிருக்கார் ஆன்ட்டி? பழைய முரட்டுத்தனமெல்லாம் போயிடுச்சா..."

கல்பகம் மெலிதாய்ச் சிரித்தாள்.

"அதெல்லாம் பிறவியோடு வந்தது. மாத்த முடியாது. நீதான் வரப் போறியே... வந்து பாரு..."

அஜய் ரிசீவரை அதனிடத்தில் வைத்து விட்டு, குளித்து எந்திரம் போல் உடை மாற்றினான். நடுவில் இரண்டு முறை அவனது செல்லுலார் போன் ஒலித்தது. சென்னையிலிருக்கும் அவனது ஆபீஸ் தொலைபேசி எண்கள் மாறி மாறி கண் சிமிட்டின.

அது, ப்ரீதியின் அழைப்பாக இருக்கும் என்று அவனுக்குத் தெரியும். இப்பொழுது அவனிருக்கும் மனநிலையில் யாருடனும் அவன் பேச விரும்பவில்லை.

'முதலில் சுஜாவைப் பார்க்க வேண்டும்.'

'என்னை வரச் சொல்லிட்டு போன்ல கூட அகப்படாம கண்ணாமூச்சி விளையாடறியா நீயின்னு கேக்கணும்.'

'அதுக்கப்புறம்தான் ஆபீஸ் வேலை... ப்ரீதி அம்மா, அப்பா எல்லாம்...'

அவன் தீர்மானத்துடன் அறையைப் பூட்டிக் கொண்டு கிளம்பினாலும் மனசுக்குள் ஏதோ சொல்லத் தெரியாத கலக்கம்.

தன்னை வரச் சொல்லிவிட்டு, தொலை பேசியில் கூட சுஜா குரலைக் காட்டாமல் இருப்பதன் காரணம் புரியவில்லை அவனுக்கு.

ஒருவேளை விளையாடுகிறாளோ?

விளையாட்டுத்தானே எங்களை ஒன்று சேர்த்தது.

மனசுக்குள் பழைய சுஜா துள்ளலும் துடிப்புமாய் வந்து நிற்கிறாள்.

இரட்டைப் பின்னல்... அடர்ந்த இமைகளை விரித்து வெட்டி விடுவதுபோல பார்க்கும் பார்வை... வார்த்தைகள் ஒவ்வொன்றும் பளீர் பளீரென வந்து விழும்.

வெகுநாள் வரையில் பிணோஃபோரும், பர்முடாசும், டீ சர்ட்டும் ஜீன்ஸும்தான்.

அவள் அப்படி காட்டாறாக வளைய வந்தபோதெல்லாம் அவனுக்குள் எந்தவித ரசாயன மாற்றத்தையும் அவள் உண்டுபண்ணவில்லை. அடிக்கடி அவனை, வம்புக்கிழுத்து 'நான் ஜெயித்தால் என்ன தர்றே, இப்படிக் கேட்டு கட்டை விரலை உயர்த்திக் காட்டுவாள்.

அவனுக்கும் ரோஷமும், கோபமும் எகிறும்.

எத்தனையோ முறை அவளை இப்படிச் சீண்டியிருக்கிறான்.

"பொம்பளையாடி நீ.. உன்னைப் பார்த்தா எந்த ஆம்பளையும் 'ஐ லவ் யூ'ன்னு சொல்லவே மாட்டான்."

"சொல்ல வச்சா? என்ன தர்றே?"

"நீ மட்டும் அப்படி ஒருத்தனை சொல்ல வையி.. நீ என்ன கேட்டாலும் தர்றேன். இதப்பாரு, ஆம்பளைப் போட்டுக்கற டிரஸ்ஸை மாட்டிக்கிட்டு முரட்டுத்தனமா தெருவுல கிரிக்கெட் விளையாடி, சைக்கிள்ல டபுள்ஸ் போய், சத்தமா நாலு தடி பசங்களோட சேர்ந்து உட்கார்ந்து அரட்டை அடிச்சி, சிரிச்சி... இப்படியெல்லாம் நடந்துக்கற ஒரு பொண்ணை எவனுமே விரும்ப மாட்டான்."

"விரும்ப வைக்கிறேன். வேற எவனையும் இல்ல... உன்னையே 'ஐ லவ் யூ' சொல்ல வைக்கிறேன். என்ன பெட்டு?"

அஜய், தலையைச் சிலுப்பிக் கொண்டான்.

சுஜாவின் வீட்டை நெருங்க நெருங்க சொல்லத் தெரியாத அழுத்தம் அவன் நெஞ்சுக்குள்.

(தொடரும்)



''கைரேகை ஜோஸியர்கிட்டே போனியே... என்ன சொன்னார்?''

''நிறைய பேர்கிட்ட காட்டி காட்டி கைல ரேகையே இல்லையேன்னுட்டார்!''

– புளியரை கணேசன்



''தாஜ்மஹாலைப் பார்க்கும்போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது?''

''தாஜ்மஹாலைக் கட்டியது யார்?'ங்கிற கேள்விக்குப் பதில் தெரியாம ஆறாம் வகுப்புல அடி வாங்கினது ஞாபகத்துக்கு வருது!''

– வந்திரரயிருப்பு தெ.சுந்தரமகாலிங்கம்



''உங்க பூர்வாஸ்ரமம் என்ன குருவே?''

''இரு மனைவிகள்; நாலு குழந்தைகள், எட்டு லட்சம் கடன்!''

– உ. ராஜாஜி

# வருங்கால அரசியல்வாதிகளுக்கு ஒரு யுனிவர்சிட்டி கோர்ஸ்

"என்ன வைஸ்சான்சலர் சார், கவலையா உக்காந்திருக்கீங்க? உங்க யுனிவர்சிடில ஏதாவது பிரச்னையா?"

"அதெல்லாம் இல்ல லூசு. ஒவ்வொரு வருஷமும் புதுசு புதுசா ஏதாவது கோர்ஸ் ஆரம்பிக்கணும்னு எங்க பல்கலைக்கழகத்தோட கொள்கை. அதான் இந்த வருஷம் எந்த கோர்ஸ் ஆரம்பிக்கலாம்னு..."

"ப்பூ... இவ்வளவுதானா பிரச்னை? ஐடியாக்கள அள்ளித்தர லூசு இருக்கும்போது நீங்க ஏன் கவலைப்படறீங்க?"

"புது கோர்ஸ் ஆரம்பிக்க லூசு ஐடியா சொல்ற அளவுக்கு நம்ம கல்வித்தரம் தாழ்ந்து போச்சுன்னு நாளைக்குப் பேப்பர்ல நியூஸ் வரப் போகுது."

"நம்ம கல்வித்தரம் இனிமே கீழப் போறதுக்கு இடமே இல்லை. அதனால அந்தக் கவலையை விடுங்க."

"சரி புது கோர்ஸ் எந்த டிபார்ட்மென்ட்ல ஆரம்பிக்கலாம்? பாட்டனி, காமர்ஸ், கம்ப்யூட்டர் சைன்ஸ்... எதுல..."

"வி.சி.சார், அதெல்லாம் ரொம்ப ஓல்ட் ஃபேஷன். பேசாம 'பாலிடிக்ஸ்'னு ஒரு புது டிபார்ட்மென்டே ஆரம்பிச்சிருங்க."

"என்ன கேலியா? இந்தப் பல்கலைக் கழகத்துல நூறு வருஷமா பாலிடிக்ஸ் டிபார்ட்மென்ட் இருக்கு தெரியும்ல?"

"ஐயோ, அதெல்லாம் ஓல்ட் பாலிடிக்ஸ், சார். அவங்க என்ன படிச்சிருப்பாங்க? கிரேக்க நாட்டு ஜனநாயகம், தமிழ்நாட்டின் குடவோலை முறை, மிஞ்சிப் போனா உலக நாடுகளோட அரசியல் சாசனங்களைப் படிச்சி, ஆராய்ச்சி பண்ணியிருப்பாங்க. அதெல்லாம் வெறும் ஏட்டுச்சுரைக்காய்."

"எப்படி?"

"உங்க யுனிவர்சிடில பாலிடிக்ஸ் படிச்ச எத்தனை பேர் அரசியல்வாதியா இருக்காங்க, சொல்லுங்க பார்ப்போம்?"

வி.சி.திருதிருவென்று முழித்தார்.

"தெரியுதுல்ல, அதனாலதான் அதை ஏட்டுச் சுரைக்காய்ன்னு சொன்னேன். நான் சொல்றது நடைமுறை அரசியல். ப்ராக்டிகல் பாலிடிக்ஸ். நான் சொல்ற மாதிரி இந்த கோர்ஸ் வச்சீங்கன்னா, இந்த நாட்டின் வருங்கால அரசியல்வாதிகளை, தலைவர்களை உருவாக்கின பெருமை உங்களுக்கு வந்து சேரும்."

வி.சி. நிமிர்ந்து உட்கார்ந்தார். பெல் லடித்து எனக்குச் சூடான காப்பி கொண்டு வரச் சொன்னார். பேனாவைத் திறந்து வைத்துக் கொண்டு என்னை மரியாதையுடன் பார்த்தார்.

"லூசு, இந்த நடைமுறை அரசியல் கோர்ஸ்ல என்ன என்ன சப்ஜெக்ட் இருக்கலாம்னு ஒரு ஐடியா கொடு பார்ப்போம்."

"முதல்ல வருங்கால அரசியல்வாதிகள் படிக்க வேண்டிய சப்ஜெக்ட் 'ஜாதியோகிராஃபி'."

"அப்படின்னா...?"

"ஜாக்ரஃபி மாதிரி ஜாதியோக்ராஃபி. இந்த நாட்டுல எத்தனை ஜாதிகள் இருக்கு, அதுல எத்தனை உட்பிரிவுகள் இருக்கு. 'உள்-உள்-பிரிவுகள்' இருக்குன்னு அரசியல் மாணவர்கள் தெரிஞ்சிக்கணும். எந்த எந்த ஜாதிக்குத் தனியா சங்கம் இருக்கு, அதைவிட முக்கியம் எந்த எந்த ஜாதிக்குத் தனியா சங்கம் இல்லைன்னு தெரிஞ்சிக்கணும். அப்போத்தான் அரசியல் நடத்த முடியும்."

"என்ன லூசு சீரியசாத்தான் சொல்றியா?"

"நடுவுல டிஸ்டர்ப் பண்ணாம கேளுங்க சார். அது மட்டுமில்லை, தமிழ்நாட்டுல எந்தெந்த தொகுதில எந்

லூசு தரும் பிரும்மாண்டமான ஐடியா!



தெந்த ஜாதி ஆளுங்க நிறைய இருக்காங்கன்னு தெரிஞ்சிக்கணும். எந்த ஜாதி பின்தங்கிய ஜாதி லிஸ்டுல இருக்குன்னு தெரிஞ்சிக்கணும். அப்புறம் பிரபல நடிகர்கள், தலைவர்கள் இவங்கள்ளாம் எந்தெந்த ஜாதியச் சேந்தவங்கன்னு தெரிஞ்சிக்கணும்."

"அப்புறம்...?"

"தேசிய அளவுல அரசியல் பண்ணணும்ம்னு விரும்பறவங்களுக்கு நாட்டின் மதங்களைப் பத்தி சொல்லிக் கொடுக்கணும். அவங்களுக்கு விருப்பப்பாடமா 'மதாலஜி' வச்சிரலாம்."

"ஐயோ லூசு. வேற ஏதாவது உருப்படியாச் சொல்லேன்."

"அடுத்து ஒரு வெற்றிகரமான அரசியல்வாதி முக்கியமா தெரிஞ்சிக்க வேண்டிய சப்ஜெக்ட் 'கோஷ்டியாலஜி.'"

"அது என்ன?"

"நான் முதல்ல ஒரு அரசியல் கட்சிய எப்படி நடத்தறதுங்கறத தெரிஞ்சிக்கணும்ம்னு 'கட்சியாலஜி'ய சிலபஸ்ல வைக்கலாமான்னு யோசிச்சேன். ஆனா கட்சிய நடத்திக் காட்டறது பெரிய வித்தையே இல்லை. கட்சிக்குள்ள கோஷ்டி அரசியல் நடத்தறது இருக்கு பாருங்க, அதான் பெரிய கலை. பத்து பேர் மட்டும் இருக்கற ஒரு கட்சில பதினொரு கோஷ்டியை எப்படி உருவாக்கறது, எப்படி சமாளிக்கறதுங்கறதப் பத்தி இந்த கோஷ்டியாலஜில சொல்லிக் கொடுத்துருவோம். இது ரொம்ப சீரியஸ் சப்ஜெக்ட். அதனால இந்த 'கோஷ்டியாலஜி' சப்ஜெக்டுக்கு மட்டும் படிச்ச பேராசிரியர்களப் போடாம வெளியிலேருந்து ஆளுங்கள கொண்டு வரணும். மூப்பனார்ஜி, வாழப்பாடிஜி, ஆர்.எம்.வீரப்பன்ஜி இப்படி அனுபவஸ்தர்கள் நிறையப் பேர் இருக்காங்க."

"ஐயோ லூசு நீ என்னை வில்லங்கத்துல மாட்டிவிட்டுட்டுத்தான் போகப்போற."

"அடுத்த சப்ஜெக்ட் மேடைப் பேச்சாலஜி...."

"அது எனக்கே தெரியும் லூசு. ஒரு விஷயத்தக் கொடுத்து அதப்பத்தி மேடைல பேசறமாதிரி பேசச் சொல்லணும். அவ்வளவுதானே?"

"அங்கதான் நீங்க தப்பு பண்றீங்க. ஒரு விஷயத்தப் பத்திப் பேசறதுக்கு அரசியல்வாதி எதுக்கு? எந்த விஷயமும் இல்லாம மணிக் கணக்குல பேசத் தெரியணும். நடுவுல சம்பந்தம் இருக்கோ இல்லையோ, நிறைய குட்டிக் கதை சொல்லணும். திருக்குறளை மேற்கோள் காமிக்கணும். அதுதான்



மேடைப் பேச்சாலஜி.''

''அப்புறம்.''

''அதுலேயே இன்னொரு கிளை இருக்கு. அதுக்கு 'பேட்டியாலஜி'ன்னு பேர் வச்சிருக்கேன்.''

''பத்திரிகை நிருபர்கள் கேள்வி கேட்டா உண்டு இல்லைன்னு தேங்கா உடைச்ச மாதிரி பதில் சொல்லக் கத்துத்தரதுதானே இந்த பேட்டியாலஜி.''

''சொல்றேனேன்னு தப்பா நினைச்சிக் காதிங்க வி.சி. சார். உங்களுக்குச் சுட்டுப் போட்டாலும் யதார்த்த அரசியல் வராது. பத்திரிகை நிருபர்கள் 'நீங்க பிஜேபியோட கூட்டு வச்சுக்கப் போறீங்களா?'ன்னு கேள்வி கேட்டா, அரசியல்வாதி சொல்ற பதிலவச்சு ஆமான்னும் சொல்ல முடியாது, இல்லைன்னும் சொல்ல முடியாதுங்கற மாதிரி இருக்கணும். ஒரே வார்த்தையப் போட்டு சுத்திச் சுத்திப்பேசணும். கேள்வி கேட்கிற நிருபர் தலையைப் பிச்சுக்கற வரைக்கும் பதில் சொல்றத நிறுத்தக் கூடாது. அதான் பேட்டியாலஜி. சில புத்திசாலி நிருபர் நம்ம பதில் லேர்ந்து 'ஆமா' அல்லது 'இல்லை'ன்னு கண்டுபிடிச்சிப் பேப்பர்ல போட்டா, அதைவிடக் குழப்பமா ஒரு மறுப்பு அறிவிப்பு கொடுத்து எல்லாரையும் குழப்பி விடத் தெரியணும். இந்த திறமையெல்லாம் நம்ம பேட்டியாலஜில சொல்லித் தரப் போறோம்.''

அப்போதுதான் காப்பி வந்தது. காப்பியைச் சுவைத்துக் கொண்டே தொடர்ந்தேன்.

''அப்புறம் 'பார்லிமெண்டாலஜி'ன்னு ஒரு சப்ஜெக்ட் வச்சிரணும். நம்ம பிரதமர் தும்மறது, இருமறது, கொட்டாவி விடறது இத உன்னிப்பா கவனிச்சிக்கிட்டே இருக்கணும். அப்புறம் பாராளுமன்றத்துல போய் 'இந்த சமயத்துல பிரதமர் கொட்டாவி விட்டது சரியில்லை. அதுக்கு மன்னிப்பு கேக்கறவரைக்கும் பாராளுமன்றத்துல எந்த வேலையும் நடக்க விடமாட்டோம்'னு கூச்சல் போடணும். அதனால நாட்டுக்கும் மக்களுக்கும் பல கோடி ரூபாய் நஷ்டத்தை ஏற்படுத்திட்டு அதுக்கப்புறம் போனாப் போகுதுன்னு பிரதமர மன்னிச்சிரணும். அதான் பார்லிமெண்டாலஜி.''

''அவ்வளவுதானா இன்னும் இருக்கா?''

''ரொம்ப முக்கியமான சப்ஜெக்ட் இருக்கே. இவ்வளவு கஷ்டப்பட்டு அரசியல் வாதியான பிறகு, அதனால லாபம் வர வேண்டாமா? அதுக்குத் தான் சிலபஸ்ல 'ஊழலாலஜி'யச் சேத்துருக்கேன்.



மக்களோட அன்றாட வாழ்க்கையோட தொடர்பு உடைய எல்லா விஷயங்களிலயும் ஊழல் கொடி கட்டிப் பறக்கறதுக்கு வழி முறைகள் சொல்லிக் கொடுப்போம். சிமெண்ட், நிலக்கரி, சத்துணவு, போக்குவரத்து நிறுவனங்கள், பி.டபிள்யூ.டி. இந்த மாதிரி துறை-வாரியா ஊழல் பண்றதுக்கான திறமைய வளர்க்கறதுக்காக இந்த சப்ஜெக்ட். இதே சப்ஜெக்ட்டுல கோடிக் கணக்குல சொத்து சேத்தப்பறம் அத எப்படி ஸ்விஸ் பாங்க்ல போடறது, பினாமி சொத்துன்னா என்ன, அத எப்படி பாதுகாக்கறது– இதையெல்லாம் சொல்லிக் கொடுப்போம்.''

''குட்! அப்புறம்...?''

"ரொம்ப குழப்பமான ஒரு சப்ஜெக்ட் இருக்கு. அதைக் கடைசில சொல்லிக் கொடுப் போம். அதுக்குப் பேர்தான் 'கூட்டணியிசம்'. இன்னொரு அரசியல் கட்சியோட எப்படி கூட்டணி வச்சிக்கறது, தேர்தல் சமயத்துல தொகுதிப் பங்கீடு எப்படிப் பண்றது. வெளியே இருந்து ஆதரவு கொடுக்கறது எப்படி, உள்ளே இருந்தே எதிர்க்கறது எப்படி, மூணே மூணு எம்.பி.ய வச்சிக்கிட்டு கூட்டணிக் கட்சிகிட்ட நாலு மந்திரி பதவி வாங்கற கலை, இதெல்லாம் சொல்லிக் கொடுப்போம். அதே சமயத்துல கூட்டணிக் கட்சிக்கு நம்ம ஆதரவ எப்ப விலக்கிக்கறது, கூட்டணி ஆட்சிய எப்படி ஒரு சாதாரண டீ பார்ட்டி வச்சிக் கவுக்கறது, ராஜினாமா கடித நாடகம்னா என்ன, அதுல எப்படி நம்ம காரியத்த சாதிச்சிக்கறதுன்னு சொல்லித்தருவோம். இதையெல்லாம் சொல்லித்தரதுக்குன்னு நாட்டுல ஒரு பத்து, பதினஞ்சி பேர் இருந்தா ஜாஸ்தி."

"அவ்வளவுதானா இன்னும் இருக்கா ஸார்?"

"இன்னும் ரெண்டு மூணு மைனர் சப்ஜெக்ட் இருக்கு வி.சி. சார். உதாரணத் துக்கு எல்லா அரசியல்வாதியும் அவசியம் கத்துக்க வேண்டிய பாடம் 'வாரிசோபதி.' தன்னுடைய வாரிசை நியமிக்கற விஷயம் இருக்கே அது ரொம்ப சிக்கலானது. 'சொந்த மகன் வாரிசோபதி', 'வளர்ப்புமகன் வாரி சோபதி'ன்னு ரெண்டு பிராஞ்ச் இருக்கு இதுல."

"இப்போ எல்லா கோர்ஸ்லயும் கொஞ்ச மாவது ஆன்மிகம் இருக்கணும்னு எல்லாரும் விரும்பறாங்க. அரசியல்வாதிக்கு எப்படி ஆன்மிகம் சொல்லித்தரது?"

"ஏன் முடியாது? தன் பகைவர்கள் அழிய றதுக்கு எந்த மாதிரி யாகம் பண்றது? சிங் கத்தின் சிறுகுடல், நரியின் ரத்தம், கரடியின் ஈரல் இதெல்லாம் வச்சி யாகம் பண்ணினா என்ன பலன்னு சொல்லித்தரலாமே."

"ஸாரு உன்னை இன்னும் ஒரு நிமிஷம் இருக்கவிட்டேன்னா அப்புறம் என் வி.சி. போஸ்டே காலியாயிரும். உன்னை முதல்ல... ஏய் செக்யூரிட்டி..."

நல்ல விஷயங்களைச் சொன்னால் புரிந்து கொள்ள முடியாத ஒரு துணை வேந்தர் இருந்தால் நமது கல்வித் தரம் எங்கே உயரப் போகிறது என்ற கவலையோடு தொய்வாக வெளியே நடந்தேன்.

— வி.ஆர்.



''நாளை முதல் உன்னுடன் எந்தச் சண்டையும் போடாமல் குடும்பம் நடத்தறதுன்னு தீர்மானிச்சிட் டேன் கமலா.''

''சந்தோஷம்! ஆனா அதை நாளைக்கு ஏன் தள்ளிப் போடணும்?''

''ஒரு அவசரத்துக்கு அடகு வைக்க உன் ஐந்து பவுன் சங்கிலி இப்ப தேவைப்படுது!''

– உ. ராஜாஜி



''தலைவர் ஏன் அந்த டீ.வி. மேல கோபமா இருக்காரு?''

''அவரோட தேர்தல் வாக்குறுதியை வாராவாரம் 'நகைச்சுவை திங்கள்'ங்கிற தலைப்புல போடறாங்களாம்!''

– வந்தவாசி பா. ஜெயக்குமார்



''என்ன சார் உங்க படத்துக்கும் தலைப்புக்கும் சம்பந்தமே இல்லையே?''

''என்ன சார் புரியாம பேசறீங்க? அந்த படத்துக்குத் தலைப்பு அதுதானே, இந்த ஒரு சம்பந்தம் போதாதா?''

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

# சென்னை 3 டு சைனா

## இதயம் பேசுகிறது

பெருஞ்சுவர் அடிவாரத்தில் டூரிஸ்ட் பஸ்களையும், கார்களையும் நிறுத்த நிறைய இடம். தவிர ஸூவனீர்கள் எனப்படும் நினைவுப் பொருட்கள் விற்பனை செய்யும் கடைகளும் நிறைய. நான் முதலில் வாங்கியது, கைவிரல்களைப் பாதுகாத்துக் கொள்ள உல்லன் கையுறை! (அதற்குப் பிறகுதான் சின்னதாக சீனப் பெருஞ்சுவரின் பொம்மை வாங்கினேன்!)

சைனாவில் பேரம் பேசத் தெரிந்திருக்க



வேண்டும். ஒரு பொருளுக்கு 30 யுவான் சொன்னால், நாம் 8 யுவான் கேட்டால்கூட கோபித்துக் கொள்ளுவதில்லை. அதே சிரிப்புத்தான். நம்மூராயிருந்தால் 'வாங்கற மூஞ்சியப் பாரு', 'சாவுகிராக்கி' போன்ற ஆசிகள் நிறையவே கிடைக்கும். 'பார்கெய்னிங் டெக்னிக்' என்று ஓட்டலிலேயே, நகரின் 'மேப்'பைக் கொடுக்கும்போது, அதில் அச்சிடப் பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

'கொஞ்சம் கொஞ்சமாக விலையை உயர்த்துங்கள்.

'அப்படியும் விலை அதிகம் என்று பட்டால், நகர்வது போல் பாசாங்கு பண்ணுங்கள்.

'விற்கிறவர் உங்களைக் கூப்பிட்டு, நீங்கள் கொடுக்கிற

# போதாதா?

விலைக்கே பொருளை விற்க முன் வருவார்.'

ஒரு ஜோக் உண்டு. 'கல்கத்தாவில் எல்லாவற்றுக்கும் இரட்டை விலை சொல்லுவார்கள். 50 ரூபாய் என்றால் 25 ரூபாய்க்குக் கேட்க வேண்டும்' என்றான் ஒரு நண்பன். இவன் கடைக்காரனிடம் 60 ரூக்கு 30 ரூ சொல்லி, அவன் 30 ரூ என்றதும் இவன் 15 ரூ என்று சொல்லி பேரம் ஒரு ரூபாயில் முடிய, கடைசியில் கடைக்காரருக்குக் கோபம் வந்து, 'ஃப்ரீயாக எடுத்துக்கொண்டு தொலை' என்று சொல்ல, இவன், 'அப்படீன்னா இரண்டாகக் கொடு!' என்றானாம்...

ஓட்டலுக்குத் திரும்ப வந்த உடனேயே மறுநாள் சுற்றுலாவுக்கான டிக்கட்டை 325 யுவான் கொடுத்து வாங்கி வைத்துவிட்டேன். "காலை எட்டரை மணிக்கு வேனில் வந்து பிக்அப் செய்து கொள்ளுவார்கள்" என்றார் டிராவல் டெஸ்க் சீனர்.

தடை செய்யப்பட்ட நகரம் (Forbidden city), டெம்பிள் அஃப் ஹெவன், சம்மர் பாலஸ். இடையே லஞ்ச். ஷாப்பிங்.

பெய்ஜிங்கில் இருக்கிற முக்கியமான இடங்களைப் பார்க்க வேண்டும் என்றால், மூன்றுநாள் போதாது; முப்பது நாள் வேண்டும்.

25 மீட்டர் உயர மைத்ரேய புத்தர் சிலை இருக்கும் யாங்ஹி லாமாஸெரி; சீனாவிலுள்ள அத்தனை வகையான மணிகளும் (6000 வருடத்துக்கு முந்தைய பீங்கான் மணிகளிலிருந்து, மிங் டைனாஸ்ட்டியில், 1403 முதல் 1424 வரை ஆண்ட யாங்கின் சக்ரவர்த்தியின்

சாருகேசி







காலத்தில் உருவாக்கப்பட்ட 7 மீட்டர் உயர மணி வரை) வைத்திருக்கும் பெல் டெம்பிள், வெள்ளை பகோடா டெம்பிள், தூங்கும் புத்தர் டெம்பிள் என்று சுமார் ஒரு டஜன் வழிபாட்டு ஸ்தலங்கள். எத்னிக் கல்ச்சர் பார்க், அம்யூஸ்மென்ட் பார்க், வேர்ல்டு பார்க் என்று பூங்காக்கள் ஒரு டஜன் தேறும். நேச்சுரல் ஹிஸ்டரி மியூசியம், ரெவல்யூஷனரி ஹிஸ்டரி மியூசியம், சைனீஸ் ஹிஸ்டரி மியூசியம் என்று சுமார் 120 (ஆம், பத்து டஜன்) மியூசியங்கள்! ஆபரா, பப்பெட் ஷோ, அக்ரபேட்டிக்ஸ், ஸிம்ஃபனி, பாலே, ப்ளே, நேஷனல் லைப்ரரி அஃப் சைனா என்று இன்னொரு டஜன்.

**கா**லை எட்டரை மணி என்று சொல்லி, எட்டு மணிக்கே ஹோட்டல் அறை டெலிபோனில் அழைப்பு விடுத்துவிட்டார் கைடு.

அவசர அவசரமாக பனியன், ஷர்ட், ஸ்வெட்டர் – 1, ஸ்வெட்டர் – 2, ஸ்வெட்டர்-3 என்று கவசம் மாதிரி டிரஸ் பண்ணிக்கொண்டு, உல்லன் சாக்ஸ், காட்டன் சாக்ஸ் என்று கால்களைக் கவனித்துக்கொண்டு, க்ளவுஸ் அணிந்து கைவிரல்களைப் பாதுகாத்துக் கொண்டு வேனில் உட்கார்ந்தபோது, என்னைத் தவிர இன்னும் ஒரு சீனத் தம்பதியும் (ஹனிமூன் கப்பிளாம்!), மூன்று கொரிய அதிகாரிகளும், ஓர் அமெரிக்க பைலட்டும் 'ஹலோ' சொன்னார்கள். 'சௌக்கியமா?' என்று கேட்பது போல, சீன மொழியில் ''நீ ஹாவ்'' என்று சொல்லிவிட்டால் அப்படியே மகிழ்ந்து போய்விடுகிறார்கள். 'தாங்க்ஸ்'க்கு 'ஷெஷ.'

“'சௌக்கியமா?' என்று கேட்பது போல, சீன மொழியில் ''நீ ஹாவ்'' என்று சொல்லி விட்டால் அப்படியே மகிழ்ந்து போய் விடுகிறார்கள். 'தாங்க்ஸ்'க்கு 'ஷெஷ.'”

ஃபர்பிடன் ஸிடி வளாகத்துக்கு வெளியே டூரிஸ்ட் பஸ்களும், வேன்களும், கார்களும் நிறைந்து வழிந்தன. ஆயிரக்கணக்கான டூரிஸ்ட்டுகள்! அமெரிக்கர்களும், ஜப்பானியர்களும், கொரியர்களும் 70 சதவிகிதம் இருந்தால், வெளிமாநில சீனர்கள் 30 சதவிகிதம் இருப்பார்கள்.

மிங் வம்சத்தாரால் நிர்மாணிக்கப்பட்ட கட்டடங்கள். பத்து லட்சம் தொழிலாளர்களும், ஒரு லட்சம் கைவினைக் கலைஞர்களும் 1420ல் கட்டி முடித்த பிரும்மாண்ட வளாகம். முதல்முறை தீப்பிடித்து அழிந்த பிறகும் இரண்டாம் முறை மறுபடி நிர்மாணித்தார்களாம். 183 ஏக்கர் பரப்பளவில் அமைந்த ஃபர்பிடன் ஸிடியில், தேசிய ராணுவத்தினர் தைவானுக்குக் கடத்திக் கொண்டு போன சின்னங்கள் போக, மீதி மட்டுமே இருக்கின்றன.

டெம்பிள் அஃப் ஹெவன் இன்னொரு பிரும்மாண்ட வளாகம். 267 ஹெக்டேர் பரப்பில், சீன சக்ரவர்த்திகள் நிறைய விளைச்சலுக்கும், செழிப்புக்கும் பிரார்த்தனை செய்து பலி கொடுக்கும் சந்நிதிகள். பூமிக் கடவுளுக்கு, நீர் தெய்வத்துக்கு, போர்க் கடவுளுக்கு எல்லாம் பிரார்த்தனை செய்து வழிபடும் சந்நிதிகள். இவற்றை எல்லாம் முறையாகச் செய்து சொர்க்கத்தை வழிபட்டால்தான் தாங்கள் தடைகள் ஏதும் இல்லாமல் ஆட்சி நடத்த முடியும் என்று அந்த அரசர்கள் அன்று நம்பினார்கள்.

'சம்மர் பாலஸ்' இருப்பது குன்மிங் ஏரிக்கரையில். பெய்ஜிங்கின் வெயில் கால உக்கிரத்தைத் தாங்கிக் கொள்ள இயலாமல், சக்கரவர்த்திகள் இங்கே தங்கியிருப்பார்களாம். 18ஆம் நூற்றாண்டில் இது கவனிப்பாரற்றுப் போய், 19ஆம் நூற்றாண்டில் இருந்த சக்ரவர்த்தினி அரசாங்க கஜானாவிலிருந்து பணத்தை வாரி யிறைத்து, முதலில் எப்படி இருந்ததோ அதேபோல உருவாக்கினாராம்.

குன்மிங் ஏரியை ஆழப்படுத்தியதில் கிடைத்த மண்ணை வைத்தே பக்கத்தில் 'லாஞ்சிவிட்டி ஹில்' உருவாக்கியிருக்கிறார்கள். அதில் புத்த விகாரங்கள் நிறைய

அமைந்திருக்கின்றன. ஏரி அருகே 'நீண்ட தாழ்வாரம்' கட்டி, அதன் கூரையிலும், தூண்களிலும் சீன ஓவியங்களைத் தீட்டித் தள்ளியிருக்கிறார்கள்! இந்த 'லாங் காரிடார்' உலகிலேயே பெயின்டிங்குகள் நிறைந்த மிக நீண்ட தாழ்வாரம் என்ற வகையில் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கிறது.

**ல**ஞ்ச்சின்போது பழையபடி அரிசிச் சோறும், வேக வைத்த காரட்டும், உருளைக் கிழங்குமாக ஒரு புதிய கலவை. இரண்டு ஆப்பிள்கள் வேறு!

ஷாப்பிங்குக்காக 'ஃப்ரண்ட்ஷிப் ஸ்டோர்'க்கு அழைத்துச் சென்றார் கைடு.

பீங்கான் பாண்ட ஓவியங்கள், ஆபரணங்கள், முத்துக்கள் என்று ஒரு புறம். வகை வகையான கம்பளங்கள் இன்னொரு புறம். கைவினைப் பொருட்கள் இன்னதுதான் என்றில்லை. வாங்கத் தூண்டுகிற வகைகள் அத்தனையும்!

**'நா**ம் இப்போது போக விருப்பது சீன மருத்துவமனை!'' என்று கைடு சொன்னதும், யாருக்கு உடம்பு சரியில்லை என்று ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டோம்.

''இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஸாங்ஸோங் ஜிங் என்ற மருத்துவர் கண்டுபிடித்த சீன வைத்தியமுறையை இங்கே கடைபிடிக்கிறார்கள். சைனா அகடமி அஃப் டிரெடிஷனல் சைனீஸ் மெடிசின் நடத்தும் மிகப் பெரிய மருத்துவமனை. டோங்ரென் டாங் பார்மசியும், க்ளினிக்கும் அதிலேயே இருக்கிறது'' என்றார் கைடு.

உள்ளே நுழைந்ததும் ஒரு தனி அறையில் எங்களை வரவேற்று உட்காரச் சொன்னார் டாக்டர் ஷூ ரிஜியான்.

ஒரு ஸிஸ்டர் ஓடோடிப் போய், இரண்டு கைகளை மட்டும் வைத்துக்கொள்கிற அளவுக்குச் சிறியதான தலையணை மாதிரி ஒன்று கொண்டு வந்தார்.

''கூப்பிடு புரொபசரை!'' என்றார் டாக்டர்.

ஸிஸ்டர் மறுபடி ஓடிப் போய் புரொபசரை அழைத்து வந்தார்.

என்னுடைய முறை வந்ததும் இரண்டு கைகளையும் நீட்டச் சொன்னார் புரொபசர். நீட்டியவுடன் ஒரே சமயத்தில் இரண்டு நாடிகளையும் பிடித்துப் பார்த்தார்.

'ஜி ஜி டான்', 'மிஸ் மு பாவ்' கான் வான் என்று இருவரும் கடகட வென்று வார்த்தைகளைப் பரிமாறிக் கொண்டார்கள். பிறகு புரொபசர் முகத்தை சீரியஸாக வைத்துக்கொண்டு 'பின் கான் ஸிஃபெங் ஜி ஆன்' என்று டாக்டரைப் பார்த்துவிட்டு, தமிழ் சினிமா/நாடக டாக்டர் மாதிரி என் நாடியைப் பரிசோதித்தவர் முகத்தில் ஒருவித சோகத்தை வரவழைத்துக் கொண்டு, என் இரண்டு கைகளையும் விட்டு விட்டார்!

> **“டாக்டர் மாதிரி என் நாடியைப் பரிசோதித்தவர் முகத்தில் ஒருவித சோகத்தை வரவழைத்துக் கொண்டு, என் இரண்டு கைகளையும் விட்டு விட்டார்!”**

ஏதோ சீரியஸ் விஷயம் என்று அவர்கள் பேசிய தோரணையிலிருந்து தெரிந்தது.

நாடித் துடிப்பே இல்லை என்கிறாரா?

சீனப் பெருஞ்சுவரில் ஏறி இறங்கியது தப்போ?

''உங்களுக்கு ஹைப்பர் டென்ஷன் என்கிறார் புரொபசர்''

"அவ்வளவுதானே?"

''ஹைபர்லிபீமியாவும் இருக்கிறது."

"இருந்துவிட்டுப் போகட்டும்!"

''கொரோனரி ஆர்ட்டீரியோ - ஸ்க்ளரோசிஸ், செரிப்ரல் ஆர்ட்டீரியோ-ஸ்க்ளரோஸிஸ் ட்யூ டு ஷார்ட் சப்ளை. யுவர் ஹார்ட் இஸ் நாட் பம்ப்பிங் இனஃப் ப்ளட்...''

''இப்போதைக்கு இதயம் துடிக்கிறது, டாக்டர்!''

"இரத்த ஓட்டம் குறைந்து, மூளைக்குச் செல்லும் இரத்தம் தடைபட்டு பக்கவாதம் வந்து பாதிக்கப்படுவீர்கள்!"

(அடுத்த வாரம்)

# அழைக்கிறது அமெரிக்கா!

## கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

### குவிஸ் கூப்பன் — 12

1) முருகப் பெருமானின் கையிலுள்ள கொடியில் இடம்பெற்ற பறவை எது?

2) வான்கோழி 'தானும் அதுவாக' பாவிக்கிற பறவை...?

3) 'தமிழுக்கும் அமுதென்று பேர்' என்ற பாரதி தாசன் பாடல் இடம் பெற்ற திரைப்படத்தின் பெயர் (ஒரு பறவையின் பெயர் கொண்டது) என்ன?

4) அலகில் ஆலிவ் கிளையைச் சுமந்தபடி சமாதானத்தின் சின்னமாகக் கருதப்படும் பறவை எது?

5) அன்டார்டிக் பகுதியில் வாழும் இந்தப் பறவையின் பெயரில் ஒரு பிரபல ஆங்கில நூல் பிரசுரமும் உண்டு. அது எந்தப் பறவை?

6) சனீஸ்வரனின் வாகனம் எது?

**விடைகள்:**

1)......................................................

2)......................................................

3)......................................................

4)......................................................

5)......................................................

6)......................................................

### குவிஸ் போட்டி — 12

இந்த வாரக் கேள்விகள் முழுவதும் பறவைகள் பற்றியது. முந்தைய வாரங்களில் செய்ததைப் போலவே விடைகளை கூப்பனில் எழுதி மற்ற கூப்பன்களோடு பூட்டி வையுங்கள். இருபத்தி ஆறு வார இறுதியில் எல்லா கூப்பன்களையும் எங்களுக்கு அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான பதில் எழுதும் ஒரு நபருக்கு

**அமெரிக்கப் பயணம் பரிசு!**

**ஐரோப்பா பயணம் இரண்டாவது பரிசு!**

**மலேஷியா—சிங்கப்பூர் பயணம் மூன்றாவது பரிசு!**

இந்த மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.

ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி!







Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka